உ

# சுந்தர ராமாயணம்

## மாத பத்திரிகை.

பு. 1 ] ஈச்வர-ஸூ ஆடி-மீ [ ஸ. 1



ஆசிரியர்:
S. சுந்தரேச சாஸ்திரிகள்,
நேமத்தாம்பட்டி.
(செட்டிநாடு வழி.)

உ

॥ श्रीः ॥

# ॥ श्री सुन्दररामायणे उपोद्घातः ॥

अर्थानप्यमितान्महाऽर्घसहितानन्तर्दधानात्परं
विद्वद्विष्णुसहायतोऽधिगमितान्सौलभ्यमप्यन्वहम् ।
वल्मीकप्रभवोक्तरामचरितक्षीरार्णवाद्विस्तृतात्
संक्षिप्तानुदधार्ह्मश्रमजनप्रीत्यै महत्यै भृशं ॥ ॥ १ ॥

## முகவுரை.

பண்டிதர்களாகிற விஷ்ணுவின் சகாயத்தால் சுலபமும் விலை மிகுதியுமான அளவற்ற பொருள்களை தினந்தோறும் மிகவும் உள்ளே தரித்த வால்மீகி ராமாயணமாகிற திருப்பாற்கடலிலிருந்து சிரமமடையாது ஜனங்களுக்கு மிகுந்த சந்தோஷத்தின் பொருட்டு பொருள்களைச் சுருக்கி எடுத்தேன்.

सौख्यं कुर्वदपीदमाततामिति स्वीकर्तुमप्यक्षमाः
गन्तुं सत्सरणौ स्वजन्मसफलं कर्तुं द्रुतं दुष्पथात् ।
मुक्ता आदृतमत्प्रबंधमणयः पाठाच्च तस्य श्रुतेः
सर्वे प्राणिन ईड्यरामशरणास्तुष्यन्त्वितीशं भजे ॥ ॥२॥

வால்மீகி ராமாயணம் சுகத்தைக் கொடுப்பினும் விரிவாயிருப்பதால் அதைக்கைக்கொள்ள முடியாமலும் நல்வழியில் நடக்காமலும் தன் ஜன்மாவின் பயனைப்பெற முடியாத எல்லா ஜீவராசிகளும் சீக்கிரம் துர்மார்க்கத்திலிருந்து விலகி என்நூலை ஆதரித்து அதைப் படிப்பதாலும் கேட்பதாலும் துதிக்கத் தகுந்த இராமனைச் சரணமடைந்து சந்தோஷமடைய வேண்டும் என்று ஈசுவரனை சேவிக்கிறேன்.

இங்ஙனம்,

நூலாசிரியர்.

## श्रीसुन्दररामायणाभिमोदनपत्रिका ॥

भवदीय रामायणसंग्रहरूपग्रंथः मया दृष्टः । अतीव शोभनः व्युत्पित्सूनां बहुधा आवश्यक इति ज्ञायते, मुद्र्यतां ॥

### சுந்தரராமாயணாபிமோதனம்.

உம்முடைய ராமாயணசங்கிருகமென்ற கிரந்தத்தை நான் பார்த்தேன். மிகவும் அழகாயிருக்கிறது. படிக்க விரும்புவோர்களுக்கு பலவகையிலும் அவசியமென்று அறியப்பெற்றது. அச்சிடட்டும்.

(1)

गोकर्णाभिजनेन सुन्दरबुधा वाल्मीकिसंबोधित-
श्रीरामायणसंग्रहस्सुरचितो विद्वन्मनः कर्षति ।
बालानां सुखबोधकस्सुरुचिरोऽलंकारवृत्तादिभि-
स्सौशब्द्येन च कालिदासकवितासादृश्यमभ्यश्नुते ॥१॥

கோகர்ணக்ஷேத்திரத்திலிருக்கும் வித்வான் சுந்தரமியற்றிய வால்மீகி இராமாயண சங்கிருகமென்ற கிரந்தம் படிப்போர்களுக்கு சுகமாக அறிவைக்கொடுக்கும் அலங்காரங்கள் விருத்தங்கள் இவைகளால் அழகியது. நல்ல சப்தங்களால் காளிதாசனுடைய நூலுக்கு இணையாயிருக்கிறது. வித்வான்களின் மனதை வசம் செய்கிறது.

द्वैताद्वैतविशिष्टरूपसुमतत्रय्यन्तसंबोधक-
श्रीरंगार्यविपश्चितासु सुधियां शाणाश्मनेयं कृतिः ।
श्रीमन्नूतनसालदेशनृपतिश्रीराजगोपार्पित-
श्रीदानाधिकृतौ स्थितेन बहुधा संवीक्ष्य संमोदिता ॥२॥

த்வைதம் அத்வைதம் விசிஷ்டாத்வைதம் என்ற மும்மதங்களையுமறிந்த, கற்றறிந்தவர்களின் அறிவை உரைக்கும் சாணைக்கல் போன்ற, புதுக்கோட்டை சமஸ்தானத்தின் அரசரான ஸ்ரீராஜகோபால தொண்டமான் மன்னருடைய அரண்மனை தானாதிகாரத்திலி

ருக்கும் வித்வான் (வங்கிபுரம்) ஸ்ரீரங்காசார்யரால் வெகுவிதமாக பார்த்து இந்த கிரந்தம் அபிமோதனம் செய்யப்பெற்றது. [ 2 ]

इत्थं मतत्रयनिरूपकः दानाधिकारी विद्वान् काळि रङ्गाचार्यः (पुदुक्कोट्टै 4—2—36.)

(2)

श्रीगोकर्णनगरीवास्तव्यसुब्रह्मण्यघनपाठिनां तनूजेन सुन्दरेशशास्त्रिवर्येण प्रणीय आनीतं सुन्दररामायणाख्यग्रंथविशेषं हस्तलिखितं तत्र तत्र स्थालीपुलाकन्यायेन अद्राक्षं । अत्र च श्रीरामायणे प्रतिसर्गं प्रदर्शिताः कथांशाः प्रायेण संगृहीताः । प्रसिद्धानि च पदानि संघटितानि । मधुरा च सरणी हृदयंगमा च वर्तते। स्वप्रणेतुः पाणिनीये साहित्ये च विशेषनैपुण्यं प्रकटयत्ययं ग्रंथः। स्वद्रष्टॄणां साक्षाद्रामायणदर्शनजदृष्टादृष्टफलानि जनयेदित्यत्र न कापि संशीतिः ।

திருக்கோகாணத்தில் வசித்த சுப்பிரமணிய கனபாடிகளின் புத்திரனான சுந்தரேச சாஸ்திரிகள் இயற்றிக் காண்பித்த சுந்தர ராமாயணம் என்ற நூலை கையெழுத்தில் அங்கங்கே (ஒரு பானைக்கு ஒரு சோறு பதம் என்ற நியாயத்தால்) பார்த்தேன். இதில் சர்க்கந்தோறும் கதைகள் விடாமல் சுருக்கி சொல்லப்பெற்றன. வார்த்தைகளும் பிரசித்தமானவை. நடையும் இன்பமாகவும் மனதிற்கு போதகமாகவும் இருக்கிறது. இந்த கிரந்தம் தன்னை இயற்றியவருடைய இலக்கணத்திலும் அலங்கார சாஸ்திரத்திலும் உள்ள மிகுந்த அறிவை வெளியிடுகிறது. இது தன்னைப் பாராயணம் செய்பவர்களுக்கு இராமாயண பாராயணத்தினால் உண்டான இம்மை. மறுமைப் பயன்களை உண்டுபண்ணும் என்பதில் கொஞ்சமும் ஐயமில்லை.

N. இராகவசாஸ்திரிகள், ஹெட்மாஸ்டர்.
மஹாராஜா வேதசாஸ்திர பாடசாலை, புதுக்கோட்டை.

श्रीगुरुचरणारविन्दाभ्यां नमः

शुभमस्तुनित्यं ।

ओन्नमश्शिवाभ्यां ।

# श्रीसुन्दररामायणे बालकाण्डः प्रारभ्यते

सर्गः                                                                                    श्लोकः

वन्दे तं मदवारणेन्द्रवदनं मद्भागधेयाऽऽकृतिं
शुण्डादण्डसुचालनेन जगतां मायाऽन्तरायाऽऽमयान् ।
विद्राव्य प्रणतिप्रसन्नहृदयो योऽनुक्त एव स्वयं
रक्षत्यन्वहमात्मनोऽति बिरुदं वैद्येशपुत्राभिधं ॥ १ ॥

கணபதி துதி.

நமஸ்காரத்தினால் மனங்களித்துப் பிறர் சொல்லாமலே தண்டம் போன்ற துதிக்கையை நன்ருய் அசைப்பதால் ஜனங்களின் அஞ்ஞானம் இடையூறு என்னும் ரோகங்களை யகற்றி வைத்ய நாதனின் புத்திரன் என்னும் புகழைத் தினந்தோறும் காப்பாற்றிக் கொள்பவரும் என் பாக்கியத்தின் உருவம்போல் விளங்குபவரும் மதயானையின் முகம் பெற்றவருமான விநாயகக் கடவுளை நமஸ்கரிக்கிறேன்.

स्तौमि त्वां वचनेश्वरि त्रिभुवनास्तोकप्रमोदाऽऽवह-
प्रख्यातक्षणदाचरप्रशमनाऽमेयास्त्रवीर्याऽऽलयं ।
स्तोतुं वीरधुरन्धरं रघुवरं देवि प्रवृत्तोऽस्मि मां
जिह्वाविष्टरमास्थिताऽधिगमय प्राचेतसस्याऽऽशयं ॥२॥

## ஸரஸ்வதி துதி

ஏ வாகீசுவரி மூன்று உலகங்களுக்கும் அதிக சந்தோஷத்தைக் கொடுத்துப் பிரசித்தி யடைந்தவரும் அரக்கர்களை யழித்த அளவில்லாத அஸ்திர பலத்திற்கு இருப்பிடமானவரும் வீரசிகாமணியுமான ஸ்ரீராமனைத் தோத்தரிக்க முயலுகின்ற நான் உன்னைத் தோத்தரிக்கின்றேன். தாயே நீ என் நாவென்னும் ஆசனத்தில் அமர்ந்து வால்மீகியின் கருத்தை எனக்கு அறிவிக்கவேண்டும்.

वल्मीकापत्यगत्यन्तरमिह जगतां त्वां विना नेति जाने
क्षोणीपुत्रीशवृत्तामृतमतनुतनौ स्थातुमप्यप्रगल्भं ।
निर्गच्छत्स्वस्यवक्त्रात्स्वयमिव च बहिः प्रापितं येन भूमिं
मन्दप्रज्ञेषु लोकेष्वतिगुरुकृपया क्लेशराशिप्रशान्त्यै ॥३॥

## வால்மீகியின் துதி.

ஸ்ரீ சீதாகாந்தனுடைய திவ்விய சரித்திரமாகிய அமிர்தம் அதிகமாய்ப் பெருகி சரீரத்துள் அடங்காமல் தானாகவே தன்வாய்வழியாய் வெளியில் வந்ததுபோல் அறிவற்ற ஜனங்களிடத்தில் மிக்க கிருபை புரிந்து அவர்களது துன்பங்களைத் தீர்க்கவேண்டி ஸ்ரீ ராம சரித்திரமென்னும் அமிர்தத்தை பூமி முழுவதும் பரவ வைத்த ஏ வால்மீகி மகரிஷியே! உலகங்கள் உஜ்ஜீவிப்பதற்கு உம்மைவிட வேறுகதியில்லையென்று நிர்ணயிக்கிறேன்.

श्रीरामाङ्घ्रिष्ठचेतस्तपनसुतभयापारवाराशिशोष-
प्रावीण्यैकाधिवासप्रबलरघुवराऽऽग्नेयदिव्यास्त्रवीर्य ।
सूर्यात्संप्राप्य विद्यास्त्वरिततरगतेः प्राप्तभूयिष्ठकीर्ते
धीमन्नित्यं हनूमन्कुरु पदविनतं मां समर्थं कवित्वे ॥४॥

## ஆஞ்சநேயர் துதி

ஸ்ரீ ராமன் திருவடியில் மனதை வைத்தவரும் சுக்ரீவனது பயமாகிற கலையற்ற பெருங்கடலை வற்றவைப்பதில் திறமைபொருந்

திய பலமுள்ள ஸ்ரீ ராமனுடைய அக்கினியாஸ்திரத்தின் வலிமை பெற்றவரும் மிகவும் வேகத்துடன் செல்கின்ற சூரியனிடமிருந்து வித்தைகளைக் கற்று அதிக புகழ்பெற்றவரும் புத்திமானுமான ஏ அனுமானே! எப்பொழுதும் உன்பதத்தை வணங்கும் எனக்குக் கவிபாடுவதில் திறமைதரவேண்டும்.

श्रीमद्वाल्मीकिगीते रघुवरचरिते वाचकानां सुरद्रौ
यावान्सर्गस्तदुक्तं निखिलमपि मुदा संक्षिपन्तावतैव ।
श्लोकेनाहं प्रवृत्तो निगदितुमधुना स्वेष्टसिद्ध्यैमहान्तो
भूयासं संप्रसादं कुरुत मयि नते मत्कृतेर्वीक्षणेन ॥ ५ ॥

அவையடக்கம்.

வாசிப்பவர்க்குக் கற்பகவிருக்ஷம் போன்றதும் ஸ்ரீ வால்மீகியினல் இயற்றப்பெற்றதுமான ராமாயணத்தில் உள்ள சர்கங்கள் எத்தனையோ அத்தனையும் அத்தனை சுலோகங்களால் அப்பொருள்களுடன் சுருக்கிச்சொல்ல இப்பொழுது விரும்புகிறபடியால் பெரியோர்களே என்னூலை பார்வையிட்டு வணக்கமுள்ள என்னிடத்தில் மிகவும் கருணைபுரியவேண்டும்.

१ वेत्ति ब्रह्म गुरुं गतस्तदितरो नैवेति मत्वा श्रुतिं
कोन्वस्मिन्निति पृच्छतेऽथ मुनये वाल्मीकये नारदः ।
संक्षेपात्समुपादिशत्स्वयमपि प्रध्याय यद्वृत्तकं
स्वर्लोकैकगतं सुधाऽधिकरसं रामं भजे तं सदा ॥ ६ ॥

நூல்.

குருவை யடைந்தவன் பிரம்மத்தை யறிகிறுன் மற்றவன் அறிகிறதில்லை என்னும் சுருதியை நினைத்து எவன் குணவான் என்று வால்மீகி கேட்கும்பொழுது நாரதர் (பிரம்மத்தை யறியவிரும்பும் வால்மீகியின் வினவிற்கிசைந்தது ஸ்ரீ ராம சரிதமேயென்று) தானும் நிதானித்து சுவர்க்கத்தில் மாத்திரம் அறியப்பெற்றதும் அமிர்தத்தி

னும் சுவையுள்ளதுமான அவ்விராமசரித்ரத்தைச் சுருக்கமாய் அவ் வால்மீகிக்கு உபதேசித்தபடியால் அவ்விராமனையே எப்பொழுதும் வணங்குகிறேன்.

२ मध्येऽह्नस्तमसातटे विनिहतं व्याधेन वीक्ष्य प्रियं
क्रौञ्चद्वंद्व उपद्रुतां च तरुणीं वल्मीकजो व्याहरन् ।
ऐच्छत्कर्तुमवाप्तधीर्विधिगिरा तस्मान्निषादेति च
श्लोकं यच्चरितं सरावणवधं तं राममेवाऽऽश्रये ॥ ७ ॥

நடுப்பகலில் தமஸாநதிக்கரையிலிருக்கும் கிரௌஞ்ச தம்பதிக ளில் ஆண்பறவையை வேடன் அடிக்க பெண்பறவை துக்கிக்க அதைக் கண்ணுற்ற வால்மீகி வியசனித்து வேடா காமமோகிதங் களான பக்ஷிகளில் ஒன்றைக்கொன்றதனுல் நீ மேன்மையடைய மாட்டாய் என்று சொல்லிப் பிரமனது அருளால் நூலியற்றுந் தன்மைபெற்று எந்த ராமசரிதத்தை ராவண வதம் வரை செய்ய விரும்பினரோ அவ்விராமனைச் சரணமாக அடைகிறேன்.

३ हंसाऽऽरूढवरप्रसादविदितत्रैकालिकार्थव्रजो
वल्मीकप्रभवस्स्पृशन्जलमथ ध्यायन्गुरुं वाग्यतः ।
प्रागग्रं कुशमास्थितः प्रभविता राम त्वदीयं यथा
वृत्तं तद्भगवान्विवेद सकलं मामद्य संदर्शय ॥ ८ ॥

அன்னவாகனனுன பிரமன் திருவருளால் முக்காலத்தையுமு ணர்ந்த வால்மீகி முனிவர் ஆசமனஞ்செய்து கிழக்கு நுனியான தருப்பங்களில் மௌனமாக வீற்றிருந்து குருவைத் தியானித்த நடக்கப்போகிற ராமசரிதமெல்லாமுணர்ந்ததுபோல் ஏ ராமா! என க்கும் அதை இப்பொழுது அறிவிக்கவேண்டும்.

४ वाल्मीकिर्विरचय्य षड्रसयुतं काव्यं स रामायणं
तुष्टस्सभ्यकुशीलवौ कुशलवौ स्वग्राहयत्संमतौ ।
रथ्यायामभिवीक्ष्य गीतचरितौ भ्रातृन्वितो राघवः
प्रापय्य स्वसमीपमात्तसदनो वक्तुं न्ययुङ्क्ताथ तौ ॥ ९ ॥

வால்மீகி (ச்ருங்காரம், சோகம், ஹாஸ்யம், வீரம், பயானகம், ரௌத்ரம்) இவ்வாறு ரஸம் பொருந்திய இராமாயண காவியம் இயற்றி ஸந்தோஷத்துடன் சபைக்குத் தக்கபடி பாடும் திறமையோடு தனக்கு இசைந்தவர்களான குசலவர்களுக்கு உபதேசித்தார். வீதிகளில் தன் சரித்திரம் பாடிக்கொண்டிருக்கும் அவ்விருவரையும் இராமன் பார்த்துத் தம்பிகளுடன் அழைத்துவந்து தன் ஸமீபத்திலிருத்திச் சரித்திரத்தைச் சொல்லும்படி உத்தரவுசெய்தார்.

௫ आख्यानं शृणुताऽनसूयमनसा वक्ष्यावहे वोऽखिलं
तौ बालौ सदसि स्थितानवहितानित्यूचतुः प्रोच्चकैः ।
देशे कोसल नाम्नि सत्तमगुणा चासीदयोध्येति पूः
भूपः पङ्क्तिरथोऽतिविश्रुतबलस्तस्यामवात्सीत्सुखी ॥ १० ॥

புண்ணிய சரித்திரம் முழுவதும் மனதில் களங்கமில்லாமல் கேட்கவேண்டும், நாங்கள் சொல்லுகிறோம் என்று அச்சிறுவர்கள் ஸாவதானமாய்ச் சபையிலிருப்பவர்களை நோக்கி உரத்த சப்தமாய்க் கதைசொல்லத் தொடங்கினார்கள். கோசலமென்னும் தேசத்தில் உத்தமகுணம் பெற்ற அயோத்தி என்கிற நகரமிருந்தது. பலத்தில் பிரசித்தி பெற்ற தசரதனென்னும் அரசன் அதில் சுகமாய் வசித்து வந்தான்.

௬ तथाऽशासील्लोकान्दशरथनृपो भूर्भगवती
मती धर्मान्नाणुच्यवनमुपगच्छेत्क्षणमपि ।
जनास्तत्तद्वर्णाश्रमनियमधर्मात्श्रुतिकृतात्
यथा त्रस्ता दोषाः खलविरचिता वाचकपदात् ॥ ११ ॥

தசரதன் செங்கோற்சிறப்பு.

பதிவிரதா தர்மத்திலிருந்து பூமிதேவியும், வேதோக்தமான தங்களுக்குரிய வர்ணாச்ரம தர்மங்களிலிருந்து ஜனங்களும், தன் வாசகமான பதத்திலிருந்து துஷ்டர்கள் செய்யும் தோஷங்களும் பயந்துகொண்டு தங்களது ஸ்தானத்திலிருந்து நழுவாதிருக்கும்படி தசரதன் அரசுபுரிந்தான்.

७ तस्याऽऽसन्नयपारदृश्वमतयो धृष्टयाद्यो मन्त्रिणः
ऋत्विक्सन् स वसिष्ठ आहितहितोऽभूद्वामदेवस्तथा ।
आत्माऽसून्प्रभवेददाद्भिरमितप्रख्यातवीर्यैर्बलैः
युक्तो भूमिमपालयद्दशरथो देवेश्वरो द्यामिव ॥ १२ ॥

நீதி சாஸ்திரங்களின் கரைகண்ட புத்திமான்களான திருஷ்டி ஜயந்த விஜய ஸித்தார்த்த அர்த்தசாதக அசோக மந்திரபால ஸுமந்திர இந்த மந்திரிகளும் இதஞ்செய்யும் ருத்விக்குகளான வஸிஷ்ட வாம தேவாதி மஹரிஷிகளும் அத் தசரதனிடமிருந்தனர். தன் உயிரை யும் யஜமானனுக்காக யுத்தத்தில் தத்தம் செய்யும் பலிஷ்டர்களான ரத கஜ துரகபதாதிகளாகிற நான்குவித சைன்யங்களுடன் கூடிய வனாய் அமராவதியில் இந்திரன்போல் பூமியில் அரசுபுரிந்தான்.

८ पुत्रार्थी हयमेधतो हरिमसौ यष्टुं विनिश्चित्य तत्
संभारान्गुरुशासनेन झटिति प्राप्तुं नियुंजन्स्वयं ।
स्वामात्यान् चतुरान्समीहितकृतौ गत्वाऽवरोधं नृपः
दीक्षां वेशयतिस्म जीवितसमाः पत्नीर्वदन्स्वाऽऽशयं ॥ १३ ॥

புத்திரனை விரும்பும் அவ்வரசன் குருவின் உத்தரவினால் ஹரி ப்ரீதிகரமான அசுவமேதயாகம் செய்ய நிச்சயித்து அதற்குரிய சாதனங்களை விரைவில் சம்பாதிக்கும்படி தன் விருப்பம் போல் செய்யும் திறமைபொருந்திய மந்திரிகளுக்கு உத்தரவளித்து தான் அந்தப் புரஞ்சென்று உயிர்போன்ற மனைவிகளிடம் தன் விருப்பத் தைத்தெரிவித்து யாகதீக்ஷைபெறச் செய்தான்.

९ अङ्गेशो व्यपनतेमात्मविषये दुर्भिक्षयोगं भवं
स्वराज्यं च विभण्डकाऽऽत्मजमुनिं कन्यांप्रदायाऽऽनयत् ।
राजन् ते सविधास्यतीतितनयान्ब्रह्मात्मजेनोदितं
सूतः प्राह सुमंत्रधीर्दशरथं काले पुराविद्वचः ॥ १४ ॥

அங்கதேசாதிபதியான உரோமபாதமகாராஜன் தன் தேசத்திலுண்டான துர்பிக்ஷத்தை விலக்கும்பொருட்டுத் தன் மகளை விபண்டகரின் புத்திரரான ரிஷியசிருங்கமுனிவருக்குக் கொடுத்து அவரைத் தன் இராச்சியத்திற்கு அழைத்துவந்தான். ஏ அரசே! அம்முனிவர் அருளால் தங்களுக்குப் புத்திரர்கள் உண்டாகப் போகிறார்கள் என்று பிரம்மபுத்திரரான சனத்குமாரர் சொன்னதை முன் சரித்திரமறிந்த சுமந்திரன் அச்சமயம் தசரதரிடம் சொன்னான்.

१० सुस्वादूनि सुमोदकानि सुफलान्यादाय वाराङ्गनाः
गत्वा वीक्ष्य च ऋष्यशृंगमथ तं प्राश्य तानि प्रियाः ।
संत्रस्तास्तु विभण्डकाद्गृहमथाऽऽनिन्युस्सुतां संददत्
तेनामोदत रोमपादनृपतिश्चेत्याह सूतो नृपं ॥ १५ ॥

(அவ்வரலாற்றைப்பறிய விரும்புகிறேனென்று, தசரதன் கேட்க,) அதிக ருசியுள்ள மோதகங்களையும் பழங்களையுமெடுத்துக்கொண்டு சென்று, பிரியத்துடன், தாசிகள், இரிஷிய சிருங்கரைப்பார்த்து, அவைகளை உண்பித்து விபண்டகரிடத்தில் பயத்துடன், அவரை அரண்மனைக்கு அழைத்துவந்தார்கள். உரோமபாதமகாராஜன், தன் மகளை, இரிஷிய சிருங்கருக்குக் கொடுத்து அவருடன் சந்தோஷமடைந்தான் என்று சுமந்திரன் கூறினான்.

११ श्रुत्वासूतवचस्ततो दशरथो गत्वाऽङ्गराज्यं स्वयं
स्तुत्वा च प्रियरोमपादनृपतिं नत्वेष्टदैवं परं ।
कृत्वा शोभितमात्मनः पुरमिदं नीत्वा सशान्तं मुनिं
स्थित्वा स्त्रीभवने मुहुस्सुचरितं स्मृत्वा तुतोषाऽऽत्मनि ॥१६॥

சுமந்திரன் கூறியதை தசரதர் கேட்டு, பிறகு, தானே அங்கதேசஞ்சென்று, உரோமபாதமகாராஜனைத் துதித்து, தன் இஷ்ட தெய்வத்தை வணங்கி, தன் நகரத்தை மிகவும் அலங்கரித்துச் சாந்தையுடன் ரிஷியசிருங்கரை அழைத்துவந்து, அந்தப்புரஞ்சென்று அங்கிருந்து தன்பெருமையை அடிக்கடி நினைத்து மனதிற் சந்தோஷித்தான்.

१२ पुत्रीयन्स हयक्रतुरग्निसदने वृण्वन्वसिष्ठाऽऽदिमान्
यज्ञार्थं तुरगस्य मोचनविधौ संभारसंपादने ।
सन्दिश्यावहितान्समर्थसचिवान्काले शुभे स्वेष्टदे
विघ्नाग्रोद्गमिवावरोधमधिकप्रीतिप्रदं प्राविशत् ॥ १७ ॥

புத்திரனை விரும்பும், தசரதன், அசுவமேதயாகம் செய்ய விரும்பி, அக்கினிசாலையில், யாகத்தின் பொருட்டு, வசிஷ்டாதிகளை நியமித்து, பூப்பிரதக்ஷிணத்திற்குக் குதிரையை அனுப்பவும், யாகோபகரணங்களைச் சேகரிக்கவும், சாவதானமாய்க் காரியஞ்செய்யவும், மந்திரிகளுக்கு உத்தரவிட்டுத் தன் விருப்பத்திற்கிசைந்த, சுப முகூர்த்தத்தில், இடையூறுகளைத் தடுத்து, மனைவியரை அழைத்து வர, அந்தப்புறஞ்சென்றான்.

१३ भूपं तं गुरुरश्वमेधयजनं संप्रार्थितः कारयन्
तक्षाद्यैस्तदुपस्करांश्च कलयन्सूतेन दूतैर्नृपान् ।
संप्रत्यागमयन्क्रतुं निकृत्कृतेस्संबाधतः पालयन्
वेश्माग्रेस्समवेशयत्सवनितं दीक्षामथाधारयत् ॥ १८ ॥

குருவான வசிஷ்டர், அரசனால் வேண்டப்பெற்று. அவ்வரசனுக்கு அசுவமேதயாகம் செய்விக்கத் துணிந்து, தச்சன் முதலியவர்களால் அதற்குரிய சாதனங்களைச் செய்வித்துத், தூதர்கள் மூலம் அரசர்களைத் தன்னிடம் வரும்படி சுமந்திரரால் அறிவித்து, இராக்ஷஸர்களின் துன்பமில்லாமல் வேள்வியைக்காத்துக்கொண்டு அரசனை மனைவிகளுடன் யாகசாலைக்கழைத்துவந்து யாகதீக்ஷை பெறச்செய்தான்.

१४ साम्राज्याङ्कनमश्वमेधहवनं पापापहं पार्थिवः
चक्रे कोसलवल्लभो द्रुहिणवद्यत्वर्त्विजां विप्लवः ।
नासीत्कर्मसु किंचिदप्यसुभृतां संतर्पणेवाऽर्थिनां
वांछापूर्तिविधौ स्वयाजकततेस्संमाननेऽस्य प्रभोः ॥ १९ ॥

கோசலாதிபதியாகிய தசரதன் யாககாரியங்களில் ரித்விக்கு களுக்கும், சந்தர்ப்பணையில் ஜீவகோடிகளுக்கும், விரும்பினதைப் பெறுவதில் யாசகர்களுக்கும், வெகுமானம் பெறுவதில் வைதிகர் களுக்கும், சிறிதும் குறைவின்றித் தன் போாசிற்குத் தக்கபடி, பாபந்தீர்க்கும் அசுவமேதயாகத்தை, காஞ்சிபுரத்தில் பிரமன் யாகஞ் செய்ததுபோல், செய்து முடித்தார்.

१५ साकेतेश्वरपुत्रदेष्टिहवने शान्तेशसंपादिते
भागग्राहिदिवौकसस्स्वशरणाल्लंकेश्वरोपद्रुतान् ।
वैकुण्ठाधिपतिर्भयात्शमयितुं कुर्वन् चतुर्धा तनुं
पुत्रीयत्फलदो जगज्जनयिता मेने स्वतातं नृपं ॥ २० ॥

ரிஷியசிருங்கர் செய்துவைக்கும் அயோத்தி மன்னரின் புத் திரகாம வேள்வியில் அவிர்பாகம் பெறவந்தவர்களும், இராவண னால் துன்பமடைந்து தன்னிடம் சரணம் புகுந்தவர்களுமான தேவர்களைப் பயத்திலிருந்து காப்பாற்ற புத்திரனை விரும்புவோர் களுக்குப் பயனளிக்கும், சகல உலகத்திற்கும் பிதாவான வைகுண் டாதிபதி, தன்னுருவை நான்கு கூறுக்கித் தசரதரைத் தன்பிதா வாகக்கொள்ளத் திருவுளமிசைந்தார்.

१६ पौलस्त्यं नरवध्यमाशुमनुजो भूत्वा निहन्यामिति
प्रीत्याऽऽश्रुत्य तिरोहिते मुरहरे वैश्वानरेणार्पितं ।
हैमामत्रगपायसं तनयदं गृह्णन्नृपः प्राशयत्
पत्नीस्तिस्र उपेत्यभोगविहितदानीत्या विभज्यैव तत् ॥ २१ ॥

மனிதனால், மாணமடையும் வரம்பெற்ற இராவணனை சீக்கிரம் மனிதனாய் பிறந்து வதைக்கிறேன் என்று அன்புடன் சபதஞ் செய்த முராரி மறையவே, அக்கினிதேவன் தங்கப்பாத்திரத் திற்கொடுத்த புத்திரப் பிரதமான பாயசத்தை அரசன் பெற்றுத் தன்வம்சவிருத்திக்குரிய (கௌசல்யை, சுமித்திரை, கைகேயி) இம் மூன்று மனைவியரிடமுஞ் சென்று நியாயப்படி; $\frac{1}{2}$, $\frac{3}{8}$, $\frac{1}{8}$ விதம், பங்கிட்டுக்கொடுத்துப் புசிப்பித்தார்.

१७ देवा ब्रह्मनियोगतो भगवतो मर्त्यस्ययावत्सतः
साहाय्याजनयन्सुतान्स्वसदृशान्वीर्येगिरीन्द्राऽऽकृतीन् ।
गन्धर्वीषु च वानरीषु विविधस्त्रीष्वप्रमेयान्धियां
शार्दूलानपि शासतो गिरिवनाऽऽदासान्वृता तैः क्षितिः ॥

மனிதனாய் அவதரிக்கும் பகவானுக்கு உதவிசெய்யும்பொருட்டுத் தேவர்கள் பிரமனின் உத்திரவால் பலத்தில் தம்மைப்போன்றவர்களும் உருவத்தில் பருவதம் போன்றவர்களும் புத்தியில் நிகரற்றவரும் புலி முதலியவைகளை அடக்கிக் காடு மலைகளில் வசிப்பவருமான புத்திரர்களைக் கந்தர்வஸ்திரீகளிடத்திலும் வானரஸ்திரீகளிடத்திலும் பலஸ்திரீகளிடத்திலும் சிருஷ்டித்தார்கள். அவ்வானரக் கூட்டங்கள் பூமி முழுமையும் வியாபித்தன.

१८ निर्वर्त्याथ क्रतुमाप्तलोकमथस प्रापय्यतत्तत्पदं
पत्नीरेत्य कृषीवलोऽम्बुदमिव प्राप्नोन्मुदं गर्भिणीः ।
रामंकोसलजा शुभेऽह्वयजनयल्लक्ष्मीपतेरंशजं
कैकेयीभरतं च लक्ष्मणरिपुघ्नौसासुमित्रा ततः ॥ २३ ॥

## திருவவதாரம்.

அரசன் வேள்வியை முடித்து இஷ்ட ஜனங்களை இருப்பிடமனுப்பிப் பயிர் செய்பவன் மேகத்தைப் பார்த்துச் சந்தோஷிப்பது போல் கருப்பந்தரித்த மனைவியரைப் பார்த்து தசரதன் சந்தோஷித்தான். சுபதினத்தில் கௌசலை இராமனையும் கைகேயி, பரதனையும் சுமித்திரை லக்ஷ்மண சத்துருக்கினர்களையும் ஸ்ரீயப்பதியின் அம்சமாகப் பெற்றெடுத்தனர்.

पुत्रान्तान्चतुरो धनुस्सुचतुरान्प्राप्यप्रहृष्टोरहो
भूमीशस्सविचिन्तयन्ससाचिवस्तद्दारकर्मैकदा ।
विश्वामित्रमुपागतं सतपसं संपूजयन्स्वागतं
पृष्ट्वाऽभ्यागतिकारणंतवमुने कुर्यामितिप्रार्थयत् ॥ २४ ॥

வில்வித்தையில் நிபுணர்களான நான்கு புத்திரர்களைப்பெற்ற அரசன் சந்தோஷித்து மந்திரிகளுடன் ஒரு நாள் புத்திரர்களுக்குத் திருமணஞ்செய்விக்க இரகசியமாய் ஆலோசிக்கும்பொழுது வந்த விசுவாமித்திர முனிவரைப் பூஜித்து நல்வரவுகூறி தேவரீர் வந்த காரணமென்ன? அதைச் செய்விப்பேன் என்று விண்ணப்பித்தான்.

१९ श्रुत्वा राजवचोऽब्रवीन्मुनिरिदं कंचित्क्रतुं भूपते
यज्ञशप्रियवर्धनं स्वकरवं पापाऽऽकृतीभीषणौ ।
मारीचश्चसुबाहुरप्रतिभयौ तद्राक्षसेशौहतः
तौ हन्तुं दशरात्रमद्ययजते मे देहि धीरंसुतं ॥ ॥ २५ ॥

தசரதன் கூறியதைக்கேட்ட விஸ்வாமித்திரர், "அரசே! யக்ஞேஸ்வரன் ப்ரீதியடைய ஒரு வேள்வியைச் செய்தேன். அதை பாபமே உருக்கொண்டதுபோல் பயங்கரமான மாரீசன் ஸுபாஹு என்றும் அரக்கர்கள் அழிக்கிறார்கள். அவர்களை அழிப்பதற்கு தைரியம்பெற்ற தங்கள் புத்திரனை என்னுடன் யாகத்திற்கு அனுப் வேண்டு"மென்று ஆக்ஞாபித்தனர்.

२० रक्षोराजमवार्यवीर्य विहतक्रत्वादिकृत्यावलिं
तत्प्रेष्यौ हृदि ताटकेयदनुजौ कुर्वन् वियोगासहः ।
भीत्याऽऽर्तश्च ननेतुमर्हसि सुतं मां वा न मे सैनिकान्
राजेति प्रवदन्मुनिं कुशिकजं प्राकोपयत्कोपनं ॥ २६ ॥

அடக்கமுடியாத பலத்தினால் யாகம் முதலிய நற்காரியங்களை அழித்துவரும் இராவணனையும் அவனது ஏவலாளிகளான தாடக புத்திரர்களையும் மனதில் நினைத்துப் பயந்த அரசன் புத்திரனைவிட்டுப் பிரியமனமில்லாதவராய்ப் புத்திரனும் நானும் என் சைனியங்களும் வரமுடியாதென்று சொல்லி கோபியாகிய விசுவாமித்திரரை மிகவும் கோபிக்கச்செய்தார்.

२१ पुत्रप्रेमजितं प्रतिश्रुतिकृतौ मुग्धंनृपंकोपनं
विश्वामित्रमवेक्ष्यभानुकुलजश्रेयोविधायीगुरुः ।
राजन् त्वत्सुतमङ्गलायविदुरो नानाऽस्त्रशस्त्रावलेः
त्वामेषोऽर्थयते प्रदेहि तनयं द्रागित्यशात्शासकं ॥ २७ ॥

அரசன் புத்திரனிடத்தில் அன்புமிகுந்து தன் சபதத்தைக்கூட கைவிடவும் விசுவாமித்திரர் கோபிக்கவும் இதைப்பார்த்து சூரியவம் சத்தவர்களது பாக்கியத்தையே கருதும் குருவான வசிஷ்டர் அரசே! அநேக அஸ்திர சாஸ்திரங்களைக்கற்ற இம் முனிவர் உன் புத்திரனது க்ஷேமத்திற்காகவே உன்னிடம் யாசிக்கிறார். ஆகை யால் சீக்கிரம் புத்திரனை அவருடன் அனுப்புவாயாக என்று உத் ரவளித்தார்.

२२ रामं लक्ष्मणमानयन्निजपदं साकेततः प्रस्थितः
सार्धंयोजनमागतश्चसरयूतीरेनिविष्टो मुनिः ।
विद्येमन्त्रयुतेबलामतिबलां क्षुत्तृड्जशोकापहे
वीर्योत्साहविधायके त्रिजगतां क्षेमायसोऽग्राहयत् ॥२८॥

விசுவாமித்திரர் இராம லக்ஷ்மணர்களை அயோத்தியிலிருந்த அழைத்துக்கொண்டு தன் தபோவனம் வரும்பொழுது ஒன்றரை யோஜனைதூரஞ் சென்றதும் சரயூநதிக்கரையில் உட்கார்ந்து பசி தாகங்களைப்போக்கி பல உற்சாகங்களைக்கொடுக்கும் மந்திரகலாபங் களோடுகூடிய பலை அதிபலை என்னும் வித்தைகளை மூவுலக க்ஷே மத்தின்பொருட்டு அவர்களுக்கு உபதேசித்தார்.

२३ रामं प्रातरुपासिताऽऽह्निकमथस्वस्यानुगं सानुजं
गाधेस्सूनुरघापहं ससरयूभागीरथीसंगमं ।
अंगाऽऽख्यं विषयं सुकृत्यानिलयं प्रापय्यतद्वैभवं
विस्तारेण विबोधयन्मुनिनुतो रात्रिंसतत्राऽऽवसत् ॥२९

பாபந்தீர்க்கும் கங்கையில் சரயூசங்கமஸ்நானஞ் செய்து புண்ணியத்திற்கு இருப்பிடமான அவ்விடத்திலுள்ள அங்க தேசத்தை யடைந்து அவ்விடப்பெருமையை (மன்மதன் சிவபெருமானுக்குக் குற்றஞ்செய்து அங்கமிழந்ததை) விரிவாக உபதேசித்து முனிவர்களால் ஸ்தோத்திரிக்கப்பெற்று இரவை அவ்விடம் கழித்தார்.

२४ निर्गच्छन्स ततो नृपाऽऽत्मजयुतो नावातरन्स्वर्धुनीं
देशानेत्यकरूश संज्ञमलदान्देवेश्वरानुग्रहात् ।
पुण्यान्पूर्वं समस्त्यपुण्यवनसन्नद्याऽऽवृतान्दारुणैः
यक्षिण्यास्त इहातिवीर्य जहि तामित्यब्रवीद्राघवं ॥ ३० ॥

விசுவாமித்திரர் இராமலக்ஷ்மணர்களுடன் அவ்விடம் நீங்கி ஓடத்திலேறிக் கங்கையைத்தாண்டி, தேவேந்திரனது அனுக்கிரகத்தால் மிகவும் செழித்து முன் நந்தவனத்திற்கொப்பானதும் இப்பொழுது துஷ்ட ஜந்துக்களால் சூழப்பெற்றதுமான, கரூசம் மலதம் என்னும் தேசங்களுக்குச் சென்று, "இவ்விடத்தில் ஒரு யக்ஷிணி இருக்கிறாள். அதிக பலமுள்ள ஏ ராமா அவளை சம்ஹரிக்கவேண்டும்" என்று சொன்னார்.

२५ रामस्यातिकृपालुतां जननतःसिद्धामहार्यां परैः
उत्साहं स्वबलागतां बलवतीं सयक्षमूलां मुनिः ।
यक्षिण्याविधिं कुंभजातवरजं वीर्यं च दुर्वृत्ततां
व्याचख्यावसतीनिषूदनविधिं सद्धर्म्यं सोदाहृतिं ॥२१॥

பெண்களிடத்தில் பிறர் விலக்கமுடியாத ஜன்ம சித்தமான இராமனது கருணையை அடியோடு மாற்ற நினைத்த விசுவாமித்திரர், பிரமன் அகஸ்தியர் முதலியோரது வரத்தால் மிகுந்த தாடகையின் பலத்தையும் துஷ்டத்தனத்தையும், துஷ்டஸ்திரீகளின் வதத்தால் புண்ணிய மேற்படுகிறது என்பதையும் உதாரணத்துடன் எடுத்துக்கூறினார்.

२६ श्रीरामो गुरुशासनेन विदधत्सज्यं धनु ज्यास्वन
श्रुत्यो त्क्षिप्य करौ वधाय सविधं प्राप्तां द्रुतं ताटकां ।
वर्षन्ती सभित शिलाः करपदे छिन्दन्सुमायाविनीं
बाणेन द्युसदां वनस्य हितकृद्वृत्ततोऽच्यावयत् ॥ ३२ ॥

ஸ்ரீராமன் குருவினது உத்தரவினால் வில்லேவளைத்து நாணேற்றி, டங்காரம்செய்ய அவ்வோசையைகேட்டுக் கைகளைத்தூக்கிக்கொண்டு கொல்வேனென்று எதிரில் வந்து மாயையினால் நாற்புறமும் கற்களை வாரிச்சொரியும் தாடகையைச் சீக்கிரம் பாணத்தினால் கைகால்களைச் சேதித்து தேவர்களுக்கும் அவ்வாணியத்திற்கும் நன்மையின் பொருட்டு துஷ்டத்தனத்திலிருந்து விலக்கினார்.

२७ मारीचस्य सुवो वधेन मुदित श्शक्रादिभिः प्रेरितः
रामाय प्रबलाय भक्ति निधये प्रादा न्मुनिः कौशिकः ।
दिव्यास्त्राणि कृशाश्वजानि जगतां भीतेः प्रहर्तॄणितत्
मन्त्राधीश्वर देवता हृदयगा स्येति प्रवक्त्रेमुहुः ॥ ३३ ॥

மாரீசனுடைய தாயை வதம்செய்ததால் சந்தோஷித்த விசுவாமித்திரர் தேவர்களது நியமனத்தால் அதிக பலத்தோடு மிகுந்த பக்தனும் முன்னிலேயில்வந்து என்ன செய்யவேண்டும் என்று கேட்கும் மந்திர தேவதைகளே என் மனதிலிருங்களென்று அடிக்கடி சொல்லும் ராமனுக்கு உலகத்தின் பயத்தை விலக்கும் கிருசாச்வரிடம் பிறந்த திவ்வியாஸ்திரங்களை உபதேசித்தார்.

२८ अस्त्राणा मुपसंहृतिं भगवतो लब्ध्वा मुनेः राघवः
देवै रप्यसुरै रधार्षित बलो मध्याह्न मार्ताण्डवत् ।
गच्छन्भ्रातृयुतो महत्तरुकुलं दृष्ट्वाऽथ कस्याऽऽश्रमः
पुण्योऽयं यजनाऽऽलयः क्व भवतो वैरी क इत्यार्थयत् ॥

ஸ்ரீ ராமன் அஸ்திரங்களின் உபசம்ஹாரத்தை முனிவரிட மிருந்து அறிந்துகொண்டு நடுப்பகலிலிருக்கும் சூரியனைப்போல், தேவாசுரர்களாலும் எதிர்க்கமுடியாத பலம் பெற்றுச் சகோதரனு டன் போகும்பொழுது அதிகமரக்கூட்டத்தைக்கண்டு, "இது யாரு டைய ஆசிரமம்? புண்ணியமான தங்கள் தபோவனமெங்கே? தங் கள் சத்துருக்கள் யார்? எங்கிருக்கின்றனர்?" என்று விசுவாமித்திர ரை வினவினார்.

२९ यः पूर्वं बलि मर्थयन्वसुमतीं पादत्रय व्यापृतां
श्रीमान्वामन एव विश्ववपुषा शक्राय तृप्तोऽददात् ।
तस्यायन्तपसां फलस्यकरणात्सिद्धाश्रमो ह्याश्रमः
मेऽत्रैवेति स राजपुत्र सहितो यज्ञाऽऽलयं प्राविशत् ॥

முற்காலத்தில் யார் வாமனனாயிருந்து மகாபலியினிடம் பூமி யில் மூன்று காலடி இடம் யாசித்து, உலகத்தைத் தன் சரீரமாக்கிக் கொண்டு மூவுலகங்களையும் இந்திரனுக்குக் கொடுத்தாரோ அவரது ஆசிரமம் இது. தவத்தின் பலனைக்கொடுப்பதால் சித்தாசிரமம் என்று பெயர்பெற்றது. எனது ஆசிரமமும் இவ்விடத்திலேதான் என்று சொல்லி விசுவாமித்திரர் இராஜகுமாரர்களோடு யாகசாலை யில் பிரவேசித்தார்.

३० षड्रात्रं यजतो मुनेः कुशलदं रामो जुगोपाध्वरं
भ्रात्राऽधिज्यधनुस्स्वराज्यमिव भूपालोऽपनिद्रोऽस्त्रवित्
मारिचं स सुबाहुमप्यनुगतान्यज्ञस्य शत्रून्नयन्
वार्धिं मानवतो यमं हुतवहाद्वायव्यतोऽन्तंदिशां ॥३६॥

உலகக்ஷேமத்தின் பொருட்டு ஆறுநாள் யாகம்செய்யும் விசுவா மித்திரரது யாகத்தை, நாணேற்றியவில்லை எடுத்துக்கொண்டு அஸ்தி ரங்களை யறிந்த இராமன் தம்பியுடன் தூக்கமின்றி, மானவாஸ்திரத் தினால் மாரீசனைச் சமுத்திரத்திலும் அக்கினியஸ்திரத்தினால் சுபாகு வை எமலோகத்திலும், வாயுவஸ்திரத்தினால் மற்ற யாக சத்துருக் களைத் திசைகளிலும் விரட்டி, அரசன் தன்னிராச்சியத்தைக் காப் பதுபோல் பாதுகாத்தான்.

३१ तुष्ट स्सत्रविधानतो जिगमिषुः प्रालेयशैलं मुनिः
चापस्याध्वरकृद्विदेहनृपते रामं दिदृक्षुं नयन् ।
आवासं सहितो ऽनुयायिभि रथ प्राप स्स शोणातटं
तद्देशाधिपते श्चरित्र मथतत्प्राहास्तगे भास्वति ॥ ३७ ॥

யாகம் நிறைவேறியதால் சந்தோஷித்த விசுவாமித்திரர் தவத்தின் பொருட்டு இமயமலை செல்லவிரும்பி யாகஞ்செய்யும் ஜனக மகாராஜாவின் வில்லைப் பார்க்கவிரும்பிய இராமனை அழைத்துக் கொண்டு மிதிலை செல்பவராய்க் கூடவருபவர்களுடன் சோணநதிக் கரைக்கு வந்து சூரியன் அஸ்தமிக்கும்பொழுது பாபமற்ற அத்தேசத்தரசனது கதையைச் சொல்லத் தொடங்கினார்.

३२ ब्रह्मापत्य कुशाऽऽत्मजस्य च वसो र्देशः प्रवृद्धो ऽस्त्ययं
कन्या स्ताः कुशनाभजा श्शत मपि प्रेक्ष्य स्पृहाऽऽर्तोमरुत्
धिक्कारेण सकोपन स्त्वकलयत् तासां शरीरेभृशं
भंगं तेन सुदुःखिताः स्वपितरं प्राहु स्तनूपद्रवं ॥ ३८ ॥

பிரமபுத்திரரான குசனுடைய புத்திரன் வசு. செழிப்பான இத்தேசம் அவருடையது. குசநாபனுடைய நூறு கன்னிகைகளையும் பார்த்து மோகித்துப் பிரார்த்தித்தும் அவர்கள் அவமதித்ததாற் கோபங்கொண்ட வாயு அவர்களது சரீரத்தைத் துன்புறுத்த, அவர்கள் துக்கித்துத் தகப்பனிடம் இவ்விருத்தாந்தத்தை அறிவித்தனர்.

३३ श्रुत्वा तं कुशनाभ आशुगकृतं पुत्रीशतोपप्लवं
तत्कर्म प्रतिकार मात्महृदये क्षान्तिं परां चिन्तयन् ।
कांपिल्याधिप चूलि तापससुवे ता ब्रह्मदत्ताय सः
प्रादा न्मन्मथदा स्सुता स्सुरुचिरा स्संत्यक्त कुब्जोच्छ्रयाः ॥

குசநாபன் தன் புத்திரிகளுக்கு வாயு செய்த தீங்கைக் கேட்டும் மிகவும் பொறுமையையே அதற்குப் பிரதிகாரமாக மனதில் நினைத்து காம்பிலிய தேசாதிபதியும் சூளிமுனி புத்திரனுமான பிரம்மதத்தன் பொருட்டு, பிணிகள் நீங்கி அழகினால் காமத்தைக்கொடுக்கும் அப்பெண்களை மணஞ்செய்துவைத்தார்.

३४ पौत्रीमिष्टि मथाऽऽचरञ्जनयितु र्वाक्येन गाधिं सुतं
प्राप श्रीकुशनाभ आर्यधुरं तस्याऽऽत्मजौ द्वावहं ।
मत्पूर्वा भगिनी त्वृचीक दयिता स्वर्गा नदीरूपिणी
प्रालेयाचलगेति कथित कुल स्सो ऽश्रावय द्राघवं ॥

அக்குசநாபன் பிதாவின் உத்திரவினால் புத்திரகாமேஷ்டியைச் செய்து பெரியோரின் தன்மைபெற்ற காதியைப்புத்திரனாக அடைந்தான். அவனுக்கு நானும் என் மூத்த சகோதரியும் குழந்தைகள். ரிசீகரின் மனைவியான என் சகோதரி சுவர்க்கம் சென்று நதீரூபமாய் இமயமலையை அடைந்தாள் என்று தன் வம்சசரித்திரத்தைக் கூறி இராமனை நித்திரை செய்வித்தார்.

३५ तीर्त्वा शोण मथा ऽऽगत स्सुरनदीं तीरं विधायाऽऽप्लवं
मध्येऽह्नस्सुखितो मुनी रघुभुवा पृष्टोऽवदत्तत्कथां ।
कन्या युग्ममभू द्धिमोच्चयभृतो गंगेत्यपर्णेतिच
द्योसद्भ्यः प्रथमां ददाववरजां रुद्राय बद्धव्रतां ॥ ४१ ॥

விசுவாமித்திரர் சோணநதியைக் கடந்து கங்காதீரம் வந்து அதில் ஸ்நானம் செய்து சுகமாயிருந்துகொண்டு நடுப்பகலில் கங்கா சரித்திரம் வினவும் இராமனுக்கு அந்கதையைச் சொல்லத் தொடங்கினார். இமவானுக்கு கங்கையும் பார்வதியும் இரண்டு பெண்கள். அவ்விமவான் கங்கையைத் தேவர்களிடத்திலும், தவம்புரியும் பார்வதியை ருத்திரதேவனிடத்திலும் கொடுத்தான்.

३६ शंभु र्वल्लभया युतोऽतिमदनक्लिष्ट स्सुरै रर्थितः
शप्तैः पुत्रविनाकृतै र्गिरिजया तेजो धरन्तेजसि ।
वीर्यं स्वं गलितं भुवा च विधृतं वैश्वानरेणापि तत्
कृत्वा श्वेतगिरिं ततश्शरवणं देव्याऽथ चक्रे तपः ॥४२॥

(கங்கா சரித்திரத்தின் விரிவையும், இராமனுக்கு விசுவாமித்திரர் சொல்லுகிறார்) 'ஹே ராமா சிவபெருமான் அதிக மோகங்கொண்டு, கௌரியுடன் புணர்ந்து, தேவர்களின் வேண்டுகோளுக்கிணங்கித் தன்வீரியத்தைத் தன்னிடமேயடக்கிக்கொள்ளக் கௌரி தேவர்களைப் புத்திரனில்லாதவர்களாகச் சபிக்க, சரீரத்திலிருந்து பெருகிய வீரியத்தைப் பூமிதேவி தாங்கித் (தரிக்கமுடியாமல்) அக்கினியினிடம் கொடுத்து, அது சுவேதமலையும், சரவணமுமாக, அப்புறம் சிவபெருமான், தேவியுடன் தவம்புரிந்தார்.

३७ सेनाऽध्यक्ष मुपैतु मीप्सितयुतै र्वह्निस्स नुन्नस्सुरैः
वीर्यं तद् व्यसृजद्वियत्सारीति सा गर्भं न धर्तुं पटुः ।
पादेतु प्रमुमोच कांचनमयं गौरीगुरोः, कृत्तिकाः
षट् स्तन्यै स्तमवर्धयन्सरिपुहा सेनापतिस्स्वर्गिणां ॥४३॥

தேவர்கள் சேனாதிபதியை விரும்பி, அக்னியைப் பிரார்த்திக்க, அக்னிபகவான் அந்தச் சிவவீரியத்தைக் கங்கையில்விட, கங்கை அதைத்தரிக்க முடியாமல், இமயமலையின் தாழ்வரையில் ஒதுக்க, கார்த்திகைப்பெண்கள் அறுவரும் அக்குழந்தைகளுக்குப் பால்கொடுத்து வளர்க்க, அக்குழந்தை தேவசேனாதிபதியாயிருந்து சூரபதுமன் முதலிய சத்துருக்களை வென்றான்.

३८ साकेते द्विकलत्रवान्स सगरो राजाऽभवत्केशिनी
पुत्रं वंशकरं बहूंश्च सुमतिः प्रासूत तस्यांगना ।
ज्येष्ठो वारिणि पातयन्पुरभवान्बालान्बहिर्यापितः
पौत्रेणांशुमता युतोऽन्यतनयै र्योवाजिमेधं व्यधात् ॥

அயோத்தியில் இரண்டு மனைவிகளுடன் சகரன் என்ற அரசன் இருந்தான். அவன் மனைவி கேசினி வம்சவிருத்திக்குக் காரணமான, ஒரு புத்திரனையும், சுமதி அனேககம் புத்திரர்களையும் பெற்றார்கள். மூத்த குமாரன் நகரவாசிகளின், குழந்தைகளைச் சலத்தில்போட, அதனால் அவனை விரட்டிவிட்டு, அவன் பத்திரனை, அம்சுமானோடும், மற்ற புத்திரர்களோடும், அரசன் அசுவமேதயாகம் செய்தார்.

३९ यज्ञाश्वं तमपाहरत्सुरपति र्मायाव्यदृष्टः क्षणात्
भूपेन व्यथितेन तेन यजता षष्टि स्सहस्रं सुताः ।
आज्ञप्ता द्रुत मानयेति तुरगं भित्वा नखाग्रैः धरां
पातालं विविशु र्निहत्य तलगान्भीतिं सुरा भेजिरे ॥

இந்திரன் மாயையால், பிறர் கண்களுக்குப் புலப்படாமல் யாகக் குதிரையை க்ஷணநேரத்தில் கொண்டுபோக, யாகம் செய்யுமரசன் வியசனமடைந்து, சீக்கிரம் குதிரையைக் கொண்டுவரும்படி உத்தரவளிக்க, அறுபதினாயிரம் புத்திரர்களும், நகங்களின் நுனியால் பூமியைப் பிளந்து பாதாளத்திலிருப்பவர்களைத் தேவர்களும் பயமடையும்படி வதைத்துப் பாதாளஞ் சென்றார்கள்.

४० ब्रह्मा तद्भावितव्यतामथ सुरान्प्राबोधयत्सागरान्
भित्वा ऽन्तः पृथिवीं दिशागज मपि प्रेक्ष्येशदिश्यश्वकं
तस्याभ्यर्णगतं मुनिं च कपिलं तिष्ठाश्वचोरेति तान्
स्वं हन्तुं समुपागता न्समदहद्धुंकारत स्तत्क्षणं ॥ ४६ ॥

பிரமன் தேவர்களுக்குச் சகரபுத்திரர்களின் விநாசத்தைக்கூற பூமியைப் பிளந்து உட்புகுந்து, பாதாளத்திலிருக்கும் திக்கஜங்களையும் ஈசான மூலையில் யாகக்குதிரையையும், அதன் சமீபத்தில் கபில முனிவரையும் பார்த்துக் குதிரைத் திருடியவனே, நில்லடாவென்று தன்னைக் கொல்லச் சமீபத்தில் வந்த, அந்தச் சகர புத்திரர்களைக் கபில முனிவர், அதே க்ஷணத்தில் ஹுங்காரத்தினால் சாம்பலாக்கினார்.

४१ आनीताश्च उपागते निजपितॄन्ज्ञात्वा निवृत्तेद्रुतं
कर्तव्यं प्रतिबोधिते च विनताऽपत्येन पत्रेऽखिलं ।
शोचन्सन्सगर स्वकीय मनघो यज्ञं विनिर्वर्तयन्
त्रिंशद्वर्ष सहस्र मत्र निवसन्स्वर्गं जगामामरः ॥ ४७ ॥

போனை, அம்சுமான் பாதாளஞ்சென்று தகப்பன்மார்களின் நிலைமையையறிந்து, அவர்களுக்குச் செய்யவேண்டியதை, கருடன் மூலமுணர்ந்து, குதிரையை அழைத்துவரச் சகரமகாராஜன் வியசன மடைந்து, தன் யாகத்தை முடித்துப் பாபமற்றவனாய், முப்பதினா யிரம் வருஷம் பூமியிலிருந்து அரசுபுரிந்து, தேவத்தன்மையோடு சுவர்க்கம் சென்றார்.

४२ उद्धर्तुं स्वपितॄन्सकाममिव तां स्वर्गाऽऽपगां भूतलं
त्वानेतुं सुरलोकगेऽम्शुमति तत्पुत्रे दिलीपे ततः ।
तत्पुत्रेण भगीरथेन विनुतो वेधा स्त्वदिच्छा यथा
गंगां धर्तु मुमापतिं वृणु भृशं शक्त स्स इत्यादिशत् ॥

அம்சுமானும், அவன் புத்திரனான திலீபனும் தன்பிதருக்கு க்கு நற்கதியுண்டாகச் சுவர்க்கத்திலிருந்து கங்கையைப் பூமிக்குக் கொண்டுவருபவன்போல் சுவர்க்கம் செல்ல, திலீபனது புத்திரனாகிய பகீரதன், பிரமனைத்துதிக்கப் பிரமன், "பகீரதா உன் விருப்பம்போல் கங்கையைத் தாங்கி பூமியில் விடச் சிவபெருமான் மிகவும் வல்லவர் அவரை வேண்டிக்கொள்" என்றார்.

४३ सन्तुष्टेन महेश्वरेण तपसा ऽऽकाशात्पतन्तीं महा
पूरां गर्वभृतं कपर्द विपिने सद्य स्तिरोधापितां ।
कृत्वा सप्तविधां कृपाऽर्णवतया दत्तां तत स्ससमीं
गंगां जह्नु विसर्जितां सनृपति र्गच्छन्सुवोऽधोययौ ॥४८

தவத்தினாற் சிவபெருமான் சந்தோஷமடைந்து, ஆகாயத்தி
லிருந்து கருவங்கொண்டு அதிகப் பிரவாகத்துடன், கீழே விழுங்
கங்கையைத் தன் ஜடாபாரத்தில் மறைத்துக்கருணையால் எழுவிதம்
பங்கிட்டு, வழியிலொருபாகங் கங்கையைப் பகீரதனிடம் கொடுக்க,
அதை ஜன்ஹுமுனிவர் சாப்பிட்டு, மறுபடியுங்கொடுக்க, அதைப்
பெற்றுக்கொண்டு பாதாளஞ் சென்றான்.

४ क्लिन्ने भस्मनि गंगया सगरजा स्सर्वे विमुक्तास्त्वघात्
दिव्याऽऽकारभृतो विमानवर मारूढा गतास्तेदिवं ।
धन्य स्सन्विधिशासनेन वितरन्तेभ्यो निवापांजलिं
गंगां स्वाऽऽत्मजयन्भगीरथनृपोहृष्टा ररक्षा वनिं ॥५०॥

கங்காதீர்த்தத்தினால் சாம்பலை நனைக்கச் சகரபுத்திரர்களெல்
லாரும், பாபம் நீங்கித் திவ்விய ரூபந்தரித்து, விமானமேறிச் சுவ
ர்க்கஞ்சென்றார்கள். பிரமன் தோன்றி "ஏ பகீரதா! நீ புண்யவான்
சகரபுத்திரர்களுக்குக் கங்கையில் இப்பொழுது தர்ப்பணம் செய்.
உனக்குங் கங்கை பெண்ணாக இருக்கட்டும்" என்று சொல்ல அதே
விதம் பகீரதன் செய்து சந்தோஷமாய் நகரம்வந்து அரசுபுரிந்தான்.

५ तीर्त्वा स्वस्तटिनीं तदुत्तरदिशं प्राप्तायतद्वैभवं ।
रामायाऽऽहमुनिस्सुरान्दितिसुतान्मृत्युं विहन्तुंजरां
क्षीरोदंपरिमथनतो विषमुमानाथायदत्वासुधां ।
वीक्ष्यान्योन्यमुपद्रुतान्कपटविच्चक्रे सुजेतॄन्जितान् ॥५१॥

கங்கையைக் கடந்து அதின் வடபுறம் சென்ற, ஸ்ரீராமனுக்கு
விசுவாமித்திரர், அந்த தேசத்தின் பெருமையைச் சொல்லத்தொட
ங்கினார். தேவர்களும், அசுரர்களும், மரணம், கிழத்தனம் இவ்வி
ரண்டையும் போக்கத் திருப்பாற்கடலைக் கடைந்து, சிவபெருமானு
க்கு விஷத்தைக் கொடுத்து, அமிர்தத்தைக்கண்டு கலகஞ்செய்ய
மாயாபுருஷன் தேவர்களுக்கு வெற்றியையும், அசுரர்களுக்குத்
தோல்வியையும் கொடுத்தார்.

४६ स्वर्गेश स्वजिघांसयासतपसं शुश्रूषमाणोदितिं
मध्याह्ने पदयो श्शिरोविदधतीं प्रेक्ष्याशुचिं निद्रितां ।
तस्याःकुक्षिमथैत्य गर्भमसुहृत्छिन्दन्खल स्सप्तधा
दैवेन प्रतिबोधितां द्रुतमतोनिर्गत्यचासांत्वयत् ॥ ५

இந்திரன் தன்னைக் கொல்லவிரும்பித் தவஞ்செய்பவளும், ப
பகலில் கால்வைக்குமிடத்தில் தலையைவைத்து அசுத்தமாய் நி
ரைசெய்பவளுமான திதியைப் பார்த்துக் கெட்ட எண்ணத்துட
பணிவிடை செய்து துஷ்டத்தனத்தினால் அவள் வயிற்றிற் புகு
அவளது கருப்பத்தை ஏழுதுண்டாக்கி, தெய்வவசமாய் அத்
தேவி விழித்துக்கொள்ளச் சீக்கிரம் அதிலிருந்து வெளியேறிச் ச
தானம் செய்தான்.

४७ वायूनामधिपान्स्वगर्भशकलान्शक्रेण कृत्वादितिः
सिद्धार्थेहसुराधिपश्च समभूद्योऽलंबुसेक्ष्वाकुजः ।
तस्येदं नगरं विशालनृपतेरित्यूचिवान्कौशिकः
तद्वंश्येन समर्चितस्सुमतिना तत्राऽऽवसद्यामिनीं ॥ ५

திதிதேவி தன் கருப்பத்தின் துண்டுகள் ஏழையும், ஏழு ம
க்களாக இந்திரனால் செய்வித்து, தானும், இந்திரனும் இவ்வி
விரும்பிய பயன் பெற்றார்கள். இக்ஷ்வாகு, அலம்புசை இ
ளின் புத்திரனான விசாலனென்ற அரசனுடைய, நகரமிது எ
சொல்லி விசுவாமித்திரர் அக்குலத்திலுதித்த சுமதி பூபதி
பூஜிக்கப்பெற்று அன்றிரவை அவ்விடம் கழித்தார்.

४८ सम्प्रातर्मिथिलापुरोपवनगोरामेण पृष्टोमुनिः
शून्यंवीक्ष्यतपोवनं तमवदद्दुर्वत्मंगं गौतमः ।
कृत्वानिर्वृषणं वृषाणमनघोऽहल्यां सशल्यांशिलां
पूतां त्वत्पदरेणुनारघुपते तप्तुं हिमाद्रिंययौ ॥ ॥

காலையில் மிதிலாநகரத்தின் ஸமீபவனத்தில் சென்று மனிதஸஞ்சாரமில்லாத தபோவனத்தைப்பார்த்து இதுயாருடையது? என்று ராமன் கேட்க விசுவாமித்திரர் சொல்லுகிறார். இது கௌதம முனியின் ஆசிரமம். இவ்விடத்தில் துர்மார்க்கத்தில் நடந்த இந்திரனை விருஷணமில்லாமனும், துக்கமடைந்த அஹல்யையை சிலையாக்கி, ஹேராமா! உன்திருவடியின் தூளியால் பரிசுத்தமாகும்படியும் சபித்து, கௌதமமுனிவர் தவம்புரிய இமயமலைக்குச் சென்றார்.

९ मेषाण्डं पितृदैवतैरुपहृतं प्राप्यैव शक्रस्सुखी
श्रीमन्मानय गौतमस्य दयितां इत्युक्त एत्याऽऽश्रमं ।
पश्यन्नूपवतीं मलाऽऽवृततनुं पूजांचिराकांक्षितां
गृह्णन्तस्य सदारकस्य मिथिलांसर्पिर्ययौ राघवः ॥ ५५ ॥

இந்திரன் பித்ருதேவதைகளால் கொடுக்கப்பெற்ற யாகபசுவின் அண்டத்தைப்பெற்று சுகமடைந்தான். பாக்கியம்பெற்ற ஹேராமா! கௌதம மனைவியைச் சுகமடைவிக்கவேண்டுமென்று விசுவாமித்திரர் சொல்லவும் ராமன் கௌதமாசிரமம் வந்து அழுக்கடைந்த சரீரம்பெற்று ரூபவதியான அவர் மனைவியைப்பார்த்து பத்னியுடன் வெகுகாலமாகச் செய்யவிரும்பிய அவருடைய அதிதி பூஜையைப்பெற்றுக்கொண்டு ரிஷிகளுடன் மிதிலைக்குச் சென்றார்:

० संप्राप्तं यजनाऽऽलयंकुशिकजं संशृण्वता मैथिल
क्षोणीशेन पुरोधसा सकुशलप्रश्नं विधायार्हणां ।
पृष्टःकाविहबालकाविति मुदा प्रत्यब्रवीत्सोऽनयोः
आत्मीयक्रतुरक्षणं खलदमंत्वच्चाप जिज्ञासुतां ॥ ५६ ॥

மிதிலாதிபதியான ஜனகமகாராஜன் தன்யாகசாலையில் விசுவாமித்திரர் வந்திருப்பதைக்கேட்டு,புரோஹிதரால் குசலபிரச்னத்துடன் அதிதிபூஜைசெய்வித்து, இவ்விடம் வந்த குழந்தைகள்யார் என்று வினவும்பொழுது விசுவாமித்திரர் தன்யாகத்தை ரக்ஷித்து துஷ்டர்களை சிக்ஷித்து உன் சிவதனுசைப்பார்க்க விரும்பி, இவ்விராம லக்ஷ்மணர்கள் வந்தார்கள் என்பதை சந்தோஷமாய் தெரிவித்தார்.

५१ माता मे पितरंगतेति मिथिलाऽऽचार्यो विजानन्मुदा
रामं प्रत्यवदद्गुरुस्तु भवतोराजाससैन्यः पुरा ।
भूमिंक्षेत्रसरित्तपोवनयुतां सर्वामिमां संचरन् ।
रम्यंदाशरथेददर्श मुनिभिर्युक्तं वासिष्ठाऽऽश्रमं ॥ ५१

மிதிலையின் ஆசார்யரான சதாநந்தர் தன் தாயான அஹல்
தந்தையான கௌதமருடன் சேர்ந்ததை அறிந்து, மனமகிழ
ராமனிடம் தெரிவிக்கிறார். "ஹே தசரதமைந்தா! உன் குரு விசு
மித்திரர் முன்காலத்தில் அரசனாயிருந்து சேனையுடன் வயல்
தபோவனங்களுடன் கூடிய பூமி முழுவதும் ஸஞ்சரித்து ரிஷி
டன் கூடிய அழகிய வசிஷ்டாசிரமத்தைப் பார்த்தார்.

५२ ब्रह्मिष्ठोऽपि वासिष्ठ आगतमसु स्वीयाऽऽलयंकौशिकं ।
पृच्छन्तं कुशलं समर्च्य विधिवत्पृष्ट्वामुदाऽनामयं ।
सैन्यैस्तत्रनिमन्त्रयन्कथमपि स्वाद्यं च तं भोजनं
भोक्तुं भोजयितुंन्ययुङ्क्त तपसाकामप्रदां नन्दिनीं ॥५

மிகவும் பெரியவரான வசிஷ்டர் தன் இருப்பிடம் வந்து சே
பிரச்னம் செய்யும் விசுவாமித்திரரை விதிப்படி ஆரோக்ய பிரச்
துடன் பூஜித்து சைனியத்துடன் அவ்விடத்தில் ருசியான உண
உண்ணவும் உண்பிக்கவும் வேண்டிக்கொண்டு விரும்பினதைக் கொ
க்கும்படி நந்தினிக்குத் தவத்தினால் உத்திரவு செய்தார்.

५३ धेनुं कामदुहंबहुत्वातिरसं केनाप्यनास्वादितं ।
स्वस्मै सैनिकसंयुतायददतीमन्नं चतुर्धा द्रुतं ।
गाधेयोगगनाश्रयै रभिमता माहर्तुकामो मुनिं
साम्नानैव शशाक तं वशयितुं दानैरनल्पैरपि ॥ ५

ஒருவரும் முன் சாப்பிடாததும், அதிகருசியுள்ள பக்ஷிய, போஜ்ய, லேகிய, சோஷியமென்னும் நான்கு விதமான உணவை விரும்பிய அளவு தனக்கும் சைன்யங்களுக்கும் கொடுக்கும் தேவர்களும் விரும்பிய, காமதேனுவை சீக்கிரம் அபஹரிக்க நினைத்து, நல்லவார்த்தையாலும், அளவற்ற தானங்களாலும், விசுவாமித்திரர் வசிஷ்டரை வசமடைவிக்கமுடியவில்லை.

௫௪ आकृष्टा नृपकिंकरै स्सुरगवी ब्रह्मर्षिणा प्रेरिता
हुंभाऽऽरावसुतर्जिताहितकुलाहंभाव विद्रावका ।
म्लेच्छान्यानसृजत्क्षणादभयदान्तानात्मसैन्यद्रुहः
विश्वामित्र उपात्तबाणनिकरस्संक्लेशयामास सः ॥ ६० ॥

அரசனுடைய கிங்கரர்கள் பலமாக இழுக்கும்பொழுது, காமதேனு வசிஷ்டருடைய உத்திரவால் ஹூம் என்ற சப்தத்தால் சத்ருக்களை அதட்டி, அவர்களின் கருவத்தைக் குறைக்கும்படியும், அரசனது சைன்யத்தை அழித்து தனக்கு அபயமளிக்கும்படியும், எந்த மிலேச்சர்களை உண்டுபண்ணினதோ அவர்களை விசுவாமித்திரர் க்ஷணநேரத்தில் அம்புகளால் துன்பமடைவித்தார்.

௫௫ ब्रह्मर्षि चगवाऽऽत्मनोऽतिबलिनस्सृष्ट्वा किरातादिमान्
तै स्सैन्यं क्षपयन्तमात्मतनयान्दृष्ट्वा शतं हुंकृतेः
निक्षिप्याऽऽत्मधुरं शुचाकुशिकजःशिष्टेऽवशिष्टे सुते
सन्तुष्टात्तपसाहरादधिगतःशस्त्राण्यथा पीडयत् ॥ ६१ ॥

காமதேனுவால் அதிக பலமுள்ள கிராதர்களை உண்டுபண்ணி, அவர்களால் தன் சைனியங்களையும், ஹூங்காரத்தினுல் தன் புத்திரர்கள் நூறு பேர்களையும் அழித்த வசிஷ்டரைப் பார்த்து விசுவாமித்திரர் யோக்கியனுய் மீதியிருந்த மைந்தனிடம் ராஜ்யபாரத்தை ஒப்புவித்து, தவத்தால் சிவபெருமானை சந்தோஷமடைவித்து, சஸ்திரங்களைப்பெற்று பிறகு துன்பமடைவித்தார்.

५६ क्रुद्धं स्वाऽऽश्रम पीडनेन झटिति स्वंब्रह्मदण्डं करे
गृह्णन्तं सकलास्त्रमप्यतिबलं नित्यंग्रसन्तंभृशं
तिष्ठक्षत्रिय पांसनेति परुषं संतर्जयन्तं मुनिं
वीक्ष्य प्राप्तु मियेष स द्विजनितां भूपः प्रकुर्वन्तपः॥६२॥

தன் ஆசிரமத்திற்குத் துன்பம் செய்ததால் கோபமடைந்து, சீக்கிரம் எல்லா அஸ்திரங்களையும் எப்பொழுதும் மிகவும் பக்ஷிக்கும் தன்பிரம்மதண்டத்தைக் கையில் தரித்துக்கொண்டு, அதிக பலம் பெற்று, ஹே க்ஷத்ரியா தமா! நில்லடாவென்று கடோரமாய் அதட்டும் வசிஷ்டரைப் பார்த்து, விசுவாமித்ரர் அரசனாயிருந்தும் தவம் செய்து பிராமணனாக இருக்கவேண்டுமென்று விரும்பினார்.

५७ ब्राह्मण्यार्थिनि कौशिके वरतपः कुर्वत्युपेतांगने
निर्विण्णे तनयाधिलाभइव सद्राजर्षिशब्दे विधेः ।
इक्ष्वाकुप्रभवस्त्रिशंकुनृपतिस्तन्वा यियासुर्दिवं
स्वाऽऽचार्येणनिराकृतो गुरुसुतानस्तौद्विधातुंक्रतुं॥ ६३ ॥

பிராமணத்தன்மையை விரும்பி விசுவாமித்திரர் மனைவியோடு கிடைத்த ஹவிஷ்யந்தன் முதலிய நான்கு புத்திர லாபத்திலும், பிரம்மா கொடுத்த ராஜரிஷி சப்தத்திலும், வெறுப்பைப்பெற்று, தவம் செய்யும்பொழுது, இக்ஷ்வாகு குலத்தில் உதித்த மூன்று பாபங்களை 3 முளையாக முளைத்ததால் திரிசங்குவென்று பெயருள்ள திரிசங்கு அரசன் சரீரத்தோடு சுவர்க்கம் செல்ல விரும்பி, யாகம் செய்ய குருவால் அவமதிக்கப்பெற்று, குரு புத்திரர்களைத் துதித்தான்.

५८ वासिष्ठै र्गमितो गुरुध्रुगिति स क्रूरां सुचण्डालतां
विश्वस्यातनुसौख्यदं सकरुणंत्वन्वर्थसंज्ञंमुनिं ।
प्राप्य स्वं विनिवेदयन्शरणयन्नत्याहितं दुस्सहं
दुर्दैवंव्यपनीय कांक्षितमिदंकर्तव्यमित्यब्रवीत् ॥ ६४ ॥

குருத்துரோகி என்று வசிஷ்ட புத்திரர்களால் கொடிய சண்டாளத்தன்மையை அடைவிக்கப்பெற்ற அத்திரிசங்கு மன்னன்' உலகங்களுக்குக் கருணையால் அதிக சுகத்தைக் கொடுத்து உலக மித்திரனென்று உண்மைப் பெயர் பெற்ற விசுவாமித்திரரை, சரணம் அடைந்து, பொருக்கமுடியாத தன் கஷ்டத்தைத் தெரிவித்து, துரதிருஷ்டத்தை விலக்கி என் விருப்பத்தைச் செய்யவேண்டுமென்று சொன்னான்.

५९ आर्तं प्राप्तनिजांघ्रिमूलममलं संत्यक्तगत्यन्तरं
भूपं तं परिरक्षितुं विरचयन्यज्ञं तदिच्छाकरं ।
सर्वानृत्विज आनयन्क्रतुविदस्स्वं निन्दतो दुर्हृदः
वासिष्ठान्समहोदयंमृतभुजोऽकार्षीन्निषादंखलं ॥ ३५ ॥

துன்பமடைந்து வேறுகதியில்லாமல், தன் காலடியில் வந்த குற்றமற்ற அந்தத்திரிசங்கு பூபதியைக் காப்பாற்றுவதற்கு அவன் விருப்பம் நிறைவேறும்படி யாகம் செய்ய முயற்சித்து யாக நிபுணர்களான எல்லா ருத்விக்குகளை வரவழைத்து, தன்னை நிந்திக்கும் வசிஷ்ட புத்திரர்களையும், அம்மகோதயனையும், பிணம்தின்பவர்களாகவும், துஷ்ட வேடனாகவும், விசுவாமித்திரர் செய்தார்.

६० आर्त्विज्यं यजनेमुनीन्कुशिकजो भीताऽऽगतान्कारयन्
आहूतानमराननागतवतो वीक्ष्यत्रिशंकुं नयन् ।
द्यां सद्यस्तपसाततो निपतितं मध्येनभस्स्थापयन्
नक्षत्राणि ससर्जदाक्षिणदिशिक्षिप्रं मुनीन्सप्तच ॥ ६६ ॥

பயந்துவந்த ரிஷிகளை யாகத்தில், ருத்விக்குகளின் வேலையை செய்யச் செய்து தேவர்களைக் கூப்பிட்டும் வராமலிருந்ததைப் பார்த்து, விசுவாமித்திரர் தவத்தால் திரிசங்குவை சுவர்க்கத்திற்கு அனுப்பியும் அதிலிருந்து உடனே விழும் அவ்வரசனை ஆகாயத்தின் நடுவில் இருக்கவைத்து, தெற்குமார்க்கத்தில் வேறு நக்ஷத்திரங்களையும், ஸப்தரிஷிகளையும், சீக்கிரம் சிருஷ்டித்தார்.

स्रक्ष्यन्तं स्वगणान्स्वराजमपरं वीक्ष्यातिभीतास्सुराः
कुर्वन्तोऽनुनयैः प्रशान्तमनसं तद्वाक्यमन्वर्थकं ।
आस्तान्नित्यमवाक्शिरा स्सनृपतिर्वैश्वानरस्याद्बनः ।
बाह्यास्त्वद्रचिता मुने त मभितस्सन्त्वित्यगु स्स्वाऽऽस्पदं

வேறு, தங்களுடைய கூட்டங்களையும், அரசனையும், விசுவாமித்திரர் சிருஷ்டிக்கப்போவதைப் பார்த்து பயந்து தேவர்கள், ஹேமுனே! அவ்வரசன் தலைகீழாகவும், எப்பொழுதும் உன்னால் சிருஷ்டிக்கப் பெற்ற நக்ஷத்திரங்கள் அவ்வரசனுக்கு நான்கு புறமும், அக்கினி மண்டலத்திற்கு வெளியில் இருக்கட்டும் என்று நல்ல வார்த்தைகளால் அவருடைய வார்த்தையை உண்மையாகவும் அவர் மனதை கோபத்திலிருந்து நீங்கியதாகவும், செய்து தங்கள் இருப்பிடத்திற்குச் சென்றார்கள்.

६१ विघ्नोऽत्रेति विसृज्यदक्षिणदिशं प्राप्तेमुनौ पश्चिमां
कुर्वत्युग्रतपोऽम्बरीषनृपतिर्यष्टुं दिनेशान्वयः ।
नष्टे यज्ञपशौ स तत्प्रातिनिधिं विक्रीयगोभि र्नरं
तस्याऽऽयान्निकटंत्वृचीकज शुनश्शेपं रथनाऽऽनयन् ॥

இவ்விடத்தில் இடையூறுவென்று தெற்கு திசையை விட்டு மேற்கு திசையை யடைந்து, விசுவாமித்திரர் கடோரமாய் தவம் செய்யும்பொழுது, சூரியகுலத்திலுதித்த அம்பரீஷ அரசன் யாகபசு காணமற்போக அதற்கு பதிலாக ரிசீகரின் புத்திரனை சுனச்சேபனை அநேக பசுக்களைக் கொடுத்து யாகம் செய்வதற்காக, விலைக்கு வாங்கி ரதத்திலேற்றி அழைத்துக்கொண்டு, அம்முனியின் சமீபம் வந்தான்.

६२ स्वस्रीयं स विमोचयन्यममुखात्त्यक्तं पितृभ्यां मुनिः
भूपं प्रापयितुं च यज्ञफलं गाथे उभे इन्द्रगे ।
यूपं प्राप्य सुवाचयन्नतिमुदं कुर्वन्द्वयो स्स्वाऽऽत्मजान्
कोपं प्राप्य शपन्वचोऽकलयतोऽकार्षीच्चिरं सत्तपः ॥

தாய்தந்தைகளால் விடப்பெற்ற சகோதரியின் புத்திரனை எம னுடையவாயிலிருந்து விடச்செய்யவும், அம்பரீஷனுக்கு யாக பல னைக் கொடுக்கவும் கருதி விசுவாமித்திரர் இந்திரன், உபேந்திரன் இருவர்களைப்பற்றிய இரண்டு மந்திரங்களை யூபஸ்தம்பத்திலிருந்து சுனச்சேபனைச் சொல்லச் செய்து, அத்தேவர்களுக்கு சந்தோஷத் தைக் கொடுத்து தன் வார்த்தையைக் கேட்காத தன் புத்திரர்களை (வசிஷ்டபுத்திரர்களைப்போல்) கோபித்து, சபித்து வெகுகாலம் மிகுந்த தவத்தைச் செய்தார்.

६३ प्राप्तोवर्षसहस्रके स ऋषितां स्रष्टाव्रतान्तेसरः
प्राप्तां मूर्तमिवान्तराय मतनुप्रेम्णाऽऽनयन्मेनकां ।
भुक्त्वा तां दशवत्सरान्स्वसदने स्मृत्वा मनस्यज्ञतां
श्रीमान् सत्तप आचरत्सुरभियं कुर्वन्महत्त्वप्रदं ॥ ७० ॥

ஆயிரவருஷம் சென்றதும், பிரம்மாவினிடமிருந்து ரிஷி என்ற பெயரைபெற்று தவத்தின் முடிவில் உருவங்கொண்ட இடையூறு போல் குளத்திற்கு வந்த மேனகையை அதிக அன்புடன் ஆலயத் திற்கு அழைத்து, பத்து வருஷம் சுகித்து, முட்டாள் தனத்தை மன தில் நினைத்து, விசுவாமித்திரர் மகாரிஷி என்ற பெயரைப்பெற்று, தேவர்கள் நடுங்கும்படி நற்றவம் செய்தார்.

६४ रंभां लोभयितुं स्व मात्ततपसं प्राप्तां हिमाद्रौ सुर
प्रेष्यांकोकिलरूपिणाद्युपतिनाकामेन चानुद्रुतां ।
कृत्वाब्राह्मणपाविताँ च दृषदंक्रोधं कुलघ्नं ततः
संत्यज्यश्वासितं चकारपरमं भीमंमहर्षिस्तपः ॥ ७१ ॥

ஹிமாசலத்தில் தவம் செய்யும் தன்னை, ஆசையை அடையும்படி செய்யவந்த குயிலின் உருவம் பெற்ற இந்திரனுலும், மன்மதனுலும் பின் தொடரப்பெற்ற இரம்பை என்ற தேவதாசியை, சிலையாகவும் வசிஷ்டரால் பரிசுத்தமாகவும், செய்து அதன் பிறகு குலத்தைக் கெடுக்கும் குரோதத்தையும் போக்கி மூச்சுவிடாமல் மிகவும் பயங் கரமான தவத்தை விசுவாமித்திரர் செய்தார்.

६५ यावद्वर्षसहस्र मुत्तमगुणं वाचंयमत्वं भजन्
त्यक्त्वोदग्दिशमास्थितोऽथहारितं प्राचीं तपस्यन्मुनिः ।
इन्द्रायार्थित ओदनं च स ददत्सक्षुत्सुरैः प्रापितः
ब्राह्मण्यं चिरकांक्षितं बहुमतो ब्रह्माऽऽत्मजेनाभवत् ॥

வட திசையைவிட்டுப் பிறகு கிழக்கு திசையை அடைந்து மேலானமௌன குணம்பெற்று, ஆயிர வருஷம் தவம்செய்து, விசு வாமித்திரர் பசியால் வருந்தி இந்திரனால் வேண்டப்பெற்று அவன் பொருட்டு உணவை அளித்து, வெகுகாலமாய் விரும்பிய பிராமண தன்மையை தேவர்களிடம் பெற்று, வசிஷ்டராலும் வெகுமதிக்க பெற்றார்.

६६ राम त्वद्गुरु रेष वीर्यसदनं सर्वास्त्रवेत्तेति च
स्वाऽऽचार्यस्तुतवैभवं स मिथिलानाथो निबद्धांजलिः ।
त्वत्कीर्तिं भगवन्निपबन्नविरतः को नेति संप्रीणयन्
श्वोद्रक्ष्यामि विभातइत्यथ गृहं सप्रेम तं प्रापिपत् ॥

ஹேராமா! உன்குருவான விசுவாமித்திரர் பலத்திற்கு இருப் டம். எல்லா அஸ்திரங்களையும் அறிந்தவர் என்று தன் ஆசார்யா புகழ்ப்பெற்ற பெருமை வாய்ந்த அம்முனியை, மிதிலாதிபதி அஞ் லி பந்தம் செய்து, ஹே சுவாமி! தங்கள் புகழைக்கேட்டு போ மென்று திருப்தி அடைந்தவன் யார் என்று சொல்லி ஸந்தோ மடைவித்துப் பிறகு நாளைக்காலையில் பார்க்கிறேன் என்று அன் டன் வீட்டிற்கு அனுப்பினான்.

६७ त्वच्चापस्यदिदृक्षयादशरथ प्रेमाऽऽत्मजावागतौ
शीघ्रंदर्शय चापमित्यभिहित स्तं प्रत्यभादीन्नृपः ।
देवैरुद्रशरासनं स्वदयित त देवरातेऽर्पितं
राज्ञां सन्निकषायितं बलवतां तद्वंशजैरर्च्यते ॥ ७४

ஹே அரசே! உன்வில்லைப் பார்க்க விரும்பி, தசரதனைந்தர்கள் வந்தார்கள். அவர்களுக்குச் சீக்கிரம் வில்லைக்காண்பிவிக்கவேண்டும் என்று சொல்லும் விசுவாமித்திரரைப் பார்த்து ஜனக மகாராஜன் பதில் சொல்லுகிறான். பலமுள்ள அரசர்களுக்கு உரைகல் போன்ற சிவதனுசை தேவர்கள் தங்களுக்குப் பிரியமான தேவராதனிடத்தில் கொடுத்தார்கள். அவனுடைய குலத்திலுதித்தவர்கள் அதைப்பூசிக்கிறார்கள்.

यज्ञार्थं कृषता ऽवनिं हलमुखात्सीता ऽधिलब्धा मया
कन्या सेयमयोनिजेति भगवन्वीरत्वशुल्का कृता ।
चापा ऽऽकर्षण भग्नभूमिपतयः क्रुद्धाः खलानिर्जिताः
रामश्चेन्नमयेद्धनुर्ममसुतां तस्मै प्रदद्यामिति ॥ ७५ ॥

ஹே பகவானே! சயனயாகம் செய்ய பூமியை உழுகும் பொழுது கலப்பையினுடைய நுனியிலிருந்துக் கிடைத்த சீதையை அயோனிஜை என்று நினைத்து, பலப்பந்தயம் வைத்தேன். வில்லை வளைத்துத் தோர்வை அடைந்த அரசர்கள் கோபங்கொண்டு துஷ்டத்தனம்செய்ய, அவர்களை ஜயித்தேன். ராமன் இந்த வில்லை வளைத்தால், என் பெண்ணை அவனுக்குக் கொடுப்பேனென்று சொன்னான்

६७ पञ्चाश च्छतराजसेवकसमानीतां समुद्घाटयन्
मंजूषा मृषिशासनेन स धनुर्मध्ये गृहीत्वाद्रुतं ।
रामः पूरणकाम एव कुतुकादारोपयन्भंजयन्
व्यक्षीणान्नृपसाध्वसेन धरणेः पुत्रीं सदस्या ऽऽशयं ॥७६॥

ராமன் விசுவாமித்திரருடைய உத்திரவால், ஐயாயிரம் சேவகர்கள் கொண்டு வந்த பெட்டியைத்திறந்து, சீக்கிரம்வில்லை நடுவில் பிடித்து, வளைக்கவேண்டுமென்று விரும்பி சந்தோஷமாய் அதில் நாணைப்பூட்டி ஒடித்து அரசனுடைய (மாப்பிள்ளை கிடைக்காத) பயத்தையும், சீதையையும், சபையோர்களின் மனதையும், ஆச்சர்யமாய். விலைக்குவாங்கினார்.

रामाय क्षितिजां प्रदातुमनघां वीर्याऽऽर्जितां साऽऽशयः
त्वानेतुंससुहृद्गणं दशरथं वैदेह आत्माऽऽस्पदं ।
विश्वामित्र सहायता मुपगतिं तत्पुत्रयो र्ज्ञापयन्
चापत्रोटन माशुगान्स्वसचिवान्साकेतगान्प्राहिणोत् ॥

பலத்தால் கிடைத்த குற்றமற்ற சீதையை, ராமனுக்குக் கொ
க்கவிரும்பி ஜனக மகாராஜன் தசரதரிடத்தில் அவருடைய புத்திர
கள் விசுவாமித்திரருடன் இவ்விடம் வந்திருப்பதையும், வில்லை மு
த்ததையும் தெரிவித்து இஷ்டமித்திரர்களுடன் அவரை தன் இரு
பிடத்திற்கு அழைத்து வரும்படி, சீக்கிரகதிபெற்ற தன் மந்திரிகளை
அயோத்திக்கு அனுப்பினர்.

६८ दूतैर्मैथिल भूपतेरभिमतं साकेतसंम्राड्विदन्
सामात्य स्सुमति प्रशस्तमनघं तस्यान्वयं चिन्तयन् ।
उद्वाहं चिरकांक्षितं विधिकृतं पुत्रस्य संश्रावयन्
श्वोयातेति वदन्जनान्पुरभवान्प्राहर्षय त्तत्क्षणं ॥ ७८

ஜனக மகாராஜனுடைய அபிப்பிராயத்தை அவனுடைய தூத
களால் அறிந்து தசரதமன்னன் மந்திரிகளுடன், ஜனகவம்சத்தை
வித்வான்கள் போற்றுகிருர்களென்று நினைத்து, வெகுகாலமா
விரும்பினதும், தெய்வத்தால் கிட்டினதுமான புத்திரனுடை
விவாகத்தைக் கேட்கும்படி செய்து, நாளை தினம் விவாகயாத்திரை
என்று சொல்லிபட்டணத்தின் ஜனங்களை அதேக்ஷணத்தில்
சந்தோஷமடைவித்தார்.

६९ आदाय द्रविणंमहद्धनभृतः पुंसः पुरोयापयन्
सेनाभिश्चतुरंगिणीभि रमितः प्रीतो दशस्यन्दनः ।
संप्राप्त स्ससुहृद्रथेन मिथिलां तद्वल्लभेनार्चितः
तत्पुत्रीकरपीडनायसुखित स्तत्राध्यवात्सीन्निशां ॥ ७९

க்ஜாணு வேலைக்காரர்களை மிகுந்த பொருளை எடுத்துக்கொண்டு முன்போகச்செய்து, நான்கு விதசேனைகளால் நான்கு புறமும் சூழப் பெற்று, தசரத அரசன் ஸ்நேஹிதர்களோடு ரதத்திலேறி, மிதிலை வந்து, ஜனகரால் பூஜிக்கப்பெற்று, அவன் பெண்ணின் கல்யாணத் திற்காக சுகமாய் அவ்விடத்தில் அன்றிரவைக் கழித்தார்.

௭௦ वैदेहं सकुशध्वजं सामितिगं प्राप्तोरघूणांवरः
सप्रेयान्स्वकुलस्य शुद्धिममितां संवेदायिष्यन्निव ।
धर्म्यानामनुवंशजान्गुरुमुखादास्वाऽऽत्मजं व्याहरन्
आचख्यौ तनुजे प्रदेहि सुभगेस्वस्यात्मजास्यामिति ॥

குசத்வஜனுடன் சபையிலிருக்கும் ஜனகரை, தசரதர் ஸ்நேகி தர்களோடு அடைந்து, தன் குலத்தின் அளவற்ற சுத்தியைத் தெரி விப்பவர்போல், மனுமுதல் தன் புத்திரர்கள் வரை தர்மத்திலிருந்து தவறுதவம்சத்தினர்களை, குருவின் மூலம் தெரிவித்து, உன்னுடைய பெணகளைத் தன் புத்திரர்களுக்குக் கொடுக்கவேண்டுமென்று, சொன்னார்.

௭௧ वंश्यान्तान्निमिपूर्वजान्स्वपरजान्पुर्यामिथे राजनं
सांकाश्ये धनुषे सुधन्वविजयं तत्रानुजस्थापनं ।
उक्त्वाप्राह विदेहजो दशरथं गोदानकं पित्र्यभे
नान्दीकर्म ततस्तृतीयदिवसे वैवाहिकं कुर्विति ॥ ௮௧ ॥

நிமி முதல் தான் வரையிலும், தன் குலத்திலுதித்தவர்களையும், மிதி என்ற அரசன் மிதிலையைச் சம்பாதித்ததையும், சாங்காச்ய தேசத்தில் சிவதனுசுக்காக சுதன்வா என்ற அரசனை ஜயித்து, அவ் விடத்தில் தம்பியை இருக்கவைத்ததையும் சொல்லி, ஜனகர், இன் றைக்கு மகாநக்ஷத்திரத்தில் சமாவர்த்தனமென்ற கோதானகர்மா வையும், நாந்தீசிராத்தத்தையும், இதிலிருந்து மூன்றுவது தினத்தில் விவாகத்தையும் செய்விக்கவேண்டுமென்று, தசரதரிடம்வேண்டினார்.

रोद्धुंभास्करमार्गमप्यतिबलो विन्ध्यः प्रवृद्धोगिरिः
यस्याऽऽज्ञांकलयन्स्वमूर्ध्निधरणीमग्नोऽभवत्सर्वदा।
अस्मान्लोकहितस्सनेष्यतिमहान्निश्श्रेयसंसेवकान्
आराध्यात्रमुनिंवनाधिवसतेश्शेषंनिवत्स्यामितम् ॥ ३

சூரியனுடைய வழியைக்கூட தடுப்பதற்காக மிகவும் வ ந்த அதிக பலம்பெற்ற விந்தியபர்வதம் இவருடைய உத்தர த்தலைமேல் வஹித்து எப்பொழுதும் பூமியில் புதைந்திருக் உலகங்களுக்கு நன்மை செய்யும் அந்த மஹான் ஸேவகர்க நமக்கும் அதிக நன்மை செய்வார். இவ்விடத்தில் இ இவரை ஸேவித்து வனவாஸத்தின் மீதிகாலத்தைக் கழ போகிறேன்.

एनान्नित्यमुपाऽऽसतेक्रतुभुजो जीवेन्नमिथ्यावचाः
दुर्वृत्तोऽत्रतपःकृतस्सुरपदंयान्त्युज्ज्वलाङ्गाद्रुतम्।
देवा अत्रतपस्यतामभिमतं प्रीताः प्रयच्छन्तितम्
सौमित्रेप्रविशाऽऽश्रमंमुनिपतेर्मां प्राप्तमावेदय ॥ ४

"யாகத்தின் ஹவிஸ்ஸை புஜிக்கும் தேவர்கள் இவரை பொழுதும் உபாஸிக்கிறார்கள். இவ்விடத்தில் பொய் சொ னும், கெட்டநடை செய்கிறவனும் பிழைத்திருக்கமாட் தவம் செய்தவர்கள் சீக்கிரம் தேவசரீரம் பெற்று சுவ செல்லுகிறார்கள். இவ்விடத்தில் தவம் செய்தவர்களுக்கு ர்கள் ஸந்தோஷமடைந்து விருப்பத்தைக் கொடுக்கிறார்கள். இலக்ஷ்மணா! அந்த அகஸ்தியருடைய ஆசிரமத்திற்குள் நான் வந்திருப்பதைத் தெரிவிக்கவேண்டும்."

१२ रामस्याऽऽगतिमात्मनश्चिरमतां सौमित्रिसंचोदित
च्छात्रेणातनुहर्षतो निगदितां श्रुत्वाघटस्याऽऽत्मजः
वैदेहीरघुनायकौहृदयतो जीवेश्वरावागतौ
मन्वानस्स्वगृहान्तरंसमनयत्सेवाऽऽर्थिदेवैर्वृतम् ॥

தான் வெகுகாலமாக விரும்பிய இராமனுடைய வரவை, இலக்ஷ்மணனால் தூண்டப்பெற்று அதிக ஸந்தோஷமாக சொல்லும் சிஷ்யனிடமிருந்து தெரிந்துகொண்டு அகஸ்தியர், ஸீதை, இராமன் இவர்களை மனதிலிருந்துவந்த ஜீவேசுவரர்களாக நினைத்து ஸேவையை விரும்பி தேவர்கள் சூழ்ந்திருக்கும் தன் ஆசிரமத்திற்குள் அழைத்துவந்தார்.

ब्रह्माऽऽदीनमरान्ससप्तदशतान्वीक्ष्योत्सुकोराघवः
कोट्यर्कांशुनिभप्रभंचरणयो र्जग्राहकुम्भोद्भवम् ।
पृष्टानामयमातिथेयमतिथेः पुष्पैः फलैः प्रीणनम्
दातारंहरिकार्मुकस्यविधिनादत्तस्यबाणस्यच ॥ ४१ ॥

பிரம்மா முதலிய (பிரம்மா, அக்கினி, விஷ்ணு, மஹேந்திரன், சூரியன், சந்திரன், பகன், குபேரன், தாதா, விதாதா, வாயு, அநந்தன், காயத்ரி, வஸு, வருணன, கார்த்திகேயன், தர்மன், பதினேழு தேவதைகளைப் பார்த்து, இராமன் ஸந்தோஷமடைந்து, கோடி ஸூர்யர்களின் கிரணங்களுக்கு ஸமமான ஒளியைப் பெற்றவரும், ஆரோக்கியத்தை வினவினவரும், புஷ்பங்களாலும், பழங்களாலும் விருந்தாளிகளுக்கு ஸந்தோஷமளிப்பவரும், விருந்தாளிகளை உபசரிக்கும் தன்மைபெற்றவரும், விஷ்ணு தனுஸ்ஸையும், பிரம்மா கொடுத்த பாணத்தையும் கொடுக்கும், அகஸ்திய முனிவரின் திருவடிகளில் நமஸ்கரித்தார்.

तूणी अक्षयसायकौसुरपतेः खड्गंहिरण्याङ्कितम्
दत्वायेनहरिर्विजित्यदितिजान्प्रापासुरेभ्यश्श्रियम् ।
सूर्योऽस्ताचलमारुरोहभगवान्संध्यामुपास्यस्वप
प्रीत्येत्यात्तनिदेशकोरघुपतिस्तत्राव्यनैषीन्निशाम् ॥ ४२ ॥

குறைவற்ற அம்புகளைப்பெற்ற இந்திரனுடைய இரண்டு அம்பு பெட்டிகளையும், நாராயணன் அசுரர்களை ஜயித்து, தேவர்களின் பொருட்டு ஐசுவரிய மளித்ததும், சுவர்ணத்தால் பூண் பிடித்ததுமான கத்தியையும் கொடுத்து, "சூரிய பகவான் அஸ்த

மனமடைந்தார். ஸந்தியா வந்தனத்தைச் செய்து, ஸந்தோ
மாய் உறங்கவேண்டும்" என்று அகஸ்தியரிடம் உத்திரவுபெ
இராமன் அன்றிரவை அவ்விடத்தில் கழித்தார்.

पूर्वाह्णोचितमाचरन्रघुपतिस्सौस्नातिकं कुम्भजम्
प्रत्याहस्वपितुर्गृहेयदभवत्सौख्यंतदत्रेतिसः ।
पित्रादिष्टवनाधिवाससमयस्सन्तारितः प्रायशः
क्षेमेणव्यपनीयशेषमनघंतातंचरेत्युक्तिगम् ॥ ४३

இராமன் காலையில் செய்யவேண்டிய நித்தியகர்மான
செய்து, நல்ல ஸ்னானத்தை வினவுகிறவரும், "தந்தை உத்தி
செய்த வனவாஸத்தில் மிகுந்தகாலம் சென்றது. மீதி இருக்
காலத்தையும் க்ஷேமமாகக் கழித்து, தந்தையைப் பாபமற்
ராய் செய்யவேண்டும்" என்று சொல்லும் அகஸ்தியரைப் பா
த்து "தன் பிதாவின் கிருஹத்தில் இருக்கும் சுகம், தங்களின் கி
ஹத்திலுமிருக்கிறது" என்று பதில் கூறினார்.

देशस्यास्य विनिर्गतां सुविपदं सम्पत्तिमभ्यागताम्
रामायाकथयन्निजाऽऽगमनतः कुम्भोद्भवस्तापसः ।
त्यक्तोदण्डकभूभृतषविषयस्सूनोर्भृगोश्शापतः
हीनोवृक्षलताभिरुग्रकृतिभिस्सोपद्रवोराक्षसैः ॥ ४४

அகஸ்தியர் தன் வரவால் இந்த தேசத்திற்கு துன்
விலகி, ஸம்பத்தின் வரவை இராமனிடம் கூறினார். "இ
தேசம் பிருகு புத்திரனுடைய சாபத்தால் தண்டக பூபதி
கைவிடப்பெற்று, கொடி, செடிகள், மரங்கள் இல்லாமலும், ப
கரமான உருவம் பெற்ற இராக்ஷஸர்களால், துன்பம் பெற்
இருந்தது."

दैवादत्रसमागतेनहिमयाच्छैलान्मयात्रारिदाः
वर्षन्तिस्मयथेष्टमम्बुतपसाऽऽनीताद्रुमानन्दनात् ।
नद्यश्चामृतपाथसोदनुसुतास्त्वत्प्राप्तिरुष्टामुनीन्
हिंसन्त्यद्यनिराकुरुप्रशमितान्ब्रह्मकुधारक्षसः ॥ ४५

"தெய்வத்தின் செயலால் ஹிமயமலையிலிருந்து, நான் வந்து தவத்தால் மேகங்களை வரவழித்து, வேண்டியவரை ஜலத்தை வர்ஷிக்கச் செய்தேன். இந்திரனுடைய நந்தவனத்திலிருந்து,மரங்களையும்,அமிருதம் போன்ற ஜலம்பெற்ற நதிகளையும், வரவழைத்தேன். இராக்ஷஸர்கள் உன் வரவால் கோபமடைந்து, ரிஷிகளை ஹிம்ஸிக்கிறார்கள். ஹே இராமா! பிராமணர்களின் கோபத்தால் அழிவுபெற்ற அரக்கர்களை இப்பொழுது நீ சிக்ஷிக்கவேண்டும்."

१२ रामप्रीतिमुपाऽऽगतोऽस्मिभवतोभ्रात्रास्त्रियाऽभ्यागतैः
निश्शेषंकुरुमार्गखेदमनुगामत्राधिवासात्प्रियाम् ।
सौगुण्यैकनिधिंप्रहर्षयसतींवेद्मित्वदिष्टंतप
वीर्याद्यान्निखिलोऽपिवेत्स्यति जनस्स्वंव्यक्तमत्रस्थितम् ॥

"ஹே இராமா நீ தம்பியோடும் மனைவியோடும் இவ்விடம் வந்ததால் நான் ஸந்தோஷமடைகிறேன். வழி நடந்ததால் வந்த சிரமத்தை விலக்கி விடு. பின் தொடர்ந்து வந்தவளும், நற்குணங்களுக்கு ஓரிடமும், அன்பு பெற்ற பதிவிரதையுமான ஸீதையை ஸந்தோஷமடைவிக்கவேண்டும் இவ்விடத்தில் இருக்கும் தன்னை, பிரகாசமாய் எல்லா ஜனங்களும் அறியப்போகிறார்கள் என்று உன் விருப்பத்தைத்தவத்தின் பலத்தால் அறிகிறேன்."

वृक्षैरन्वितईडितामभिगतो गोदावरींसौख्यदः
देशः पञ्चवटीति विश्रुतइतस्सोऽस्तिद्वययोजने ।
कान्तारंसमधूकवृक्षनिचयं तस्योत्तरेणव्रज .
न्यग्रोधंस्थलमेत्यभोरुपगिरंतंप्रीतिमानावस ॥ ४७ ॥

"மரங்களோடு கூடியதும், துதிக்கப்பெற்ற கோதாவரியை அடைந்ததும், சுகங்கொடுக்கும் பஞ்சவடி என்ற பிரசித்தமான தேசம் இவ்விடமிருந்து இரண்டு யோஜனை தூரத்தில் இருக்கிறது. மதூக வனத்திற்குச்சென்று, அதற்கு வடக்காக ஆலமரத்தை அடைந்து, போக வேண்டும்- (மேடான) பொட்டலையும் அடைந்து, மலையின் ஸமீபத்தில் அத்தேசம் சென்று, ஸந்தோஷமாய் அவ்விடத்தில் குடி யிருக்க வேண்டும்."

१४ रामोऽगस्त्यनिदेशतः प्रचलितोमध्येऽध्वतद्वेश्मनः ।
गृध्रं वीक्ष्यवटस्थमूर्जिततनुंमत्वा त्रियामाचरम् ।
कोऽसीतिन्ययुनक्सखातवपितुर्नाम्नाजटायुस्सुतः
श्येन्यावत्सतवोपकारकरणस्तेनेत्यवाच्यादरात् ॥ ४८ ॥

இராமன் அகஸ்தியருடைய உத்திரவால், அவருடை
ஆச்ரமத்திலிருந்து, பிரயாணம் செய்து, நடு வழியில் ஆலமரத்தி
லிருக்கும் பலமான சரீரம் பெற்ற கழுகைப்பார்த்து, இராக்ஷ
ஸனாக நினைத்து, "நீ யார்" என்று வினவினார். "ஹே குழந்தாய்
நான் உன் தந்தையின் ஸ்நேஹிதன். கழுகின் புத்திரன். ஜடா
என்று பெயர். உனக்கு உதவி செய்கிறேன்" என்று அது அன்
போடு கூறினது.

१५ सीतां पालयितुंजटायुषमथप्रेम्णाऽऽदिशन्प्रेयसे
आत्तपञ्चवटीमुपत्यनिलयं क्लृप्तंपादपैः ।
नेदिष्ठानळिनीशिवाम्बुभरिता गोदावरीयस्यसा
दत्वाऽऽश्लेषमुवासतत्कृतनतौ रामस्ससीतस्सुखी ॥ ४९

ஸீதையைக்காப்பாற்றும்படி, ஜடாயுவுக்கு அன்பால் உ
திரவு செய்து, இராமன் பஞ்சவடிக்கு சென்று, தாமரைகளைப்
ற்றதும், புண்ய தீர்த்தம் நிறைந்ததுமான கோதாவரிக்கு
பத்தில், மரங்களால் சூழப்பெற்ற கிருஹத்தை நிர்மாணம் செய்
பிரியமுள்ள ஸஹோதரனைக்கட்டிக்கொண்டு, அவனால் வண
கப்பெற்று, ஸீதையோடு சுகமாக வஸித்தார்.

१६ हेमन्तस्ससमाजगामसतपोविद्वेषिविध्वंसन
श्रद्धायारघुनायकायसमयंदातुंसचेताइव ।
तस्मिन्ब्राह्ममुहूर्तएवसययौ स्नानायगोदावरीम्
सस्त्रीकः परितोविलोक्यघटभृद्भ्रात्रेत्थमाभाष्यत ॥ ५०

தவம் செய்யும் ரிஷிகளின் சத்ருக்களை ஸம்ஹரிக்க வேண்டுமென்கிற இராமனுடைய கருத்திற்கு சமயம் கொடுக்க வேண்டுமென்று மனம் பெற்றது போல் அந்த ஹேமந்தருது வந்தது. அந்த ஸமயத்தில் இராமன் மனைவியோடு பிராம்மமுஹூர்த்தத்திலே ஸ்நானம் செய்வதற்காக கோதாவரிக்குச் சென்றார். குடத்தை எடுத்துக்கொண்டு வரும் லக்ஷ்மணன் நான்கு புறமும் பார்த்து இவ்விதம் கூறினான்.

नीहारेणदिशोवृतास्तनुभृतां भीतिंगतानामिव
ज्ञायन्तेनमनाकृताग्रयणका अर्चन्तिसन्तः पितॄन् ।
भास्वान्यौवनमत्तया कवलितोवृद्धस्स्त्रियेवात्मन
प्राभातिद्विगुणः प्रवातिपवनश्शीतत्वतोऽद्याऽऽर्यसः ॥

"ஹே அண்ணா! திசைகள் பனியால் மூடப்பெற்று பயந்த மனிதர்களுக்குத் தெரியாமலிருப்பது போல் மனிதர்களுக்குக் கொஞ்சங்கூடத் தெரியவில்லை. பெரியோர்கள் ஆக்ரயண இஷ்டி செய்து பித்ருக்களுக்கு சிராத்தம் செய்கிறார்கள். யௌவனத்தால் மதம் பெற்ற பெண்ணின் வசமான கிழவன் போல் இக்காலத்தில் சூரியன் பிரகாசிக்க வில்லை. இப்பொழுது குளுமை இரட்டித்தது தென்றால் காற்று வீசுகிறது."

धर्माऽऽत्मामरतः पुरेऽव्यसनवान्कुर्यात्तपस्त्वद्रतः
त्यक्त्वाराज्यसुखंतलेऽतिशिशिरे भूम्याश्शयीतानघः ।
प्रातश्शीततराम्भासिव्रतकरस्स्नायात्सरय्वाः कथम्
कैकेय्या अतिदुर्नयस्यवसतेर्मातुः खलत्वं जहौ ॥ ५२ ॥

"குற்றமற்ற தர்மத்தின் உருவமான பரதன் உன்னிடத்தில் அன்பு பெற்று துக்கத்தால் பட்டணத்தில் இராஜ்ய சுகத்தை விட்டு மிகவும் குளுமையான பூமியின் தலத்தில் உறங்குவான். விரதங்களைச்செய்து கொண்டு காலையில் குளிர்ந்த சரயூ நதியின் ஜலத்தில் எவ்விதம் ஸ்நானம் செய்வான்! அதிக கெட்ட நடைக்கு இருப்பிடமான தாயார் கைகேயினுடைய துஷ்டத்தனத்தைத் துறந்தான்."

पत्यौसच्चरितेसुते कथमभूत्क्रूराऽऽशया कैकयी
सौमित्रौब्रुवतीत्यसोढजननीनिन्दोऽब्रवीद्राघवः ।
मुञ्चाम्बापरिवादमार्यभरतंस्तुह्यद्यमन्मानसम्
धीरंयच्चरितुंवनेभरतगंतद्दृश्यतेकातरत् ॥ ५३ ॥

"புருஷனும் புத்திரனும் நன்னடையாயிருக்கும் பொழுது கைகேயி எவ்விதம் கெட்ட மனம் பெற்றாள்" என்று இலக்ஷ்மணன் சொல்லும்பொழுது இராமன் தாயாருடைய நிந்தையைப் பொறுக்காமல் இலக்ஷ்மணனைப்பார்த்துக் கூறினார். "தாயாருடைய நிந்தையை விடவேண்டும். நன்னடை பெற்ற பரதனை ஸ்தோத்திரம் செய்ய வேண்டும். இப்பொழுது வனத்தில் ஸஞ்சரிப்பதற்கு தைரியம் பெற்ற என்மனமும் பரதனிடத்தில் சென்று பயமடைகிறது."

तद्वाक्यानिविचिन्तयामिसुधयातुल्यानिसभ्रातृकम्
तंपश्येयपुनः कदेति विलपन्सप्राप्यगोदावरीम् ।
स्नात्वादारयुतः पितॄनपिसुरान्सन्तर्प्यसूर्यन्नमन्
पत्नीभ्रातृयुतोऽव्यराजतहरस्साम्बोयथानान्दिना ॥ ५४ ॥

"அமிருதத்துக்கு ஸமமான அந்த பரதனுடைய சொற்களை நினைக்கிறேன். சத்ருக்னனோடு அவனை மறுபடியும் எப்பொழுது காணுவேன்" என்று புலம்பிக்கொண்டு இராமன் கோதாவரியை அடைந்து மனைவியோடு ஸ்நானம் செய்து சூரியனை வணங்கி சிவபெருமான் அம்பிகையோடும், நந்திகேஸ்வரனோடும், இருப்பது போல் மனைவி, தம்பி, இவர்களோடு விளங்கினார்.

१७ गोदावर्युदकेदिनाऽऽदिमविधिंनिर्वृत्यरामंगतम्
पर्णागारमुपाऽऽश्रितंनियमिभिर्भ्रात्राऽन्वितंसीतया ।
पुंसांमोहनरूपमापरजनीचर्युग्ररूपाबलात्
विद्धाशूर्पणखामनोभवशरैर्लङ्कापतेस्सोदरी ॥ ५५ ॥

கோதாவரி தீர்த்தத்தில் காலையில் செய்ய வேண்டிய கர்மா வை முடித்துக்கொண்டு பர்ணசாலைக்கு வந்து ரிஷிகளால் பூஜிக் கப்பெற்று தம்பியோடும் மனைவியோடும் கூடின வரும் புருஷர் களும் மோஹிக்கும்படி ரூபம் பெற்ற இராமனை பயங்கர உரு வம் பெற்றவளும் முறம் போல்நகங்களைப்பெற்ற சூர்ப்பநகை என்ற இலங்கை வேந்தனுக்குத்தங்கையான இராக்ஷஸீ மன்மத பாணங்களால் பலமாக அடி பெற்று அடைந்தாள்.

राजल्यज्ञनसंयुतंजटिलकंपञ्चाऽऽननोर्जस्वलम्
रामंशूर्पणखाऽब्रवीत्सुवदनंभीमाऽऽननाराक्षसी ।
कस्त्वंतापसरूपभृत्सशरधिः प्राप्तः कथंराक्षसैः
देशंसेवितमेतमागतिभवंब्रूह्ययतेवाञ्छितम् ॥ ५६ ॥

இராஜ லெக்ஷணம் பொருந்தியும் தலையில் சடைகளைத் தரித்து சிங்கம் போல் பலம் பெற்றவனும் அழகிய முகமுள்ள இராமனைப்பார்த்து, பயங்கரமான முகம் பெற்ற இராக்ஷஸீ, ரிஷி ரூபம் பெற்று அம்பு பெட்டிகளோடு கூடிய நீ யார்? இரா க்ஷஸர்கள் ஸஞ்சாரம் செய்யும் இவ்விடத்திற்கு எதற்காக வந் தாய். இப்பொழுது உன் வரவால் வந்த விருப்பத்தைச் சொல்ல வேண்டுமென்று கூறினாள்.

उक्त्वास्वस्यकथामशेषमपितां काऽसित्वमित्यादरात्
पृच्छन्तंमृदुभाषिणंतमवदत्क्रूरस्वनासाप्रति ।
स्वस्यभ्रातृबलंयथेष्टगतितां नित्यंनिवेद्यप्रियम्
कान्तक्रीडमयावधूंसहसुत्राद्राक्भक्षयिष्यामिते ॥ ५७ ॥

தன் கதையை மீதி இல்லாமல் சொல்லி அவளைப்பார்த்து நீ யார்?" என்று அன்போடு வினவும் மெதுவாகப்பேசும் இரா மனைப்பார்த்து பயங்கரமான சப்தம் பெற்ற அந்த சூர்ப்பநகை தனக்கு இருக்கும் ஸஹோதரர்களின் பலத்தையும் இஷ்டம் போல் ஸஞ்சாரம் செய்யும் திறமையையும் எப்பொழுதும் ஆசையையும் தெரிவித்து "ஹே நாதா! என்னோடு ரமிக்க வே ண்டும். உன் மனைவியையும் தம்பியையும் சீக்கிரம் சாப்பிடப் போகிறேன்" என்று பதில் கூறினாள்.

१८ भार्यावानहमेतया तवभवेत्क्लेशस्सपत्नीकृतः
भद्रे त्वामयमर्हतिप्रियतमामेनंभजादारकम् ।
रामेणेति विबोधिता पिशितभुक्सौमित्रिमित्याब्रवीत्
भर्तामेभवसञ्चराम्यपभयासर्वान्त्वयादण्डकान् ॥

"நான் இவளை மனைவியாகப்பெற்றிருக்கிறேன் ஸௌ
கியம் பெற்றவளே! உனக்கு சக்களத்தியால் துன்பம் ஏ
இவன் தாரமில்லாதவன். இவன் உன்னை மனைவியாக அ
த்தகுந்தவன். இவனை நீ அடைய வேண்டும்" என்று இரா
போதிக்கப்பெற்ற அந்த இராக்ஷஸி இலக்ஷ்மணனிடம் வ
'நீ எனக்கு புருஷனாக இருக்க வேண்டும். உன்னோடு எ
தண்டகாரண்யமும் பயமில்லாமல் ஸஞ்சரிக்கப்போகிறே
என்று கூறினாள்.

दासोऽस्याहमयंप्रभुर्ममचिरंकिंवाञ्छसिप्रेष्यताम्
त्वंराज्ञीभवसोदरंममगता भार्याभवास्यापरा ।
वृद्धांत्यक्ष्यतिपूर्वजामितिहतप्रज्ञाच्छलेनोदिता
त्यक्त्वाभ्रातरमन्तिमंप्रथमजंप्रापाऽऽश्रमान्तर्गतम् ॥

"இவர் எனக்கு வெகுகாலமாக எஜமானன். நான் இ
க்கு வேலைக்காரன். வேலைக்காரியின் தன்மையை விரும்புகி
என்னுடைய அண்ணனை அடைந்து நீ எனக்கும் எஜமானி
இருக்கவேண்டும். கிழவியான மூத்தாளைத் தள்ளிவிடுவா
என்று இலக்ஷ்மணனால் கபடமாகச் சொல்லப்பெற்ற
கெட்ட இராக்ஷஸி இலக்ஷ்மணனை விட்டு ஆசிரமத்திற்கு
க்கும் இராமனை அடைந்தாள்.

भार्यांप्राप्य विरूपिणीमसदृशींमामत्यजोयद्वराम्
खादित्वातवपश्यतोमनुजजां निर्वैरिणीस्यामिति ।
धावन्तीमभिमैथिलीमसुहृदंक्रुद्धामशात्तांप्रभुः
नासाकर्णनिकृन्तनेनतनुभृन्नाथोऽनुजेनद्रुतम् ॥

தனக்குத் தகுதியில்லாமல் குரூபம் பெற்ற மனைவியை அடைந்து அழகான என்னைத் தள்ளினதால், நீ பார்த்திருக்கும் பொழுது இந்த மனிதப் பெண்ணை சாப்பிட்டு சத்துரு வில்லாமல் இருப்பேன், என்று ஸீதைக்கு எதிராக ஓடிவருங் கோபமடைந்த அந்த துஷ்டையை வலிமைபெற்ற அரசனான இராமன் சீக்கிரம் தம்பியால் மூக்கு காதுகளை அறுத்து சிக்ஷித்தார்.

साघोरस्वनिता विरूपिततनुस्संप्रद्रुता कानने
वीरंप्राप्यखरंनराशनवृतं भीत्याजनस्थानगा ।
रामंलक्ष्मणमैथिलीसहचरंकान्तारमभ्यागतम्
तेनस्वस्यविरूपणंसधनुषा तस्मा उवाचाखिलम् ॥ ६१ ॥

குரூபமான சரீரம் பெற்ற அந்த சூர்ப்பனகை பயங்கரமாக சப்தித்துக்கொண்டு பயத்தால் காட்டில் ஓடி, ஜனஸ்தானஞ் சென்று இராக்ஷஸர்கள் சூழ்ந்திருக்கும் வீரனான கரனை அடைந்து, இராமன் ஸீதாலக்ஷ்மணர்களோடு வனத்தில் வந்திருப்பதையும், வில்லாளியான இராமன் தன்னை ரூபபங்கம் செய்ததையும், எல்லாவற்றையும் அவனிடம் கூறினாள்.

१२ भ्राता विक्रमतः खरेणसमरेसत्याभिधेनस्वसुः
चित्तंमानुषयोस्त्रियाश्चरुधिरंपातुंसकामंभृशम्
वीराः प्रीणयितुंचतुर्दशतदादिष्टाः पलादाद्रुतम्
जग्मुस्तत्रवराऽऽयुधानृपसुतौयत्रस्तईड्यौसुरैः ॥ ६२ ॥

பலத்தால் யுத்தத்தில் கடுமையாயிருப்பதால் கரன் என்று உண்மை பெயர் பெற்ற ஸஹோதரனால் இரண்டு மனிதர்கள் ஒரு பெண் இவர்களுடைய இரத்தத்தைக் குடிக்க மிகவும் ஆவலுள்ள தங்கையின் மனம் ஸந்தோஷமடைவதற்காக அப்பொழுது உத்திரவு செய்யப்பெற்று பதினான்கு இராக்ஷஸர்கள் நல்ல ஆயுதங்களை எடுத்துக் கொண்டு, தேவர்களால் துதிக்கத்தகுந்த இராமலக்ஷ்மணர்கள் இருக்குமிடத்திற்கு சீக்கிரம் சென்றார்கள்.

२० आलोक्याऽऽत्मसमीपगान्नरभुजोरक्षास्त्रियासंयुतान्
आदिश्याऽऽत्मवधूंसगोप्तुमनुजंरामोविमोक्ष्यन्शरान् ।
हन्तुंवोवनचारिणांवचनतः प्राप्तोऽस्मियोद्धुंमतिः
चेदायातखलानचेद्द्रुतमितोनिर्गच्छतेत्याहतान् ॥ ६३

சூர்ப்பனகையோடுகூட தன்சமீபத்தில் வந்த மனிதர்களை பிடும் இராக்ஷஸர்களைப் பார்த்து, இராமன் தன் மனைவியைக் காப்பாற்றும்படி தம்பிக்கு உத்திரவு செய்து பாணங்களை விடுவதற்கு "ஹே துஷ்டர்களே! வனத்திலிருக்கும் ரிஷிகளின் உத்திரவால் களை வதம் செய்ய நான் வந்திருக்கிறேன். யுத்தம் செய்ய மிருந்தால் வாருங்கள். இல்லாவிட்டால் சிக்கிரம் இவ்விடமி புறப்படுங்கள்" என்று அவர்களைப் பார்த்து கூறினர்.

कृत्वाविप्रियमात्मनोऽधिपतये किंजीवितुंवाञ्छसि
त्यक्ष्यस्यद्यमयाहतस्स्वयमसूनित्युक्तवाक्यान्निजान् ।
बन्धून्रामशराऽऽहतान्सुरपदंप्राप्तान्विलोक्यासती
भूयः प्राप्यखरंविदीर्णहृदयासंज्ञांचिरेणाऽऽदसा ॥ ६४

"எங்களுடைய அரசனுக்கு விரோதத்தைச்செய்து பிழைப்ப ற்கு விரும்புகிறாயா? எங்களிடம் அடிபெற்று இப்பொழுது பிராணனை விடப்போகிறாய்" என்ற வார்த்தை சொல்லும் தன் க்கள் இராமபாணங்களால் அடிக்கப்பெற்று சுவர்க்கம் சென்றதை பார்த்து, அந்த துஷ்டை மறுபடியும் கரனை அடைந்து, மனம் ந்து, வெகு நேரத்தில் நினைவை அடைந்தாள்.

२१ सन्त्रस्ता पिशिताशनातमवदत्सोदर्यमात्मेप्सितम्
हानाथेतिविनद्यभीममाहिवत्क्रुद्धालुठन्तीक्षितौ ।
वीरास्तेपुरुषाश्शरै रभिहता रामेणतस्मादव
क्लिष्टांमां खरचेद्बलंतवमहन्मद्वैरिणंशाधितम् ॥ ६५

மாம்ஸம் ஸாப்பிடும் இராக்ஷஸீ பயந்து, அந்த ஸஹோதரனிடம் ஹே நாதா! கஷ்டம் என்று பயங்கரமாய் அலறி, ஸர்ப்பம் போல் கோபித்து பூமியில் புரண்டு கொண்டு "ஹேகரா! உன் வீரபுருஷர்கள் இராம பாணங்களால் அடிக்கப்பெற்றுர்கள். துன்பமடைந்த என்னை இராமனிடமிருந்து காப்பாற்றவேண்டும். உனக்கு அதிக பலமிருந்தால் என் சத்துருவான அந்த இராமனை சிக்ஷிக்கவேண்டும்" என்று தன் விருப்பத்தைக் கூறினுள்.

धिग्वीर्यंतवसोदरींव्यसनिनींयत्पश्यसिप्राभवे
नत्वंजातुतयोस्ससमोमनुजयोर्निस्सत्ववासः कथम् ।
तेऽस्मिन्दण्डककाननेत्त्वपसरक्षिप्रंजनस्थानतः
मोक्ष्यामिस्वयमप्यसूनितिरवा कुक्षिंकराभ्यामहन् ॥ ६६ ॥

"ஸாமர்த்தியம் இருக்கும் பொழுது ஸஹோதரி துக்கமடைவதை நீ பார்க்கிறபடியால் உன் பலத்தை நிந்திக்கவேண்டும். ஒரு காலத்திலும் அந்த இரண்டு மனிதர்களுக்கு நீ ஸமமில்லை. ஹே பல மற்றவனே! உனக்கு தண்டகாரண்யத்தில் வாஸம் எதற்காக. ஜனஸ்தானத்திலிருந்து சீக்கிரம் ஓடு. தானே என் பிராணன்களை விடப்போகிறேன்." என்று சப்தித்துக்கைகளால் வயிற்றில் அடித்துக் கொண்டாள்.

२२ आश्वास्याभिमतां स्वसारमतनुंस्वंसारमावेदयन्
युद्धायाभिमतान्चतुर्दशधनुर्वीरान्सहस्राण्यपि ।
सेनाऽधीश्वरदूषणेनपुरतोनिर्यापयन्शस्त्रभृत्
प्राप्यस्यन्दनमात्मनोगमायितुंसूतंनुनोदाथसः ॥ ६७ ॥

பிறகு கான் பிரியமான தங்கையை ஸமாதானம் செய்து, அவளிடம் தன் மிகுந்த பலத்தைத் தெரிவித்து, தனக்கு ஸம்மதமான பதினுலாயிரம் வில் எடுக்கும் வீரர்களை யுத்தத்திற்காக ஸேனுபதியான தூஷணன் மூலமாக முன்னுல் புறப்படும்படி செய்து, தான் ஆயுதங்களை எடுத்துக்கொண்டு தன் இரதத்தில் ஏறி அதை நடத்தும்படி ஸாரதியை ஏவினுன்.

२३ उत्पातानहितप्रदानगणितान्वीक्ष्यापि मोहात्खरः
देवेभ्योनबिभेमि किंमृतिमतोमर्त्यादितिव्याहरन् ।
रामंप्रापबलाधिपैश्चसचिवैस्तत्कालपाशाऽऽवृतः
तद्युद्धंप्रदिदृक्षवोमुनिसुराः खंरामशर्मैषिणः ॥ ६८॥

துன்பத்தைக் கொடுக்கும் எண்ண முடியாத அபசகுனங்களைப்பார்த்தும், கான் நான் தேவர்களிடமும் பயமடைகிறதில்லை. மரணம் பெற்ற மனிதர்களிடத்தில் பயமடைவேனு? என்று அறிவில்லாமல் சொல்லிக்கொண்டு அந்த காலபாசத்தால் சுற்றப்பெற்று ஸேனைத் தலைவர்களோடும் மந்திரிகளோடும் இராமனை அடைந்தான். தேவர்களும் ரிஷிகளும் அவர்களின் யுத்தத்தைப் பார்க்க விரும்பி இராமனுக்கு க்ஷேமத்தையும் விரும்பிக்கொண்டு ஆகாயத்தை அடைந்தார்கள்.

२४ आलोच्याऽऽत्मजयंरिपोरपजयंरामोनिमित्तेक्षणात्
वत्सत्वंद्रुतमाश्रयाचलगुहां संरक्षसीतामिति ।
सन्दिश्यानुजमुत्सुकःकवचभृच्चापंविनम्यातनुम्
बाणानाददतानोद्धधिरिता आशादशज्यास्वनैः ॥ ६९॥

இராமன் சகுனங்களைப் பார்த்ததால் தனக்கு ஜயத்தையும் சத்துருவுக்கு அபஜயத்தையும் நினைத்து "ஹே குழந்தாய்! நீ சீக்கிரம் பர்வதத்தின் குஹைக்குச் செல்லவேண்டும். ஸீதையைக் காப்பாற்றவேண்டும்." என்று தம்பியிடம் உத்திரவு செய்து ஸந்தோஷமாக கவசத்தை தரித்துக் கொண்டு பெரியவில்லை வளைத்து, பாணங்களை எடுத்து, நாணின் சப்தத்தால் பத்து திக்குகளையும் செவிடாகச் செய்தார்.

एकोराघवउन्मदा निशिचरायुद्धंकथंस्यादिति
व्योम्निव्योमचरेषुसत्स्वभिहितत्रैलोक्यभव्येषुतत् ।
दृष्ट्वाराक्षससैन्यमप्यतिबलान्विद्रावयत्श्वापदान्
आधात्क्रोधममेयमीश्वरइवप्रध्वंसकंरक्षसाम् ॥ ७०

இராமன் ஒருவன்; அதிகமதம் பெற்ற இராக்ஷஸர்கள் பலர். எவ்விதம் யுத்தம் நடக்கும், என்று தேவர்கள் முதலியவர்கள் மூன்று உலகங்களுக்கும் க்ஷேமத்தை வேண்டிக்கொண்டு ஆகாயத்திலிருக்கும் பொழுது அதிக பலம் பெற்ற பிராணிகளையும் விரட்டி விடும் அந்த இராக்ஷஸஸைனியத்தைப் பார்த்து ஈசுவரன்போல் இராக்ஷஸர்களை ஸம்ஹரிக்கும் அளவற்ற கோபத்தை இராமன் அடைந்தார்.

२५ वल्मीकादिवपन्नगारघुपतेस्तूणीविलान्निर्गताः
निस्संख्याइषवः खरस्यपृतनारात्रिञ्चरान्दुर्दमान् ।
स्वंशस्त्रैः परिजघ्नतोऽपिरभसाऽऽपीतासुवातान्द्रुमान्
चक्रुर्निष्पतितान्खगेन्द्रगरुतोवातैरिवोन्मूलितान् ॥ ७१ ॥

புற்றிலிருந்து ஸர்ப்பங்கள்போல், இராமனுடைய அம்புபெட்டியிலிருந்து கணக்கில்லாமல் வெளியில் வந்த பாணங்கள், அடக்கமுடியாத கரனுடைய ஸைனியத்திலிருக்கும் இராக்ஷஸர்கள், தன்னை ஆயுதங்களால் நான்கு புறத்திலும் அடித்துக்கொண்டிருந்தும், சீக்கிரம் அவர்களின் பிராண வாயுக்களைக் குடித்து, கெருடனுடைய இறக்கைக் காற்றுகளால் மரங்கள் வேர் பிடுங்கலாக விழுவதுபோல் விழும்படி செய்தன.

सेनान्या भृशसान्त्विताः खरचमूशिष्टा असृक्पायिनः
गान्धर्वास्त्रनिषूदितामितबलानाद्रक्षुरग्रेस्थितम् ।
बाणानाददतंपुनः प्रददतंभीमांमुहुर्ज्यांचलाम्
कर्षन्तंयुगपद्भुविप्रपतितान्सर्वान्त्वपश्यञ्जनान् ॥ ७२ ॥

ஸேனாதிபதியான தூஷணனால் ஸமாதானம் பெற்ற கரனுடைய ஸைனியத்தில் மீதியுள்ள இரத்தபானம் செய்யும் இராக்ஷஸர்கள் தங்களின் அளவற்ற பலமும், காந்தர்வாஸ்த்திரத்தால் நாசமடையும் பொழுது, முன்னிலையில், இருந்து இராமன் பாணங்களை ஒரே காலத்தில் எடுப்பதையும், மறுபடியும் விடுகிறதையும், பயங்கரமாய் அசைந்து கொண்டிருக்கும்படி நாண்கயிற்றை அடிக்கடி இழுப்பதையும் பார்க்கவில்லை. பூமியில் எல்லா ஜனங்களும் விழுந்து கிடப்பதைப் பார்த்தார்கள்.

२६ रामोदूषणमार्यदूषणमथक्रुद्धः क्षुरेणाच्छिनत्
चापंतस्यहयान्चतुर्भिरिषुभिस्सूतोत्तमाङ्गंहरन् ।
विद्याधोरसिसायकैस्त्रिभिरमुंहस्तौ शराभ्यांहरन्
भूमौतंसमपातयाद्दिविचरैस्संपूजितस्साध्विति ॥ ७३ ॥

பெரியோர்களை தூஷிக்கும் தூஷணனுடையவில்லை, இராமன் கோபமடைந்து க்ஷுரம் என்ற பாணத்தாலும், அவனுடைய குதிரைகளை நான்கு பாணங்களாலும், ஸாரதியின் சிரஸ்ஸை (அர்த்த சந்திர பாணத்தாலும்), அறுத்து, மார்பில் மூன்று பாணங்களால் அடித்து, இரண்டு பாணங்களால் கைகளை அறுத்து, தேவர்கள் நல்லது என்று புகழும்படி தூஷணனை பூமியில் தள்ளினார்.

त्रीन्सेनाऽधिपतीन्खरस्यत्रिशिरवैस्तान्दूषणप्रेयसः
कृत्वातस्यपदानुगान्दशशतान्यार्योऽकरोत्पञ्चतान् ।
याम्यस्याप्यतिथीन्गृहस्यनिधनंसंवाच्छतोद्वादश
श्रेष्ठान्सानुगतान्बलस्यदययाप्राप्तेप्सितानातनोत् ॥ ७४ ॥

கரனுடைய மூன்று ஸேனாதிபதிகளையும் அம்புகளால் தூஷணனுக்கு சிநேஹிதர்களாகவும் செய்து, அவனுடைய காலாட்படைகள் ஐயாயிரம் இராக்ஷஸர்களையும் இராமன் எமகிருகத்திற்கு விருந்தாளிகளாகவும், மரணத்தை விரும்பி வேலைக்காரர்களோடு வந்த பனிரெண்டு ஸேனாதிபதிகளையும் அவர்களின் விருப்பத்தை தயவாய் அடைவித்தார்.

२७ युद्धोद्युक्तमविक्लबंत्रिशिरसंबाणैर्ललाटे त्रिभिः
स्वस्यक्लेशकमस्यसूत मिषुभिस्संपातयन्नष्टभिः
तद्वाहान्चतुरश्चतुर्भिरथतत्केतुंहरन्नुच्छ्रितम्
भिन्दन्त्रीनपिमूर्ध्न आहवपटुस्स्वर्लोकमावासयत् ॥ ७५ ॥

யுத்தத்தில் ஸமர்த்தனான இராமன், யுக்த முயற்சியோடு பயமில்லாமல் தன் வெற்றியில் துன்பம் விளைவிக்கும் திரிசிரஸ்ஸின் (மூன்று தலையுள்ளவன்.) ஸாரதியைஎட்டுப் பாணங்களால் விழச் செய்து, அவனுடைய நான்கு குதிரைகளையும் நான்கு பாணங்களாலும், பிறகு உயர்ந்த கொடியையும், (பாணத்தால்) விழச்செய்து, மூன்று தலைகளையும் மூன்று பாணங்களால் அறுத்து, அவனை ஸ்வர்க்கலோகத்தில் வசிக்கும்படி செய்தார்.

௭௮ सैन्यंवीक्ष्यनिषूदितंबलपतीन्भीतिंत्विदंपूर्विकाम्
प्राप्तंक्रोधविवर्धिताभिधखरंविध्यन्तमुग्रेषुभिः ।
रामोवाञ्छिततद्वधो विनमिताच्चापाद्व्यमुञ्चच्छरान्
अन्योन्येषुसमावृतोनविबभावर्कोऽकालेयथा ॥ ७६ ॥

ஸைனியங்களும், ஸேனாதிபதிகளும், நாசமடைந்ததைப் பார்த்து, இப்பொழுது புதிதாய் முதலில் வந்த பயத்தை அடைந்தவன், கோபத்தால் கரன் என்று துஷ்டனென்கிற பெயரை வளர்த்துக்கொண்டு, பயங்கரமான பாணங்களாலடிக்கும் கரனை, இராமன் வதம்செய்ய விரும்பி, வளைக்கப்பெற்ற வில்லிலிருந்து பாணங்களை விடும்பொழுது, வருஷாகாலத்தில்போல் சூரியன் ஒருவருக்கொருவர்களின் பாணங்களால் மறைக்கப்பெற்று பிரகாசிக்கவில்லை.

छित्वास्यशरंचचापममितंपाण्योर्बलंदर्शयन्
वर्मभिद्यममोघबाणदलितंकृत्वाखरोऽतिध्वनन् ।
अश्रान्तेनगृहीतविष्णुधनुषा रामेणषण्मार्गणैः
बाह्वोर्मूर्धनिवक्षसिध्वजमधोनिष्पात्यचाहन्यत ॥ ७७ ॥

தன்னுடைய வில்லையும், பாணத்தையும், அறுத்து அளவற்ற கைபலத்தைக் காட்டி, பிளக்கமுடியாத கவசத்தையும், வீணில்லாத பாணங்களால் பிளந்து, மிகவும் சப்திக்கும் கரனை, இராமன் களைப்பில்லாமல் விஷ்ணு தனுஸ்ஸை எடுத்துக்கொண்டு, ஆறு பாணங்களால் அவனுடைய த்வஜத்தையும், கீழே விழச்செய்து, கைகளிலும், தலையிலும், மார்பிலும் அடித்தார்.

नाराचान्निशितान्त्रयोदशकरेकृत्वायुगंवाजिनः
सूतंतस्यदृढंत्रिवेणुमलघुंचाक्षंधनुर्बाणगम् ।
छित्वावज्रसमेषुणायुधिखरंव्याविध्यरामोगदा
पाणिर्भूमिगमातनोत्प्रमुदितैर्वैमानिकैः पूजितः ॥

இராமன் கூர்மையான பதிமூன்று நாராச பாணங்களை எடுத்து, கரனுடைய நகத்தடியையும், குதிரைகளையும், ஸாரதியும், கெட்டியான மூன்று மூங்கிலையும், பெரிய அச்சையும் பாணம் பூட்டிய வில்லையும் அறுத்து, வஜ்ரத்துக்கு ஸமமான பாணங்களால் யுத்தத்தில் கரனை அடித்து, தேவர்கள் ஸந்தோஷமடைந்து பூஜிக்கும்படி கதையைக் கையில் பெற்று, பூமியில் இருக்கச்செய்தார்.

२९ साधूनांवनचारिणां यदकरोरात्रिश्वरक्लेशनम्
निर्हेत्वस्तकृपामितंफलमिदंतस्यानुरूपंत्वया ।
लब्धंतालफलंयथातवशिरस्संपातयिष्याम्येर
सत्कृत्यस्वकुलाधमेत्यभिदधे रामः पदातिंखरम् ॥

"நற்காரியங்களுக்கு சத்ருவாயும், குலத்தில் கீழாயும், வில்லாத ஹே இராக்ஷஸா! காட்டிலிருக்கும் ஸாதுக்களுக்கு காரணமில்லாமல் துன்பம் செய்ததால், அதற்குத் தகுந்த பலன் உனக்குக் கிடைத்தது. பனம் பழத்தைப்போல் உன் தலையை செய்கிறேன்'' என்று இராமன் காலால் நிற்கும் கரனைப்பார்த்து கூறினர்.

हत्वादाशरथेऽनुगानपबलान्किंकत्थसेऽद्यस्वयम्
वीराणांप्रकृतिर्नचेयममलायावद्दिनेशोद्गतम् ।
त्वामाहत्यपुरात्वयात्वभिहतास्तेषां करोम्यश्रुणः
संमार्ष्टिंभवतोऽसृजेत्यभिदधत्क्षिप्रक्षेपरक्षोगदाम् ॥

Registered No M.

# விளம்பரம்.

ஐயா,

இரண்டு, மூன்று வருஷங்களாக வால்மீகி ராமாயணத்[illegible] ஆராய்ச்சி செய்து அதன் பாயிண்ட்களை சுருக்கி சுலோக[illegible] இயற்றி அதற்கு மொழிபெயர்ப்பும் போட்டு மிகுந்த திரவிய[illegible] சிலவால் அச்சிட்டிருப்பதால், ஆஸ்திகர்கள் அனைவரும் இ[illegible] ஆதரிக்கவேணுமாய்க் கேட்டுக்கொள்ளுகிறேன்.

வருஷ சந்தா ரூ. 3—0—0.
சஞ்சிகை 1 விலை 0—4—0.

வெளியூர் நண்பர்கள் அடியிற்கண்ட விலாசத்திற்கு 4½ அ[illegible] ஸ்டாம்பு அனுப்பிப் பெற்றுக்கொள்ளலாம்.

S. SUNDARESA SASTRIGAL,
Nemathampatti,
(Via) Chettinad

Printed by S. Kalyanasundaram, at The Sri Janardana Printing Works, L[illegible]
Town High School Road, Kumbakonam and
Published by S. Sundaresa Sastrial, Nemathampatti.

# சுந்தர ராமாயணம்

## மாத ஸஞ்சிகை.

---

| பு. 1 | ஈச்வர-௵ மார்கழி-௴ | ஸ. 6 |
|---|---|---|




ஆசிரியர்:

S. சுந்தரேச சாஸ்திரிகள்.

நேமத்தாம்பட்டி.

(செட்டிநாடு வழி.)


4

"ஹே தசரதமைந்தனே! பலமில்லாத வேலைக்காரர்களைக் கொன்று, இப்பொழுது தானாக, ஏன் புகழுகிறாய்.? இது வீரர்களின் சுத்த ஸ்வபாவமில்லை. ஸூரியன் இருப்பதற்குள், சீக்கிரம் உன்னைக்கொன்று, உன் இரத்தத்தால் முன் மரணமடைந்தவர்களின், கண்ணீரைத் துடைக்கிறேன்" என்று சொல்லி, கரன் கதையை எறிந்தான்.

३० कुर्वन्तीं ज्वलनेनभस्मचतरून्गुल्मान्गदामात्मनः
प्राप्तामन्तिकमन्तकाऽऽयुधसमा माच्छिद्यबाणैर्भृशम् ।
रामो धर्मपरोऽब्रवीद्यदपितेशौर्यंत्वयादर्शितम्
मद्बाणौघनिकृत्तकण्ठरुधिरं तमूढ भूःपास्यति ॥ ८१ ॥

அக்னியால் மரங்களையும், புதர்களையும், சாம்பலாகச்செய்துகொண்டு தன் சமீபத்தில் வந்த எமனுடைய ஆயுதத்திற்கு, ஸமமான கதையை பாணங்களால், மிகவும் அறுத்து, தர்மத்தில் விருப்பமுள்ள இராமன் கூறினார். "உன்னுடைய வலிமையைக் காண்பித்துவிட்டாய். என் பாணங்களளின், கூட்டத்தால், ஹே முட்டாளே! உன் கழுத்தை அறுத்து, அதன் இரத்தத்தை பூமி குடிக்கப்போகிறது."

त्वय्याप्रेयमगहेसत्वम्मुनयस्स्थास्यन्ति मुक्त्वाभियम्
कुर्वन्तोमखमित्युदीर्य सतरुंसन्दष्टदन्तच्छदम् ।
छित्वातत्तरुमागतं शरवरैर्मत्तं स्रवच्छोणितैः
दृष्ट्वाकिंचिदपासरन्मघवतो जग्राहजैत्रंशरम् ॥ ८२ ॥

"நீ எமலோகம் சென்றதும், இவ்விடத்தில் ரிஷிகள் பயமில்லாமல், யாகம் செய்துகொண்டு இருக்கப்போகிறார்கள்" என்று இராமன் கூறி மரத்தைத் தரித்துக்கொண்டும், உதட்டைக் கடித்துக்கொண்டும், பெருகும் இரத்தங்களால் மதம்பெற்றவனுமான (வெற்றிகொண்ட) கரனைப்பார்த்து, நல்ல பாணங்களால், அவனுடைய மரத்தை அறுத்து, கொஞ்சம் பின் விலகினார். இந்திரனுடைய வெற்றிபெற்ற, பாணத்தை எடுத்தார்.

तेनोरस्यभिताडितो रघुभुवा भूमावपप्तत्खरः
मृत्युरुश्वेतवनेयथा पुरभिदाहृष्टास्समेतास्सुराः।
एतस्मैशरभङ्गगेहमगमच्छक्रो मुनीन्द्राइह-
त्वांरामद्रुतमानयन्विरचितंनः कार्य मित्यब्रुवन्॥ ८[३]

ரகுவம்சத்தில் பிறந்த, அந்த இராமனால் கரன், அ[டி]கப்பெற்று, திருவெண்காட்டில் எமன் சிவபெருமானால் அ[டி]கப் பெற்று, விழுந்ததுபோல், பூமியில் விழுந்தான். தே[வர்]கள் ஸந்தோஷமடைந்து, ஒன்ருகக்கூடி, "இதற்காக இந்தி[ரன்] சரபங்க ஆச்ரமத்திற்கு வந்தான். ரிஷிகளும் உன்னை இவ்வ[ிட]த்திற்கு சீக்கிரம் அழைத்துவந்தார்கள். ஹே இராமா! [எங்க]ளின் காரியம் செய்யப்பெற்றது" என்று கூறினார்கள்.

रामेणैवबलाऽऽढ्यराक्षसवरा बाणैर्मुहूर्तैर्हताः
अप्यधीधिकसंज्ञके दशचतुर्युक्तास्सहस्राणियत्।
शौर्ये विष्णुसमोऽयमित्यभिहितोदेवैस्सुमैः पूजितः
रामः प्रापसुखं तपोवनगतस्सीतासमालिङ्गितः॥ ८४

"பலம் பெற்ற பதினாலாயிரம் இராக்ஷஸர்களும் ஒன்[று] முஹூர்த்தத்தில் இராமனால் வதமடைந்தார்கள். ஆன[தால்] இராமன் விஷ்ணுவுக்கு, ஸமமான பலம் பெற்றவன்" என்[று] புஷ்பங்களை வர்ஷித்து, தேவர்களால் பூஜிக்கப்பெற்ற இராம[ன்] ஆச்ரமத்திற்கு வந்து, ஸீதையால் ஆலிங்கனம் செய்யப்பெ[ற்று] சுகமடைந்தார்.

३१ श्रुत्वाऽकम्पनवक्त्रतो दशमुखोबन्धूञ्जनस्थानगान्
रामेणाभिहतान्बलं निरुपमंस्त्राजय्यतां तस्य च।
भार्याया अपहारतो विनिहतेः कर्तव्यतांतद्वचः
मत्वा सत्यमिदं विधातुमुषसि प्रातिष्ठताथक्रुधा॥ ८५

ஜனஸ்தானத்திலிருக்கும் பந்துக்கள் இராமனால் வதமடைந்ததையும், இராமனுடைய அளவற்ற பலத்தையும், தன்னால் அவரை ஜெயிக்க முடியாதென்பதையும், அவனுடைய மனைவியை அபஹரித்தால் அவனைக் கொன்றுவிடலாம் என்பதையும், இராவணன் அகம்பனன் மூலமாக அறிந்து, அவனுடைய வார்த்தையை உண்மையாக நம்பி, பிறகு அதைச் செய்வதற்காக, காலையில் கோபத்தால் பிரயாணம் செய்தான்.

आरूढो रथमुत्तमंसुरपथसंचारिणं रावणः
मारीचस्यगृहं गतोझटिति सप्रीतस्तदातिथ्यतः ।
सन्दिष्टेन समीहितस्य करणेसाह्यायतेनाऽदरात्
प्रावाच्यागतमात्मभर्तुरहितं बुध्वच्छताऽपोहितुम् ॥ ८६॥

இராவணன் ஆகாயத்தில் ஸஞ்சரிக்கும் நல்ல ரதத்தில் ஏறிக்கொண்டு, மாரீசனுடைய வீட்டிற்கு சீக்கிரம் சென்று, அவனுடை விருந்தால் ஸந்தோஷமடைந்து, தன் விருப்பத்தைச் செய்வதில் உதவியின்பொருட்டு, உத்திரவு செய்யும்பொழுது, மாரீசன் தன் எஜமானனுக்கு வந்த துன்பத்தை அறிந்து, அதை விலக்குவதற்கு விரும்பி அன்போடு இராவணனைப் பார்த்துக் கூறினான்.

कस्तेबुद्धिमदादिमां त्वदमितक्षेमं नसेहेचयः
सीतां विद्धि निशाचरान्वयाभियोदात्रीं तुकालक्षपाम् ।
मारमंहारिमात्तनिद्रमधुना संबोधयैतां धियम्
मुञ्चेत्युक्तउपागमत्पुरमरेर्विद्रावणो रावणः ॥ ८७ ॥

"ஹே இராவணா! உன்னுடைய அளவற்ற க்ஷேமத்தைப் பொறுக்காமல் உனக்கு இந்த புத்தி சொன்னவன் யார்? ஸீதையை இராக்ஷஸர்களின் குலத்திற்கு பிராணபயத்தைக் கொடுக்கும் பிரளயகால இராத்திரி என்று நினைக்கவேண்டும். தூங்கிக்கொண்டிருக்கும் இராமன் என்கிற சிங்கத்தை விழிக்கச் செய்யாதே. இப்பொழுது, இந்த புத்தியை விடவேண்டும்" என்று மாரீசனால் சொல்லப்பெற்று, சத்துருக்களை விரட்டும் இராவணன் பட்டணத்தை அடைந்தான்.

३२ बन्धून्वीक्ष्यखराऽऽदिमा नभिहतात्रामेणवीक्ष्यातनु
क्लेशाशूर्पणखाद्रुतंप्रकोपितालङ्केश्वरं प्रापसा।
निध्यध्यक्षगपुष्पकापहरणंसत्कर्मणांवारणम्
देवेन्द्राऽऽहतवज्रजव्रणकिणंलोकाऽऽपदांकारणम् ॥

கரன் முதலிய பந்துக்கள், இராமனால் அழிந்ததை பார்த்து, மறுபடியும் அதிக துக்கமடைந்த அந்த சூர்ப்பண மிகுந்த கோபத்துடன், குபேரனிடமிருந்த புஷ்பக விமா தைப் பிடுங்கினவனும், நற்காரியங்களைத் தடுப்பவனும், தேவே திரனுடைய வஜ்ராயுதத்தால் அடிபெற்று, புண்ணின் வடு பெற்றவனும், உலகங்களின் துன்பங்களுக்குக் காரணமு இராவணனை அடைந்தாள்.

ईशस्यापचितौ वराङ्गमखिलंनव्योपहारीकृतम्
येनाऽऽत्मीयममर्त्यवैरिदळनं चक्रं त्रिलोकीशितुः।
यस्याऽऽभातिसदोरसि प्रविलसद्धारस्यहीरायितम्
चित्रंकन्दुकाविभ्रमंतमकरोत्कैलासशैलेनयः ॥ ८९

எவன் தன்னுடைய தலை எல்லாவற்றையும் ஈசுவரனுடை பூஜையில் பூஜாத்ரவ்யமாகச் செய்தானோ தேவர்களின் வி திகளை ஸம்ஹரிக்கும் மூன்று உலகங்களுக்கும் அதிபதியா விஷ்ணுவின் சக்கிரமும், எவனுடைய மார்பில் எப்பொழு விளங்கும் ஹாரத்திற்கு நடுநாயகமாக விளங்குகிறதோ. எ கைலாஸ மலையால் ஆச்சரியமான பந்து விளையாட்டைச் செ தானோ.

स्वर्गसौख्यनिकेतनंत्वाधिगता अन्तर्विचिन्त्यैवयं
शुष्यन्त्यात्मविशोषमप्यनुदिनं भीत्यामहत्यागताः।
हैमंपीठमुपाऽऽश्रितंससचिवंतंराक्षसी निर्भया
प्रोवाचेदमरातिना गुरुतरंसंप्रापितावैशसम् ॥ ९०

சுகத்திற்கு இருப்பிடமான சுவர்க்கத்தை அடைந்தவர்களும் எவனைமனதில் நினைத்தே நாள் தோறும் அதிகபயம் பெற்று மனம் வருந்தி (நிர்ஜீவமாய்) வற்றுகிறார்களோ. சுவர்ண ஸிம்மாஸனத்தில் வீற்றிருக்கும் மந்திரிகளுடன் கூடிய அந்த இராவணனைப் பார்த்து, சத்துருவால் அதிக துன்பத்தை அடைந்த சூர்ப்பணகை பயமில்லாமல் மனதில் இருப்பதைச்சொன்னாள்.

३३ मत्तोयल्ललनाव्रयस्यचरमेनित्यंस्थितास्सुन्दरीः
भुंक्षेचारमुखेनलोकचरितंदृप्तोनवेत्स्यद्ययत् ।
एकेनैवपदातिनातवजस्थानस्थितंसंहृतम्
सैन्यंतत्पतयोनरेण त्रिमते शीघ्रंविनंक्ष्यस्यये ॥ ९१ ॥

"ஹே புத்தியற்றவனே! மதமடைந்து யௌவன பர்வமடைந்த மங்கைகளை தினந்தோறும் அனுபவிப்பதாலும், நீ கர்வம்பெற்று உலகஸமாசாரத்தை இப்பொழுது சாரன்முகமாக அறியாமலிருப்பதாலும், ஜனஸ்தானத்திலிருந்த உன்னுடைய ஸைனியங்களும் ஸேனாபதிகளும் கால்நடை பெற்ற ஒரே மனிதனால் நாசமடைந்தார்கள். ஹே இராவணா! அதுபோல் நீயும் சீக்கிரம் நாசமடையப் போகிறாய்"

३४ वैरूप्यंप्रव्रलेकथंन्विदामिति क्रूराऽग्रजेनाथसा
पृष्टाचदयतिस्सवीर्यमतुलंरूपंनरश्रेष्ठयोः ।
पत्नीमप्यतिसुन्दरीन्तव्रबलंचेत्तौ व्रिजेतुं चताम्
आहर्तुन्त्वरितं व्रिनिस्सरगृहादित्यादिशत्तंस्वसा ॥ ९२ ॥

"ஹே பலமுள்ளவனே ! இந்த உருவக்குறைவு எவ்விதம் வந்தது", என்று அண்ணனால் வினவப்பெற்ற துஷ்டையான சூர்ப்பணகை பிறகு இராஜகுமாரர்களின் ஒப்பற்ற பலத்தையும், அழகையும், மிகவும் அழகான மனைவியையும், தெரிவித்தாள். "உனக்கு பலமிருந்தால் அந்த மனிதர்களை ஜயிக்கவும், அந்தப் பெண்ணை அபஹரிக்கவும், வீட்டிலிருந்து சீக்கிரம் புறப்பட வேண்டும்" என்று தங்கை அண்ணனுக்கு உத்திரவு செய்தாள்.

३५ श्रुत्वाशूर्पणखावचोदशमुखः कर्तव्यमन्तस्स्मरन्
आरूढोरथमन्तरिक्षगमनं सिन्धोरनूपंययौ ।
तत्रस्थंवटपादपंयमभितश्शाखा श्शतेयोजने
विस्तीर्णाः प्रगृहीतकच्छपगजोयांवैनतेयोऽभनक् ॥ ९३

சூர்ப்பணகையின் வார்த்தையைக் கேட்டு, இராவண செய்ய வேண்டியதை மனதில் நினைத்து, ஆகாயத்தில் செல் இரதத்திலேறிக் கொண்டு, ஸமுத்திரத்தின் ஜல ஸமீபப்பிரதே தையும் அதில் கருடன், முதலை, யானை, இவைகளைத் தூ கொண்டு உட்கார்ந்து ஒடித்த நான்கு புறமும் நூறு யோ தூரம் வளர்ந்த கிளைகளைப் பெற்ற ஆலமரத்தையும் அ தான்.

शाखांयस्याविमर्दितां तदशनंगृह्णन्पदाभ्यां खगः
रक्षन्सच्चरितानधोनिवसतोन्भिल्लांस्तुतेषां द्विषः ।
आहत्यामितविक्रमान्सदनगान्गत्वा सुरेन्द्राऽऽलयम्
निर्मथ्याऽऽयसजालमन्तरगृहात्पीयूषमप्याहरत् ॥ ९४

கருடன் முறிக்கப் பெற்ற அந்த ஆலமரத்தின் கிளை யும், ஆகாரமான முதலை, யானை இவைகளையும் கால்களால் தூ கிக் கொண்டு கீழே குடியிருக்கும் ஸாதுக்களைக் காப்பாற்றி, அ வற்ற பலம் பெற்ற வீட்டில் இருக்கும் அவர்களின் சத்துரு ளான வேடர்களை அடித்து, சுவர்க லோகம் சென்று இரு வலையையும் அறுத்து, வீட்டிற்குள்ளிருந்து அமிருதத்தை அபஹரித்தான்.

मारीचस्यतपोवनं नियमिनश्चीरं जटाबिभ्रतः
प्राप्यैतेनसमर्चितस्सकुशलप्रश्नंनिजाभ्यागतेः ।
पृष्टः कारणमात्मनोऽभिलषितेसाहाय्यकं प्रार्थयत्
दीनोयोवरदे विधातुवरितुं जिहीच्छवाञ्छान्निजाम् ॥

பிரம்மா வரங்கொடுக்க வந்திருக்கும்பொழுதும், தன் விருப்பத்தை வேண்டுவதற்கு வெட்கமடைந்த இராவணன், மறைபொருளையும் தரித்துக் கொண்டு தவம் செய்யும் மாரீசனுடைய ஆசிரமத்தை அடைந்து க்ஷேம பிரச்னத்துடன் அவனால் பூஜிக்கப்பெற்று வினவப்பெற்று தன் வரவின் காரணமான, விருப்பத்தில் உதவியை தீனஸ்வரத்துடன் வேண்டினான்.

३६ रामोमेभगिनींव्यरूपयदहोसेनां खराऽऽदिंत्वहन्
सौवर्णोरजतस्यबिन्दुनिकरैश्चित्रोमृगः क्रीडभोः ।
सीतायानिकटे गृहीतुमथतंयाचिष्यतेसापतिम्
तस्मिन्निर्गत आलयात्ससहजेतामाहरिष्येसुखी ॥ ९६ ॥

"இராமன் என் தங்கையை உருவபங்கம் செய்தான். கரன் முதலிய ஸேனையைக் கொன்றான். ஆச்சரியம்! ஹே மாரீசா! நீ வெள்ளியின் புள்ளிக் கூட்டங்களால் சித்திரவர்ணமான தங்க மானாக ஸீதையின் ஸமீபத்தில் விளையாட வேண்டும். பிறகு ஸீதை அதை பிடிக்கவேண்டும் என்று புருஷனை வேண்டப்போகிறாள். அந்த இராமன் தம்பியோடு வீட்டிலிருந்து வெளியில் வந்தபொழுது; நான் சுகமாக அவளை அபஹரிக்கப் போகிறேன்".

तंभार्याविरहानलप्रशमितस्वामेयवीर्यंरणे
जेष्यामीतिकृताऽऽशयंदशमुखंमारीच आहप्रति ।
श्रुत्वारामकथां सशुष्कवदनस्त्वौष्ठौसुशुष्कौलिहन्
नेत्रैर्निर्निमिषैर्निरीक्ष्यसमृतवत्क्लिष्टस्स्मरंस्तद्धितम् ॥

மனைவியின் அக்கினி போன்ற விரஹத்தால் தன்னுடைய அளவற்ற பலமும் அழிந்திருக்கும் பொழுது அந்த இராமனை ஜயிக்கப்போகிறேன் என்று மனதில் நினைத்த இராவணனைப் பார்த்து மாரீசன் இராம கதையைக் கேட்டு முகம் வரண்டு உலர்ந்த உதடுகளை நக்கிக்கொண்டு இமைக்கொட்டில்லாத கண்களால் பார்த்து, இறந்தவன் போல் துன்பமடைந்து, அந்த இராவணனுக்கு நன்மையை நினைத்து பதில் கூறினான்.

३७ शोकस्यापहरंवचश्शृणुममक्षेमङ्करन्तेऽनिशम्
रामोविक्रमवारिधिः प्रकुपितः कुर्याद्वधंरक्षसाम्।
सीतायस्यत्रशंवदाऽतिमहितास्पर्धेतकस्तेनयत्
सातच्चापपरायणाकथमियंहार्याधियंमुञ्चताम् ॥ ९८

"துக்கத்தை விலக்கி உனக்கு எப்பொழுதும் க்ஷேமத்தை கொடுக்கும் என் வார்த்தையைக் கேள். பலத்திற்கு இருப் மான இராமன் அதிக கோபமடைந்து அரக்கர்களை அழிப்பா மிகவும் பெருமை பெற்ற ஸீதையை வசம் செய்துகொண் இராமனிடத்தில் யார் அசூயை செய்யமுடியும்? ஸீதை இராம டைய வில்லே கதியாக அடைந்திருப்பதால் அவளை எப்படி ஹரிக்கமுடியும்? இந்த புத்தியை விடவேண்டும்".

रामोनापगुणस्त्वभूद्यदहितस्स्वेनापिपित्रा स्वयम्
निर्वास्येतपुरात्स्वतातमवितुंसत्याद्विमातुर्वशम्।
राज्यंदत्तचरं विमुच्यदययायः प्रापतत्काननम्
तद्द्रोहस्तुनरोचतेशुभाधियोयेमन्त्रिभिश्चिन्तय ॥ ९९

தன்னுடைய தகப்பனாரும் தான் பட்டணத்திலிருந் விரட்டி விடும்படியாக இராமன் துர்குணம் பெற்று விரோதியா ருக்கவில்லை. சக்களத்திக்தாயாருக்கு வசமான தந்தையை தியம் கெடாமல் காப்பாற்றுவதற்காக முன் கொடுக்கப் பெ இராஜ்யத்தையும் தயவால் விட்டு, அந்த காட்டிற்கு வந்த இரா னுக்கு குற்றம் செய்யவோ எனக்கு ஸம்மதமில்லை. நற்புத் பெற்ற மந்திரிகளுடன் ஆலோசிக்க வேண்டும்.

यद्रामस्य पुरामया प्रविदितं वीर्यं यथाऽर्थं श्रुणु
प्राप्तो ब्रह्मवरात्सहस्रकरिणां शौर्यं चरन्दण्डकान्
भीतः कौशिक आहरत्क्रतुमपि श्रीराममानीययम्
बालंतं परिभूयवेदि मगमंसंवर्षितु शोणितम् ॥ १००

"முன்காலத்தில் இராமனுடைய பலத்தை நான் உண்மையாக அறிந்திருக்கிறேன். அதைக் கேட்கவேண்டும். பிரம்மாவின் வரத்தால் நான் ஆயிரம் யானைகளின் பலத்தைப் பெற்று, தண்டகாரண்யத்தில் ஸஞ்சாரம் செய்யும்பொழுது, பயத்தால் விசுவாமித்திரர் இராமனை அழைத்துவந்து யாகம் செய்யும் ஸமயத்தில், அவரை சிறுவனென்று அவமதித்து இரத்தத்தை வர்ஷிப்பதற்காக யாகவேதிக்குச் சென்றேன்"

तद्बाणेनकृपालुनात्वभिहतः क्षिप्तश्शतेयोजने
सिन्धोस्तीरमुपागमंमदितरेनिर्जीवतां प्रापिताः ।
संज्ञांप्राप्यचिरेण भीतहृदयोलंकां शनैरागमम्
मानाशं गमयाऽऽत्मनाऽतिमुदितान्सीताकृते बांधवान् ॥

"தயவுபெற்ற அந்த இராமபாணத்தால் அடிக்கப்பெற்றும், நூறுயோஜனை தூரத்தில் தள்ளப்பெற்றுர், ஸமுத்திரத்தின் கரையை அடைந்தேன். என்னைத்தவிர மற்றவர்கள் ஜீவனை இழந்தார்கள். வெகுகாலம் கழித்து நினைவுபெற்று பயந்த மனமுடன் மெதுவாக இலங்கைக்கு வந்தேன். மிகவும் ஸந்தோஷமடைந்த பந்துக்களை ஸீதைக்காக உன்னோடு நாசமடைவிக்காதே".

३९ किंतेनास्ति गृहेसुरूपयुवतिः स्वर्ग्गीयदेनांवृथा
वांछस्यद्यतनंचवृत्तमवचाश्शृण्वेकचित्तोमृगः ।
भूत्वादण्डककाननंसमचरंभक्षन्तपस्यन्मुनीन्
रक्षोभ्यां सहितोऽभ्यधावमभयोरामंस्मरन्तत्कृतिम् ॥

"உன்னைக் கொல்லும் ஸீதையை நீ விரும்புகிறபடியால் அழகு பொருந்திய பெண் உன் அரண்மனையில் இல்லையா? இப்பொழுது நடந்த ஸமாசாரத்தை பதில் சொல்லாமல் ஒரு மனமாகக்கேட்கவேண்டும். நான் இரண்டு இராக்ஷஸர்களுடன் மான் வேஷம் பூண்டு தவம் செய்யும் ரிஷிகளை ஸாப்பிட்டுக்கொண்டு தண்டகாரண்யத்தில் பயமில்லாமல் ஸஞ்சரித்தேன். இராமன் செய்த தீங்கை நினைத்து அவரிடம் எதிர்த்தேன்."

तन्मुक्तैस्त्रिभिराशुगैर्मदनुगावभ्याहतौदैवतः
मुक्तोभीतिमवारितामुपगतस्स्वप्नेऽपिसर्वत्रतम् ।
पश्यन्रत्नरथाऽऽदिशब्दनिवहंशृण्वन्निहप्रव्रजन्
अस्मित्वत्सहयानतोविनिहतस्स्यां गच्छराज्यंसुखी ॥

"அந்த இராமனால் விடப்பெற்ற மூன்று பாணங்களா என்பின் வந்த இரண்டு இராக்ஷஸர்களும் நாசமடைந்தார்க தெய்வாதீனமாய் விடப்பெற்ற நான் ஸ்வப்னத்திலும் எல் விடங்களிலும் இராமனைப் பார்த்தும், ரத்தினம், ரதம் முத சப்தங்களைக் கேட்டும் விலக்கமுடியாத பயத்தை அடை ஸன்யாஸம் செய்துகொண்டு இவ்விடத்தில் இருக்கிறேன். ட கூட வருவதால் எனக்கும் நாசம் ஏற்படும். சுகமாக இராஜ் திற்குச் செல்லவேண்டும்."

४० दुर्वृत्तोऽभिहतः खरोऽपिविधिना रामः किमागोऽकरोत्
इत्युक्तिंसनिशम्यरावणइदंमारीचमाहानयम् ।
साहाय्यंनकरिष्यसिध्रुवमयेचेत्त्वां निहन्म्युन्मदम्
सन्दिग्धस्तवतत्रजीवविलयोयद्युक्तमत्राऽऽचर ॥ १०४

"தூர்நடைபெற்ற கரனையும் தெய்வம் கொன்றது. இ மன் என்ன குற்றம் செய்தான்"? என்று மாரீசனுடைய வா தையைக் கேட்டு இராவணன் மாரீசனைப் பார்த்து நீதி இ மல் பதில் கூறினான். "ஹே மாரீசா! நீ எனக்கு உதவிசெய்ய திருந்தால் அதிக மதம் பெற்ற உன்னை நிச்சயமாய் கொ கிறேன். இராமனிடத்தில் உன்னுடைய பிராணனுக்கு அ ஸந்தேஹம். அவைகளில் எது தகுதியோ? அதைச் செ வேண்டும்".

चित्रोराजतबिन्दुभिस्सकनकोभूत्वामृगः पर्यट
त्वांवीक्ष्यात्रनिजाग्रहीतुमनघासंप्रेषयेत्स्वंपतिम् ।
आनीयाधिकदूरसेवतमथन्याक्रोशहामैथिलि
प्रेमभ्रातारितिश्रुतध्वनिरसौमन्येतरामाऽऽपदम् ॥ १०५

"வெள்ளிப் புள்ளிகளால் சித்திரவர்ணமான தங்கமானக நீ ஸஞ்சரிக்கவேண்டும். குற்றமற்ற அந்த ஸீதை உன்னைப்பார்த்து பிடிக்கும்படி தன் புருஷனை அனுப்புவாள். பிறகு அந்த இராமனை வெகுதூரத்திற்கு அழைத்துக்கொண்டுபோய் ஹே ஸீதே! ஹே அன்பு ஸஹோதரா! என்று நீ பலமாக கத்தவேண்டும். ஸீதை அந்த சப்தத்தைக் கேட்டு இராமனுக்குத் துன்பத்தை நினைப்பாள்".

आर्यंपश्यविपन्नमित्यतिशुचातंदेवरंप्रेषयेत्
शून्यात्पर्णगृहाद्धरामिधरणेः पुत्रींकृतार्थस्ततः ।
राज्यार्धंप्रदिशामितेप्रमुदितो गच्छाग्र आयाम्यनु
प्राप्यस्यन्दनमित्यमुंखररवंमारीचआहप्रभुम् ॥ १०६ ॥

"துன்பமடைந்த அண்ணனைப் பார்க்கவேண்டும்" என்று ஸீதை மிகுந்த துக்கத்தால் அந்தக் கொழுந்தனை அனுப்புவாள். ஜனமில்லாத ஆசிரமத்திலிருந்து ஸீதையை அபஹரிக்கிறேன். அதனால் விருப்பம் நிறைவேறி உனக்கு பாதி இராஜ்யம் கொடுக்கிறேன். நீ முன்னால் செல்லவேண்டும். நான் பின்னால் ரதத்தில் ஏறிக்கொண்டு வருகிறேன்" என்று கடுமையாக சப்திக்கும் எஜமானனைப் பார்த்து மாரீசன் கூறினான்.

४१ कोराजन्सहतेनबुद्धिमतुलां तेबुद्धिमेवंददौ
आहृत्यावनिजांपुरंनयासि चेल्लंकाननत्वज्जनाः ।
नत्वंजातुभविष्यसित्वदहितोनन्दिष्यतित्वल्लये
त्वद्वैरिप्रहतोऽस्म्यथासिच तथायन्मेवचोनश्रुतम् ॥१०७॥

"ஹே அரசே! உன்னுடைய அளவற்ற க்ஷேமத்தைப் பொறுக்காமல் இவ்விதம் புத்தி சொன்னவன் யார்? ஸீதையை அபஹரித்து பட்டணத்திற்கு அழைத்துப்போனால், லங்கையும், நீயும், உன் பந்துக்களும் இருக்கப்போகிறதில்லை. உன்னுடைய அன்பத்தால் சத்துரு ஸந்தோஷமடையப்போகிறான். நீ என் வார்த்தையைக் கேட்காததால் உன் சத்துருவால் நானும் நாசமடைகிறேன். பிறகு நீயும் நாசமடையப் போகிறாய்".

४२ ओमित्युक्तगिरं प्रशस्य बहुधा संश्लिष्य तं स्यन्दनम्
प्रापय्याथ समेत्य रामवसतेरभ्यर्णमात्मेप्सितम् ।
कुर्वित्युक्तवचास्स तेन हरिणस्सौवर्ण आसीत्तदा
शृङ्गै रत्नमयश्च चारु कदलीगेहेऽभिरामेक्षितः ॥ १०८

இராவணன் தன் விருப்பத்திற்கிணங்கி "ஓம்" என்று கூற அந்த மாரீசனைக் கட்டிக்கொண்டு, பலவிதமாகத் துதித்து ரதத்தில் ஏற்றிக்கொண்டு இராமாசிரமத்தின் சமீபத்தை அடைந்து அவனையும் அடைவித்து "என் விருப்பத்தைச் செய்யவேண்டும்" என்று சொல்லும்பொழுது மாரீசன் அப்பொழுது கொம்புகளில் இரத்தினமயமாகவும் பார்ப்பதற்கு அழகான தங்க மானாக இருந்து வாழைத்தோட்டத்தில் ஸஞ்சரித்தான்.

भावं छादयितुं मृगान्वनभवान्नाऽऽदत्स्वमाजिघ्रतः
गेहद्वारमुपेत्य सत्वरमसौ मोदादुपैत्तान्पुनः ।
पुष्पाण्यप्यपचेतुमात्तकुतुका वृक्षान्गता मैथिली
दृष्ट्वा विस्मितमानसा स्वरमणं तं प्रैक्षयत्सानुजम् ॥ १०९

தன்னை முகருகின்ற வனத்திலிருக்கும் மான்களை மாரீசன் இராக்ஷஸ தன்மையை மறைப்பதற்காக ஸாப்பிடவில்லை. வேகமாக இராமாசிரமத்தின் வாயிலை அடைந்து மறுபடியும் அவைகளைக் குறித்து ஸந்தோஷமாகச் சென்றான். ஸீதை புஷ்பங்களைப்பறிப்பதற்கு ஸந்தோஷமாக மரங்களை அடைந்து அந்த மானைப்பார்த்து ஆச்சரியமடைந்து தன் புருஷனையும் கொழுந்தனையும் பார்க்கச்செய்தாள்.

४३ आर्यायं न मृगः प्रलोभनकरी माया तु मारीचजा
नैवंरूपमृगो भवेद्भुवि वने जातान्निहन्तुं कृता ।
इत्याभाषिणि सादरं मृगमिमं कान्ताऽऽनय क्रीडितुम्
जीवन्नेव न लभ्यते यदि तदा देह्यस्य चित्राजिनम् ॥ ११०

"ஹே அண்ணா! இது மான் இல்லை. காட்டில் இருப்பவர்களைக் கொல்லுவதற்காக மாரீசன் செய்த மாயை. பூமியில் இவ்விதமான மான் இல்லை" என்று இலக்ஷ்மணன் சொல்லும்பொழுது "ஹே நாதா! விளையாடுவதற்கு இந்த மானைப் பிடித்து வரவேண்டும். உயிரோடு இது அகப்படாவிட்டால் அப்பொழுது அதன் சித்திரமான தோலைக் கொடுக்கவேண்டும்."

इत्युक्तः प्रियया प्रियप्रवणया रामोऽपितत्त्वंविदन्
दैवादागतविस्मय श्शशिगतोद्युस्थोमृगोऽयंवरो ।
आदास्यामिसजीवमेनमथचेन्मायीहतस्याजिनम्
सीतांरक्षजटायुषास्वविहितस्स्याइत्यशाल्लक्ष्मणम् ॥१११॥

அன்புமிகுந்த இன்ப மனைவியால் ஏவப்பெற்ற இராமன் உண்மையை அறிந்தும் தெய்வாதீனமாய் ஆச்சரியமடைந்து "ஆகாயத்தில் சந்திரனிடமிருக்கும் மானும் இந்த மானும் இரண்டும் உயர்வுபெற்றது. இதை உயிரோடுபிடித்து வரப்போகிறேன். இது இராக்ஷஸனாயிருந்தால் கொன்று இதன் தோலையாவது கொண்டு வரப்போகிறேன். ஹே இலக்ஷ்மணா! நீ ஜடாயுவோடு ஸாவதானமாயிருக்வேண்டும் ஸீதையைக்காப்பாற்றவேண்டும்" என்று இலக்ஷ்மணனுக்கு உத்திரவுசெய்தார்.

४४ वीक्ष्यैनंसकलापखड्गधनुषंस्वस्यानुगंसत्वरं
दूरंत्वाश्रमतोविकृष्यभयतस्सद्यस्समन्तर्हितम् ।
दृष्ट्वाहेममृगंविनिश्वासितकृद्बाणेनरामोन्यहन्
मुक्त्वामार्गतनुंपुनः प्रकृतिमानासीत्सतालोत्प्लुतः ॥

அம்புபெட்டி, வில்லு, கத்தி இவைகளோடு தன் பின்னால் வரும் இராமனைப் பார்த்து வெகுதூரம் ஆசிரமத்திலிருந்து வேகமாய் இழுத்துச்சென்று பயத்தால் உடனே மறைந்த தங்க மானைப் பார்த்து, இராமன் பெருமூச்சுபெற்று பாணத்தால் அடித்தார். அந்த மாரீசன் மான் சரீரத்தை விட்டு மறுபடியும் பனைமரம் வரை உயரக்குதித்து தன் சரீரத்தை அடைந்தான்.

सीताप्रेरितलक्ष्मणोद्रुतमिमंदेशंसगच्छेद्यथा
हासीतेऽनुजलक्ष्मणेत्यपिवदन्भूमौपपाताऽऽशरः ।
पत्नीभ्रातृहितप्रदंनिदितंश्रुत्वेदमन्तस्स्मरन्
तावेवाभिययौ जगद्भयहरोरामोतिभीतो गृहम् ॥११...

ஸீதையால் ஏவப்பெற்று இலக்ஷ்மணன் சீக்கிரம் இவ்வி... திற்கு வரும்படியாக "ஹே ஸீதே! தம்பி இலக்ஷ்மணா! கஷ்ட..." என்று சொல்லி இராக்ஷஸன் பூமியில் விழுந்தான். மனைவி... தம்பிக்கும் துன்பம் கொடுக்கும் இந்த சப்தத்தைக் கேட்டு அ... களையே மனதில் நினைத்துக்கொண்டு உலகத்தின் பயத்தை வி... கும் இராமன் மிகவும் பயந்து ஆசிரமத்தை நோக்கிச்சென்...

४५ श्रुत्वा कोणपजल्पिताऽऽर्तनिनदंस्मृत्वातुभर्तुस्स्वरम्
सीतालक्ष्यणमादिशत्समवितुं सोदर्यमद्यैहितम् ।
तस्यानिर्गमनेनकोपकलुषादैवाऽऽहतादेवरम्
भर्तृप्रेमवशीकृताशुभमतिंस्निग्धंजगर्हेबहु ॥ ११४

இராக்ஷஸன் சொன்ன துக்கமான சப்தத்தைக்கேட்... புருஷனுடைய சப்தமாக நினைத்து ஸீதை இலக்ஷ்மணனைப் பா...த்து "அண்ணனைக் காப்பாற்றுவதற்காக இப்பொழுது செ... வேண்டும்" என்று உத்திரவு செய்தாள். இலக்ஷ்மணன் செ...யேறுததால் ஸீதை கோபத்தால் கலங்கி, தெய்வத்தால் தூ...ப்பெற்று புருஷனிடம் உள்ள அன்பிற்கு ஈடுபெற்று, நற்... பெற்ற சினேஹமுள்ள கொழுந்தனை மிகவும் நிந்தித்தாள்.

भ्रातृव्योऽसिसगर्भ्यपत्युरहितंयद्वांछासित्वागतम्
मांप्राप्तुंस्वयमागतोऽसिभरतः किंप्रैषयत्त्वांखलः ।
किंस्यात्तेऽभिहतेऽग्रजेऽनयमया जानामिदुष्टाऽऽशयम्
प्रच्छन्नोऽसिसुहृद्वपुस्स्वहितकृत्किंलज्जतेकामुकः ॥११...

"புருஷனுடைய ஸஹோதரனே! புருஷனுக்கு வந்த துன்த்தை நீ விரும்புகிறபடியால் அவருக்கு சத்துருவாக இருக்கிறுய். என்னை அடைவதற்காக தானுக வந்தாயா? துஷ்டனுன பரதன் உன்னை அனுப்பினுனு? ஹே நீதியற்றவனே! அண்ணன் அழிந்ததின் பிறகு என்னுல் உனக்கு என்ன பலன்? உன்னுடைய கெட்ட எண்ணம் எனக்குத் தெரியும். துன்பம் செய்யும் நீ ஸ்னேஹிதனுடைய சரீரம் பெற்று மறைவாக இருக்கிருய். காம முள்ளவன் வெட்கமடைகிருனு?"

रामेप्रीतिरहेतुकाक्वनुगतायद्भ्रातरंनावसि
प्राणान्नैवव्वहामितंप्रियमृते पास्यामिघोरंविषम् ।
यास्याम्याश्रयमाश्रयमाशमितितांदुःखोक्तदुर्वाक्यकाम्
जायांभ्रातुरदोषधीरनुनयन्नाह प्रणम्रस्सुधीः ॥ ११६ ॥

"ஸஹோதரனைக் காப்பாற்றுமலிருக்கிறபடியால் இராமனிடத்தில் காரணமில்லாமல் இருந்த அன்பு எங்கே சென்றது? அந்த நாதனில்லாமல் நான் பிராணனை வைத்திருக்கமாட்டேன். கொடிய விஷத்தை சாப்பிடப்போகிறேன். அக்கினியை சரணமடையப்போகிறேன்" என்று துக்கத்தால் துர்வார்த்தை சொல்லும் அண்ணனுடைய மனைவியான மதினியைப் பார்த்து குற்றமற்ற புத்திபெற்ற புத்திசாலியான இலக்ஷ்மணன் வணங்கி சமாதானம் செய்து கூறினுன்.

शौर्यस्याऽऽलयमापदामविषयं विद्धयार्यमार्यैवयम्
रक्षोभिः प्रविरोधिनस्सकृतकैश्शब्दोऽयमन्यैः कृतः ।
सन्तापंत्यजतेपतिर्धृतमृगस्सद्रागिहाऽऽयास्यति
न्यस्तातेनमयित्वमत्रविजहन्नेकां नयाम्यन्यतः ॥ ११७ ॥

"ஹே மதினி! அண்ணு பலத்திற்கு இருப்பிடம். அவரிடம் துன்பம் அணுகாது" என்று நீ நினைக்கவேண்டும். இராக்ஷஸர்களோடு நாம் விரோதம் பெற்ரேும். அண்ணனைத் தவிர மற்ற விஷமுள்ளவர்களால் இந்த சப்தம் செய்யப்பெற்றது. துக்கத்தை விடவேண்டும். உன்னுடைய புருஷன் மானைப் பிடித்துக் கொண்டு இவ்விடத்தில் சீக்கிரம் வரப்போகிருர். உன்னைக் காப்பாற்றும்படி என்னிடத்தில் அவர் வைத்திருக்கிருர். இவ்விடத்தில் உன்னை ஒருவளாக விட்டு நான் வேறு இடத்திற்குப் போகமாட்டேன்".

दुर्वाक्यानिवदस्यनेकमितियत्साध्वोनाचित्रंत्विदम्
स्त्रीत्वंचंचलमानसं जानिगृहंनित्यंकलेः खल्विति।
श्रुत्वालक्ष्मणभाषितंद्विगुणितक्रोधाऽवदज्जानकी
दुष्टस्त्वंनचवेपतेतवमनो भ्रातुर्यदत्याहिते ॥ ११८

"நிலைமையற்ற மனம் பெற்ற பெண்ணின் தன்மை எப்
தும் கலஹத்திற்கு இருப்பிடமாயிருப்பதால் ஹே ஸாதுவே
அநேக துர்வார்த்தைகளை சொல்வது ஆச்சரியமில்லை". என்
இலக்ஷ்மணனுடைய வார்த்தையைக் கேட்டு ஸீதை இர
பங்கு கோபம்பெற்று கூறினாள். "ஸஹோதரனுடைய மிரு
பிராணபயத்திலும் உன் மனம் நடுங்காததால் நீ துஷ்ட
இருக்கிறாய்".

गंगायामथवा भृगौनिपतनात्स्वां शातयेयंतनुम्
रामंनानुसरेर्यदीत्यभिहितस्सप्राहतां प्रश्रितः
आर्येदैवतबुद्धिना तववचः क्षान्तन्तुरूक्षंमया
कर्णौभेदकयद्व्रजाम्यशरणांरक्षन्तुदेवाइमाम् ॥ ११९

"இராமனுக்குப் பின் துணையாக நீ போகாமலிருந்தால்
கையிலாவது, பள்ளத்திலாவது விழுந்து, என் சரீரத்தை
மடைவிப்பேன்" என்று ஸீதை சொன்னதும் அவளைப்பார்
இலக்ஷ்மணன் வணக்கமாய் கூறினான். "ஹே மன்னி! நீ தே
வம் என்ற புத்தியால், காதுகளைப் பிளக்கும் கடுமையான
வார்த்தையைப் பொறுத்தேன். போகிறேன், துணையற்ற
ஸீதையைத் தேவர்கள் காப்பாற்றவேண்டும்".

४६ इत्युक्त्वास्वसहोदरस्यसविधंयातेऽनघेलक्ष्मणे
स्वांसेदण्डकमण्डलूउपदधत्काषायवस्त्राऽऽवृतः।
आम्नायंप्रपठन्दशाऽऽननउपैत्सीतांसएकाकिनीम्
संध्यां भास्करचन्द्रमोविरहितां ध्वान्तंनिगूढंयथा ॥

என்று சொல்லி குற்றமற்ற இலக்ஷ்மணன் ஸஹோதரனு டைய ஸமீபத்திற்குச் சென்றபொழுது இராவணன் தன் தோள் களில் தண்டம், கமண்டலம் இவைகளையும், இடையில் காவிவஸ் திரத்தையும், தரித்துக்கொண்டும் வேதம், ஓதிக்கொண்டும், ஒரு வளாயிருக்கும் ஸீதையினிடம், சூரியனும், சந்திரனும் இல்லாத ஸந்தியா காலத்தில் இருள்போல் மறைவாக வந்தான்.

अंगानांसुकुमारतांवरगुणंरूपंवयः कांक्षितम्
स्तुत्वादुर्जनसंवृतेवनतलेसौधेनिवासंविना ।
एकस्याविनिवासहेतुमथतंपृच्छन्तमेतांद्विजम्
सत्वावेषविमोहिताखलतमंसीताऽऽतिथेय्याचयत् ॥

அவயவங்களின் அழகையும், நற்குணம் பெற்ற உருவத்தை யும், விரும்பப்பெற்ற யௌவன பர்வத்தையும் துதித்து உப் பரிகையில் வஸிக்காமல் துஷ்டர்கள் சூழ்ந்த வனப்பிரதேசத்தில் ஒருவளாக வஸிப்பதின் காரணத்தை வினவும் மிகவும் துஷ்ட னான இராவணனை பிராமணனென்று நினைத்து விருந்தாளி களுக்கு விருந்து அளிக்கும் ஸீதை வேஷத்தால் மோஹித்து பிறகு பூஜித்தாள்.

४० तत्पृष्टोविनिवेद्यसस्वचरितंतांप्रार्थयद्रावणः
लंकासौधमुपेहितत्रनिवसप्रेम्णाऽपराश्रीरिव ।
नब्रूयांयदिपृच्छतः प्रतिवचः क्रुद्धोऽतिथिर्माशपेत्
इत्यन्तस्सभयाजगादसकलां सीताप्रवृत्तिंनिजाम् ॥

அந்த ஸீதையால் வினவப்பெற்ற இராவணன் தன் சரித் திரத்தைத் தெரிவித்து "இலங்கையின் உப்பரிகையை அடைய வேண்டும். அதில் வேறு இராஜ்ய லெக்ஷ்மிபோல் அன்போடு குடியிருக்கவேண்டும்" என்று ஸீதையைப்பார்த்து வேண்டினான். வினவும் இவருக்கு நான் பதில் உரைக்காமல் இருந்தால் விருந் தாளி கோபமடைந்து என்னை சபித்துவிடுவார்; என்று ஸீதை மனதில் பயந்து தன் எல்லா ஸமாசாரத்தை உரைத்தாள்.

श्रुत्वारक्षसउक्तिमप्यनुचितां सीताजगर्हेक्रुधा
यत्प्राप्तोऽसिनरर्षभावपनयन्दूरेतिभीतोऽद्यमाम् ।
ज्ञातंतेप्रबलाबलंसनृहरिस्तद्वस्ततस्तद्वधूम्
जम्बूकस्त्वमपाहराऽऽशुमृतयेमांविद्धचसुघ्नंविषम् ॥

இராவணனுடைய தகுதியற்ற வார்த்தைகளையும் ஸீதை கேட்டு ஹே பலமுள்ளவனே! அரசர்களான இராமலக்ஷ்மண களை தூரத்தில் விரட்டி நீ பயந்துகொண்டு இப்பொழுது என்னிடம் வந்திருப்பதால் உன்னுடைய பலக்குறைவு தெரிந்தது. இராமன் நரஸிம்மன். அவனுடைய மனைவியை அவனிடமிருந்து நரிபோல் நீ சிக்கிரம் மரணத்தின் பொருட்டு எடுத்துச்செ பிராணனைக் கொல்லும் விஷமாக என்னை நினைத்துக்கொ என்று கோபத்தால் நிந்தித்தாள்.

४८ स्वीयं विक्रममक्रमैकशरणस्स्वर्गौकसां त्रासनम्
लंकाराज्यजवैभवं धनदतस्तत्पुष्पकस्याऽऽहृतिम् ।
तेनाकुण्ठितमन्तरिक्षगमनं विज्ञाप्यनिस्स्वंपतिम्
त्यक्त्वामामधिकर्द्धिमेहिनमयातुल्यस्सइत्याहताम् ॥

அக்கிரமத்திற்கு முக்கிய இடமான இராவணன் தேவர்களுக்கு பயமளிக்கும் தன் பலத்தையும் இலங்கா ராஜ்யத்தின் பெருமையையும் குபேரனிடமிருந்து அவனுடைய புஷ்பக விமானத்தைப் பிடுங்கினதையும் அதனால் ஆகாயத்தில் தடையில்லாத ஸஞ்சாரத்தையும் தெரிவித்து பொருளற்ற புருஷனை விட்டு அதிக ஐசுவரியம் பெற்ற என்னிடம் வரவேண்டும் அந்த இராமன் எனக்கு ஸமமில்லை. என்று ஸீதையிடம் சொன்னான்.

४९ इत्युक्त्याऽप्यवशीकृतामवनिजांरूपंनिजंदर्शयन्
क्रन्दन्तीमनिमेषदृष्टिमभितोवीक्ष्याऽऽर्यपुत्रेतिताम् ।
रक्षस्सानुनयंप्रगृह्यकरयोरारोहयत्स्यन्दनम्
वेगेनोदपतत्पयोधरइवस्वांकेदधद्विद्युतम् ॥ १२५

...னுடைய ஸினேஹத்தை நீங்கள் ஸாவதானமாக சத்ருக்களை ஸம்ஹரித்து அறியப்போகிறீர்கள்" என்று ஸந்தோஷமாய் ...றைந்தார்.

५१ श्रुत्वावानरगर्जितंदशमुखस्संप्राप्तशंकोविदन्
मुक्तौतावहिबाणबन्धतइतिद्रागात्महन्नाशये ।
भीतिंभीकरदुर्निमित्तमधिकंकोपादपश्यन्पुरः
जातंशत्रुवधायसैन्यसहितंधूम्राक्षमाज्ञापयत् ॥ ७९ ॥

பத்துத் தலை இராவணன் வானரங்களின் கர்ஜனையைக் கேட்டு ஸந்தேஹமடைந்து, "இராம லக்ஷ்மணர்கள் நாகபாணத்தில் கட்டிலிருந்து விடப்பெற்றார்கள்" என்று அறிந்து சீக்கிரம் மனதில் பயமடைந்து பயத்தைக் கொடுக்கும்படி முன்னிலையில் உண்டான அதிக அபசகுனத்தையும் கோபத்தால் பாராமல் "தூம்ராக்ஷன்" என்ற இராக்ஷஸனை ஸைனியங்களுடன் சத்ருக்களை ஸம்ஹரிக்கும்படி உத்திரவு செய்தான்."

५२ धूम्राक्षंबहुराक्षसैरनुगतंदृष्ट्वारणाऽऽकांक्षिणः
हृष्टाःकप्यधिपान्ययुत्सतनिशाचारैस्सुरैश्शलाघिताः ।
विक्रान्तंविविधास्त्रसंहतकपिंशीर्षेगदाऽऽघातदम्
शैलाग्रेणसुराऽऽस्पदंसमनयत्तंसत्वरंमारुतिः ॥ ८० ॥

வெகு இராக்ஷஸர்களால் பின்தொடரப் பெற்ற "தூம்ராக்ஷனை"ப் பார்த்து வானர மன்னர்கள் யுத்தத்தை விரும்பி ஸந்தோஷமடைந்து தேவர்கள் துதிக்கும்படி இராக்ஷஸர்களோடு யுத்தம் செய்தார்கள். பலம்பெற்றவனும் அநேக அஸ்திரங்களால் வானரங்களை ஸம்ஹரித்தவனும் தன் தலையில் "கதையால்" அடியைக் கொடுத்தவனுமான அந்த "தூம்ராக்ஷனை" மலையின் தலையால் "ஹநுமான்" சீக்கிரம் விண்ணுலகத்திற்கு விஜயம் செய்வித்தார்.

५३ रामंसंहरवज्रदंष्ट्रकुपितोगच्छेतिरक्षःपतेः
आदेशात्शमनंदिदृक्षुखितदिश्यास्थितंवालिजम् ।

प्राप्तःप्राप्तरथेभवाजिपदगैःक्रव्याशनैरन्वितः
युद्धंसव्यतनोन्नगप्रहरणैस्संभीषणंपश्यताम् ॥ ८१ ॥

“ஹே வஜ்ரதம்ஷ்ட்ரா! நீ கோபம் பெற்று இராமனை ஸம்ஹரிக்கவேண்டும். செல்லவேண்டும்” என்று அரக்கர்களின் அரசனுடைய ஆக்ஞையால் அவன் எமனைப் பார்ப்பதற்கு விருப்பம் பெற்றவன்போல் எமனுடைய திசையில் இருக்கும் “அங்கதனை” அடைந்து, இரதம், யானை, குதிரை, காலாட்கள் இவைகளை அடைந்த இராக்ஷஸர்களோடு கூடி பார்ப்பவர்களுக்கு பயமளிக்கும் யுத்தத்தை மலை, மரங்களை ஆயுதமாகப் பெற்ற வானரர்களோடு செய்தான்.

अन्योन्यप्रजिघांसयाव्यचरतामायोधनंस्वर्वधू
कण्ठग्राहविधायकंप्रजहतांप्राणान्विनाऽऽयासतः ।
भेरीस्यन्दननेमिचापनिनदैस्संक्लेशयत्शृण्वतः
रक्षःकप्यधिपास्स्वशोणितनदीपूरस्यवर्षायितम् ॥ ८२ ॥

இராக்ஷஸ வீரர்களும் வானர வீரர்களும் ஒருவருக்கொருவர் கொல்ல விரும்பி பிராணனை விடுகிறவர்களுக்கு பிரயாஸமில்லாமல் தேவமாதர்களின் கழுத்தில் ஆலிங்கனத்தைக் கொடுக்கிறதும், பேரீவாத்தியம் இரதத்தின் பட்டா, வில்லு, இவைகளின் சப்தங்களால் கேட்பவர்களுக்கு க்லேசத்தைக் கொடுக்கிறதும் தங்களின் இரத்த நதியின் பிரவாஹத்திற்கு மழைகாலம் போன்றதுமான யுத்தத்தைச் செய்தார்கள்.

௫௪ शूरंसैन्यविदारणप्रकुपितंविद्राव्यसत्याऽऽख्यकान्
कुर्वन्तंस्वकपीन्रथेविदालितेप्राप्यावनिंमुष्टिभिः ।
युध्यन्तंनिशितासिनाविरचयन्तंवज्रदंष्ट्रंद्विधा
कण्ठेवालिसुतोऽकरोत्सुरवधूप्रेयोरतंसद्रदैः ॥ ८३ ॥

ஸைனியங்களை அழிப்பதால் கோபம் பெற்றவனும் வானரங்களை விரட்டி “ஓடுகிறவர்கள்” என்ற பொருளடங்கிய “கபிகள்” என்கிற அவர்களின் பெயரை உண்மையாக செய்விக்கிறவனும், இரதம் பிளக்கப் பெற்றதும் பூமியை அடைந்து முஷ்டி

...த்தம் (குத்துச்சண்டை) செய்கிறவனுமான வஜ்ரதம்ஷ்ட்ரனை ...தன் கூர்மையான கத்தியால் கழுத்தில் இரண்டாகச்செய்து ...பற்களால் தேவஸ்திரீகள் பிரியமடையும்படி (சுரதம்) வினை ...டைச் செய்வித்தான்.

भीतेस्सन्त्यजनादकम्पनइतिप्राप्तोयथार्थाभिधाम्
रक्षोनाथचमूपतिःपरिवृतो रक्षोभिरग्रेभवम् ।
सन्दृश्यामितदुर्निमित्तमसकृन्निश्शंकितोनिस्सरन्
स्वस्थानादरिभिर्न्ययुध्यततथामैन्दाऽऽदयोवैरिभिः ॥८४॥

பயத்தை விட்டதால் (அசைவு அற்றவன்) என்று பொரு...ங்கிய "அகம்பனன்" என்று உண்மை பெயர்பெற்ற இரா...னுடைய ஸேனாதிபதி இராக்ஷஸர்களால் சூழப்பெற்று முன் ...யில் வரும் அளவற்ற அபசகுனங்களை அடிக்கடிப் பார்த்தும் ...மில்லாமல் தன்னுடைய இருப்பிடத்திலிருந்து பிரயாணம் ...து சத்துருவான வானரங்களோடு யுத்தம் செய்தான். ...மைந்தன்" முதலிய வானரர்களும் சத்துருவான இராக்ஷஸர்க...ோடு அவ்விதமே யுத்தம் செய்தார்கள்.

युद्धेसन्तुमुलेचतुर्विधबलैरुत्थापितंभूरजः
रोदस्योर्विवरंसमेत्यसकलान्चक्षुष्मतोऽप्यान्धयत् ।
स्वीयानेवनिजघ्नुरप्यसुहृदोनाऽऽवेद्ययेनोभये
वीराआहतशोणितैरशमयन्सर्वंतदेवैतत् ॥ ८५ ॥

நான்குவித ஸைனியங்களால் நெருங்கிய யுத்தத்தில் அவர் ...ால் உண்டு பண்ணப்பெற்ற பூமியின் "தூளி" ஆகாயம் பூமி ...வைகளின் வெளியை அடைந்து கண்களைப் பெற்றவர்களை ... எல்லோர்களையும் குருடாகச் செய்தது இரண்டு பக்கத்தின் ...ர்களும் சத்துருக்களை அறியாமல் தங்களைச் சேர்ந்தவர்களைத் ...னை வதைத்தார்கள். அடிபெற்றவர்களின் இரத்தத்தால் ...ப்பொழுதே அந்த தூசி முழுவதையும் அகற்றினார்கள்.

स्वज्ञातीन्रजनीचरक्षपयितान्दृष्ट्वाहनूमान्क्रुधा
प्रक्षिप्तेऽपिगिरावकंपनममुं बिभ्रन्महापादपम् ।

तेनाऽऽहत्यनिशाचरान्तदनुगान्प्राणप्रकंपंद्रुतम्
कुर्वन्राघववानराधिपनुतोमोदंपरंसोऽन्वभूत् ॥ ८६ ॥

"ஹநுமான்" தன்னுடைய பந்துக்கள் இராக்ஷஸர்களால் அழிவதையும் மலையை எரிந்தும் "அகம்பனன்" அசைவு அற்று இருப்பதையும் பார்த்து கோபத்தால் பெரிய மரத்தை தரித்து அதனால் அவனுடன் பின் வந்தவர்களையும் அடித்து அவனையும் பிராணன் நடுங்கும்படி செய்து இராமலக்ஷ்மணங்கள் சுக்ரீவன் இவர்களால் துதிக்கப்பெற்று மிகுந்த ஸந்தோஷத்தை அநுபவித்தார்.

५७ संग्रामानलआजुहोम्यसुहविःपश्याऽऽचरिष्णुःप्रियम्
राजन्नित्यभिधायरावणचमूनाथःप्रहस्तोऽन्वितः ।
स्वामात्यैश्शलभोविभावसुमिवद्रागाविविक्षुःपुरः
प्राग्द्वारान्निरगाद्युयुत्सुरहितैर्मूढोमुमूर्षाऽऽवृतः ॥ ८७ ॥

"ஹே அரசே! நான் என் மந்திரிகளோடுகூட உனக்கு பிரியத்தைச் செய்யவிரும்பி யுத்தமாகிற அக்கினியில் பிராணனாகிற ஹவிஸ்ஸை ஹோமம் செய்கிறேன். பார்" என்று "பிரஹஸ்தன்" என்ற இராவணனுடைய ஸேனாதிபதி சொல்லி அக்கினியில் பிரவேசிக்க விரும்பும் விளக்குப் பூச்சிபோல் முட்டாளாய் மறிக்கவேண்டும் என்று விருப்பங்கொண்டு சத்துருக்களோடு யுத்தம் செய்ய விரும்பி பட்டணத்தின் கிழக்கு வாயிலிருந்து பிரயாணம் செய்தான்.

५८ रामायाथविभीषणेऽभिदधतिप्राहस्त्यवीर्योच्छ्रयम्
तस्मिन्क्लेशयतिद्विषोद्विपइवप्राप्यैवपद्माऽऽकरम् ।
गिर्यग्राद्द्विविदोनरान्तकमपिप्राहत्यतंदुर्मुखः
वृक्षात्क्षिप्रकरस्समुन्नतमपद्वेषंसुराणांव्यधात् ॥ ८८ ॥

பிறகு "விபீஷணன்" பிரஹஸ்தனுடைய மிகுந்த பலத்தை இராமனிடம் சொல்லும்பொழுது யானை தாமரைக்குளத்தில் புகுந்ததுபோல் பிரஹஸ்தன் சத்துருக்களைத் துன்பமடைவிக்கும் பொழுது "த்விவிதன்" மலையின் நுனியால் "நராந்தகனையும்

க்கிரம் வேலை செய்யும் கைகளைப் பெற்ற "துர்முகன்" மரத்தால் "ஸமுன்னதனையும்" அடித்து தேவர்களிடத்தில் த்வேஷத்தை விடச் செய்தான்.

तेजोवारिधिजांबवानपिमहानादंशिलांपातयन्
तारःपादपमस्यकुंभहनुकंशीर्षेतथैवाकरोत् ।
सालेनास्यहयान्निहत्यकुपितोनीलोविपद्याऽऽशुगान्
लंकेशंव्यतनोद्विहस्तमचलक्षेपात्प्रहस्तेहते ॥ ८९ ॥

பலத்திற்கு இருப்பிடமான "ஜாம்பவான்" பெரிய சப்தம் பெற்ற "மஹாநாதனையும்" "தாரன்" "கும்பஹநுவையும்" அவர்களின் தலையில் கல்லையும் மரத்தையும் விழச்செய்து அவ்விதமே தேவர்களிடம் த்வேஷத்தைவிட)ச் செய்தார்கள். "நீலன்" கோபமடைந்து பிரஹஸ்தனுடைய குதிரைகளைத் தேக்குமரத்தால் அடித்து அவனுடைய பாணங்களைப் பொறுத்து மலையை எரிந்து பிரஹஸ்தனை அடித்து இராவணனைக் கையற்றவனாச் செய்தான்.

## प्रक्षिप्तस्सर्गः

१ एष्यन्तंसमराङ्गणं स्वयमतिक्रोधंदशाऽऽस्यंप्रिया
मन्दोदर्यनुगैस्सहैत्यसदासिप्रेम्णा विदीर्णाऽऽशया ।
कर्तव्यंसमबोधयत्प्रियगिरातंमाल्यवन्तंपुरः
कृत्वाऽऽश्लिष्यतदासनंस्वाधिगतासासन्मतिस्सांजलिः ॥

அதிக கோபத்துடன் தான் யுத்தகளத்திற்குப் போகப் போகிற இராவணனை அவனுடைய மனைவியான 'மண்டோதரி' வேலைக்காரிகளோடு ஸதஸ்ஸில் அடைந்து பிரியத்தால் மனம் பிளந்து நற்புத்தி பெற்று ஆலிங்கனம் செய்து அவனுடைய ஆஸனத்தில் அமர்ந்து அஞ்சலி பந்தம் செய்து "மாலியவானை" முன் வைத்து பிரியமான வார்த்தையால் செய்யவேண்டியதைத் தெரிவித்தாள்.

रोषंमाकुरुमद्विरंश्रृणुपतेरामोबलीयान्जन
स्थानस्थानवधीद्यएकइषुमान्युक्तोऽनुगैःकिंपुनः ।

संदध्यायदितेनतस्यदयितांप्रत्यर्प्यरत्नांबरैः
क्षेमंस्यादविनाशिनःक्वनुगताःवीराःप्रहस्ताऽऽदयः ॥

"ஹே நாதா! நீ கோபத்தை அடையக்கூடாது என் வார்த்தையைக் கேட்க வேண்டும். இராமன் பலம் பெற்றவன். ஒருவனாய் பாணத்தை எடுத்து "ஜனஸ்தானத்திலிருந்தவர்களை வதைத்தான். வேலைக்காரர்களோடு கூடி இருக்கும்பொழுது பலம் பெற்றவென் என்றும் சொல்லவேண்டுமா? இரத்தினங்கள் வஸ்திரங்கள் இவைகளோடு அவருடைய மனைவியைத் திருப்பிக் கொடுத்து அவரோடு ஸமாதானம் செய்தால் நமக்கு அழியாத க்ஷேமம் ஏற்படும். பிரஹஸ்தன் முதலிய வீரர்கள் எங்கு சென்றார்கள்?"

मानाशंगमयाखिलानवहितस्स्वआत्मसंरक्षणे
देवा अप्यमुतोऽतिबिभ्यतिबलेवह्नेःक्षमायांभुवः ।
नस्थातुंसमरेत्वयाऽस्यपुरतश्शक्येततत्रस्थितः
कार्यंतेसविभीषणोहितमतिःकुर्यात्तमेहिद्रुतम् ॥ ९२ ॥

"ஹே நாதா! எல்லோர்களையும் நாசமடைவிக்கவேண்டாம். தன்னைக் காப்பாற்றுவதில் ஸாவதானமாக இருக்கவேண்டும். பலத்தில் அக்கினிபோலும் பொறுமையில் பூமிதேவிபோன்றவனுமான இராமனிடமிருந்து தேவர்களும் பயமடைகிறார்கள். யுத்தத்தில் அவனுக்கு முன்னால் உன்னால் நிற்கவும் முடியாது. சீக்கிரம் அவனிடம் செல். அவ்விடமிருக்கும் நன்மையில் புத்தி பெற்ற "விபீஷணன்" உன் விரும்பிய காரியத்தைச் செய்வான்.'

२ भार्यामप्रियवादिनींदशमुखोहस्तेप्रगृह्याब्रवीत्
भीरुत्वद्वचनंमनोनाविशतिस्याःप्रीतचित्ताव्रज ।
शुद्धान्तंस्नुषयासहाऽऽवससुतावीरास्तथाऽहंसुरान्
जित्वामानुषमाश्रयाम्ययिकथंकप्याश्रयंसानुजम् ॥

இராவணன் அப்பிரியத்தைக் கூறும் மனைவியைக் கையில் பிடித்துக்கொண்டு கூறினான். "ஹே பயந்தவளே! உன் வார்த்தை என் மனதில் நுழையவில்லை. நீ மனம் ஸந்தோஷமாய்

இருக்கவேண்டும். அந்தப்புரம் செல்லவேண்டும். அவ்விடம் பட்டுப்பெண்களோடு இருக்கவேண்டும். உன் புத்திரர்களும் ளும் வீரர்கள். தேவர்களை ஜயித்துவிட்டு குரங்குகளை அண்டி இருக்கும் தம்பியோடு கூடிய மனிதனை ஹே மனைவி! எவ்விதம் ஜயமடைவேன்."

अद्यैवाहिवदुद्धतैस्त्वविशिखैस्सर्वान्हनिष्यामिते
सन्तापेननराशनः कथममुंसेवेतानिलेज्जितः।
सप्राणोजनएषइत्यविदुरोमुक्त्वाप्रियामादिशत्
रक्षस्सज्जयमेरथंरिपुहरंयोत्स्याम्यमित्रैरिति ॥ २४ ॥

"இப்பொழுதே ஸர்ப்பம்போல் பயமளிக்கும் பாணங்க ளால் (ஹே மனைவி!) உன் மனக்கவலையோடு எல்லோர்களையும் வதம்செய்யப்போகிறேன். மனிதர்களை உணவாய்ப்பெற்ற நான் உயிரோடு இருக்கும்பொழுது வெட்கத்தைவிட்டு அந்த மனி தனை எவ்விதம் ஸேவிப்பேன்?" என்று அறிவற்ற இராவணன் மனைவியைவிட்டு "சத்துருக்களோடு யுத்தம்செய்யப்போகிறேன். சத்துருக்களைக் கொல்லும்படி இரதத்தைத் தயாரிக்கவேண்டும்" என்று இராக்ஷர்களுக்கு உத்தரவு செய்தான்.

२९ संचिन्त्यप्रहतंप्रहस्तममितक्रोधोदशाऽऽस्यःपुरात्
आयोद्धुंविमतैस्ततस्सनिरगाद्रक्षोभिरप्यान्वितः।
रामोवेदविभीषणाद्रणगतान्सर्वान्तदयिंबलम्
प्राप्तोविस्मयमात्मदृष्टिपथगेवीरोऽचिकीर्षत्क्रुधम् ॥ २५॥

"பிரஹஸ்தன்" அடிபெற்றதை பத்துமுகம் பெற்ற இராவ ணன் நினைத்து அளவற்ற கோபம்கொண்டு இராக்ஷஸர்களோடு கூடி சத்துருக்களோடு யுத்தம் செய்வதற்காக பட்டணத்திலிரு ந்து பிரயாணம் செய்தான். இராமன் விபீஷணனிடமிருந்து யுத்தகளத்திற்கு வந்த எல்லோர்களையும் அவர்களின் பலத்தை யும் அறிந்தார்; ஆச்சரியமடைந்தார். அந்த வீரன் தன் கண் களுக்குப் புலப்பெற்ற அந்த சத்துருவிடம் கோபத்தைச்செய்ய விரும்பினார்.

सन्त्रातुंनगरंनियुज्यबलवात्रक्षांसियोद्धुंकपीन्
प्राप्तोविंशतिवीक्षणःकपिपतिंबाणैरधःपातयन् ।
मोघंवानरशैलघातममितंकृत्वाऽर्दयन्तान्शरैः
तत्संरक्षकमात्मदर्पदळनंरामंशनैरापतम् ॥ ९६ ॥

பலம்பெற்றவனும் இருபது கண்களைப் பெற்றவனுமான இராவணன் பட்டணத்தைக் காப்பாற்றும்படி இராக்ஷஸர்களுக்கு உத்திரவுசெய்து யுத்தம் செய்வதற்கு வானரங்களை அடைந்து சுக்ரீவனை பாணங்களால் கீழேவிழச் செய்து, மலையால் வானரங்களின் அளவற்ற அடியை, வீணாகச்செய்து அவர்களையும் அம்புகளால் துன்பமடைவித்து அவர்களைக் காப்பாற்றுகிறவனும் தன் மதத்தை அடக்குகிறவனுமான இராமனிடம் மெதுவாக வந்தான்.

रामस्यानुजमागतंचवचसायोद्धुंनिषिद्ध्वाभयम्
देवावध्यवनौकसातववधोभावीतिसोक्तिंकपिम् ।
वायोस्सूनुमुरोऽभिघातकरणंप्राभ्रंशयद्धैर्यतः
नीलंसूक्ष्मतनुंव्यथाऽभिजनकंवह्न्यस्त्रतोऽपातयत् ॥ ९७ ॥

“இராமனுடைய உத்திரவால் யுத்தம் செய்வதற்கு வந்த அவருடைய தம்பியையும் தடுத்து தேவர்களால் வதமற்றவனே! உனக்கு வானரத்தினால் வதம்வரப்போகிறது” என்று பயமில்லாமல் சொல்லி மார்பில் அடியைச் செய்த ஹனுமானை இராவணன் தைர்யத்திலிருந்து நழுவச் செய்தான். சிறிய உருவம் பெற்று துன்பமடைவிக்கும் (அக்கினி குமாரனை) நீலனை அக்கினியின் அஸ்திரத்தால் விழச்செய்தான்.

मामभ्येहिनिशाचरेन्द्रसधनुःप्राप्तोऽसिकिंवानरैः
जानेवीर्यममोघमद्यभवतोव्यक्तीकृतंकर्मणा ।
इत्युक्तिरघुनायकानुजमसौप्राहामराणांरिपुः
दिष्ट्यादृष्टिपथंगतं[illegible]रिति ॥ ९८ ॥

"ஹே இராக்ஷஸ வேந்தனே! நான் வில்லை எடுத்துக் கொண்டு வந்திருக்கிறேன். (யுத்தத்திற்கு) என்னிடம் வரவேண்டும். வார்த்தைகளால் என்ன பிரயோஜனம். பயன்பெற்ற உன் பலத்தை நான் அறிகிறேன். உன்னுடைய காரியத்தால் அது இப்பொழுது வெளியானது" என்று சொல்லும் இராமானுஜனைப் பார்த்து தேவசத்துருவான இராவணன் "தெய்வ வசத்தால் திருஷ்டியின் (கண்களின்) வழியில் வந்த உன்னை பாணங்களால் எமனுடைய அகத்திற்கு அனுப்பப் போகிறேன்" என்று பதில் கூறினான்.

अन्योन्यंनिशितेषुभिःप्रतिहतौरक्षोरघूणांपती
बाणैःकृत्तशरौविमुग्धहृदयौसंज्ञांपुनःप्रापतुः ।
शक्त्यापद्मजदत्तयाऽग्निनिभयासौमित्रिमभ्याहतम्
कैलासाचलचालनोद्बहुकरैस्तंनोदधार्षीन्मनाक् ॥ ९९ ॥

இராவணனும் இலக்ஷ்மணனும் ஒருவருக்கொருவர் கூர்மையான பாணங்களால் அடிக்கப்பெற்றும் அறுக்கப்பெற்ற பாணங்களைப் பெற்றும் மூர்ச்சை பெற்றும் மறுபடியும் நினைவு பெற்றார்கள். அக்னிக்கு ஸமமும் பிரம்மா கொடுத்ததுமான சக்தியாயுதத்தால் அடிக்கப்பெற்ற இலக்ஷ்மணனை கைலய கிரியை அசைத்த இராவணனும் அநேகம் கைகளால் கொஞ்சங்கூட தூக்கமுடியவில்லை.

मुष्ट्याघातनिपातितंविरचयत्रक्तंवमन्तंमुखैः
रक्षोनायकमाशुगस्यतनयस्तंप्राऽऽददत्पुष्पवत् ।
रामस्यान्तिकमानयत्प्रकृतिगंरामोगृहीत्वाधनुः
तूर्णंतस्वधिरुह्यविक्रमनिधिंशत्रुंसमभ्यद्रवत् ॥ १०० ॥

"ஹனுமான்" இராவணனை முஷ்டியின் அடியால் விழச்செய்தும் முகங்களால் இரத்தத்தைக் கக்கச்செய்தும் சுவபாவமடைந்த இலக்ஷ்மணனை புஷ்பத்தைப்போல் எடுத்துக்கொண்டு இராமனுடைய ஸமீபத்தை அடைவிக்கும்பொழுது இராமன் வில்லை எடுத்துக்கொண்டு பலத்திற்கு இருப்பிடமான ஹனுமான்பேரில் ஏறிக்கொண்டு சீக்கிரம் சத்துருவை எதிர்த்தார்.

रक्षोनायकतिष्ठतिष्ठबहुधाकृत्वेदृशंविप्रियम्
मोक्षंप्राप्स्यसिकुत्रनुप्रहरणाद्योऽहन्यतत्वद्व्यथाम् ।
कर्तुंयुद्धमुपागतःपुनरितिक्रूरोक्तिभीराघवः
बाणेनापिरिपुंनिहत्यसदनंतंप्रापयत्श्वोऽस्त्विति ॥ १०१॥

அரக்கர்களின் ஹே அரசே! நிற்கவேண்டும்; நிற்கவேண்டும். அநேக விதமாய் நீ இவ்விதம் குற்றம் செய்து பாணத்திலிருந்து எவ்விடத்தில் விடுதலை அடையப்போகிறுய்? உன்னிடத்தில் அடிபெற்றவன் உனக்குத் துன்பம் செய்வதற்கு மறுபடியும் யுத்தத்திற்கு வந்து விட்டான்" என்று கடுஞ்சொற்களாலும் பாணத்தாலும் இராமன் சத்துருவை அடித்து "நாளைக்கு (யுத்தம்) இருக்கட்டும்" என்று வீட்டிற்கு அனுப்பினுர்.

६० रामास्त्रंपरिचिन्त्यशल्यजनकंनिश्श्वासभूयाग्रहः
प्राहाऽऽदेशकृतोनिशाचरवरोमाघंतपामेऽखिलम् ।
यन्मामिन्द्रजिदात्मजंसुरजितंमर्त्योजिगायैककः
मर्त्याद्भीतिरितिप्रजापतिवचस्तन्मांदहत्यास्स्मृतम् ॥

"இராவணன்" துன்பத்தைக் கொடுக்கும் இராமபாணத்தை நினைத்து அதிக பெருமூச்சுப்பெற்று ரஹஸ்யத்தில் வேலைக்காரர்களிடம் கூறினுன். "தேவர்களை ஜயித்தவனும் இந்திரனை ஜயித்த புத்திரனைப்பெற்றவனுமான என்னை ஒரே மனிதன் ஜயித்தபடியால் என்னுடைய எல்லாத் தவமும் வீணுகிவிட்டது. மனிதனிடமிருந்து உனக்கு பயம் என்று பிரம்மாவின் வார்த்தையை நினைத்தால் அது என்னைப் பொசுக்குகிறது. அந்தோ!"

आघातंत्वनरण्यआत्मकुलजात्प्राहाङ्गनामूलकम्
यत्सावेदवतीबलात्कृतिहतासर्वंनमिथ्यामम ।
रंभोमेइदमाहतुर्वरुणजानन्दीचसंजागृथ
द्वारेषुप्रविबोध्यतामातिबलस्सुप्तोऽपिकुंभश्रुतिः ॥१०३॥

"அனரண்யன்" தன் வம்சத்தில் பிறந்தவனிடமிருந்து எனக்கு அழிவைக் கூறினுன். ... அடைந்த

"வேதவதி" பெண் மூலமாக மரணத்தைக்கூறினள். "இரம்பையும்" "பார்வதியும்" "நந்திகேசுவரனும்" வருணனுடைய பெண்ணும் இவ்விதமே கூறினார்கள். எல்லாம் எனக்குப் பொய் இல்லை. வாயில்களில் விழித்துக்கொண்டிருங்கள். உறங்கும் அதிக பலம் பெற்ற "கும்பகர்ணனை"யும் விழிக்கச் செய்யுங்கள்.

आदायाशनराशिमीप्सिततमंप्रभ्वाज्ञयाराक्षसाः
संसुप्तंघटकर्णमप्यपभयाःप्राबोधयन्कृच्छ्रतः ।
गिर्यग्रैरपिकूटमुद्गरशतैस्सन्ताडितोवारणान्
स्वाङ्गेषुप्रचरानबुध्यतपरंस्पर्शंसपृथ्वाकृतिः ॥ १०४ ॥

இராக்ஷஸர்கள் அரசனுடைய அனுமதியால் மிகவும் விரும்பப்பெற்ற உணவின் குவியலை எடுத்துக்கொண்டு பயமில்லாமல் நன்றாய் தூங்கும் "கும்பகர்ணனை" சிரமம்பெற்று விழிக்கச் செய்தார்கள். அந்த "கும்பகர்ணன்" மலையின் தலைகளாலும் அநேக கூடம், முத்கரம் இவைகளாலும் அடிக்கப்பெற்றும் பெரிய உருவம் பெற்றதால் தன் சரீரத்தில் யானைகள் ஸஞ்சரிக்கும்பொழுது அதிகமாய்த் தொடுகிறதாக அறிந்தான்.

जग्ध्वाऽन्नंविविधंसुतृप्तउदितंरक्षोभिरर्थंविदन्
संहृत्यैववनौकसोरघुवरौनिश्शेषयेयंभियम् ।
इत्याश्रुत्यदिदृक्षुरग्रजमथस्नातस्ससंमाण्डितः
तस्याऽऽदेशतआस्थितोनृपपथंव्यत्रासयद्वानरान् ॥ १०५ ॥

"கும்பகர்ணன்" பலவிதமான உணவை உண்டு திருப்தி அடைந்து இராக்ஷஸர்கள் கூறின காரியத்தைத் தெரிந்து "வானரங்களையும் இராமலக்ஷ்மணர்களையும் வதைத்து பயத்தை விலக்குகிறேன்." என்று பிரதிக்ஞை செய்து அண்ணனைப் பார்க்க விரும்பி பிறகு ஸ்னனம்செய்து அலங்கரித்துக்கொண்டு அண்ணனுடைய உத்திரவால் இராஜவீதியில் வந்து வானரங்களைப் பயமடைவித்தான்.

६१ गच्छन्तंपथिराघवोविविदिषुःप्राबोधिनेदीयसा
विस्रब्धेनविभीषणेनविजितस्वर्गाधिराजान्तकः ।

वीरोविश्रवसस्सुतोविनिहतप्राणीविधेश्शापतः
जागर्त्यह्नचथमासषट्कशयितोयातीतिकुंभश्रुतिः ॥ १०६॥

வழியில் செல்லுகிறவனை அறிய விரும்பும் இராமனைப் பார்த்து அன்புபெற்ற விபீஷணன் ஸமீபத்திலிருந்து, "இவன் இந்திரனையும் எமனையும் ஜயித்தவன். பலம் பெற்றவன். பிராணிகளை வதைத்தவன். விச்ரவஸின் புத்திரன் "கும்பகர்ணன்" பிரம்மாவின் சாபத்தால் ஆறுமாஸம் உறங்கி பிறகு ஒரு பகலில் விழிக்கிறான். போகிறான்." என்று அறிவித்தான்.

आलोक्यैववनौकसोऽतनुतनुंभीत्याऽभितोविद्रुताः
योत्स्यन्त्यद्यकथंन्विातिस्मृतिमतायन्त्रंमहद्भीषणम् ।
मन्यन्तामितिराघवेणकथितानीलेनधैर्याचलम्
तुङ्गाग्रंस्वधिरोपिताः प्रहरणैर्युक्ताश्चयुद्धोद्यताः ॥ १०७॥

"பெரிய உருவம்பெற்ற "கும்பகர்ணனை"ப் பார்த்தே, வானரங்கள் பயத்தால் நான்கு புறமும் ஓடுகின்றன. இப்பொழுது எவ்விதம் யுத்தம்செய்யப்போகின்றன" என்று இராமன் நினைத்து "பயம் கொடுக்கும் பெரிய எந்திரம் என்று எண்ணவேண்டும்" என்று கூறும்பொழுது "நீலன்" வானரங்களை உயர்ந்த நுனியைப்பெற்ற தைர்யம் என்ற மலையில் ஏற்றி ஆயுதங்களோடு கூடி யுத்த முயற்சியைப் பெறச் செய்தான்.

६२ दृष्ट्वाऽभ्यागतमानतंदशमुखःप्राहाऽऽश्लिषन्भ्रातरम्
जानीषेनभयंनरादुपगतंसौख्याच्चिरेणास्वपः ।
रामस्सेतुविलंघितार्णवजलोलंकांनिहन्तीषुभिः
मांत्रायस्वयमाऽऽननादिवरिपोर्हस्तान्निरस्यन्कपीन् ॥

இராவணன் எதிரில் வந்து வணங்கின ஸகோதரனான கும்பகர்ணனைப் பார்த்து கட்டிக்கொண்டு "மனிதனிடமிருந்து வந்த பயத்தை நீ அறியவில்லை. வெகுகாலம் சுகமாய் உறங்கினாய். இராமன் அணையால் ஸமுத்திர ஜலத்தைத் தாண்டி பாணங்களால் இலங்கையில் இருப்பவர்களைக் கொல்லுகிறார். வானரங்களை வதைத்து எமனுடைய வாயிலிருந்து காப்பாற்றுவதுபோல் சத்

ருவின் கையிலிருந்து என்னைக் காப்பாற்றவேண்டும்" என்று
ானன்.

राजन्स्वापनयाऽऽर्जितात्रिपदियंदुर्मन्त्रिवद्धाऽऽदर
क्षिप्रंतत्क्रियतांविभीषणमतंसन्त्यज्यनीतिच्युतिम् ।
दण्डेनाहिरिवाऽऽहतःपरुषयाकुंभश्रुतेस्ताद्गिरा
क्रुद्धःप्राहगुरुःकिमस्यपनयप्रद्वेषिणंचेद्बली ॥ १०९ ॥

துர்மந்திரிகளிடத்தில் அன்புபெற்ற ஹே அரசே! இந்த
ன்பம் தன்னுடைய அநியாயத்தால் வந்தது. நீதியின் நழுவு
ல நீக்கி சீக்கிரம் விபீஷணனுடைய விருப்பத்தைச் செய்ய
வண்டும்" தண்டத்தால் அடிக்கப்பெற்ற பாம்புபோல் கடுமை
ான கும்பகர்ணனுடைய அந்த வார்த்தையால் இராவணன்
காபமடைந்து நீ எனக்குப் பெரியவனு? பலமிருந்தால் சத்து
ுவை ஸம்ஹரிக்கவேண்டும்" என்று கூறினன்.

सद्बोधद्विगुणीकृतक्रुदनलंनिर्वापयन्सान्त्वगैः
वाक्यैरंबुभिरब्दवत्सुचतुरः कुंभश्रवा अग्रजम् ।
प्राहाद्यैवविकंपयन्कपिवरानापातयन्नुन्मदान्
आमोदंनयितायथानिजबलंदासस्तवाऽऽदेशतः ॥ ११० ॥

மேகம் ஜலத்தால் அக்கினியை அணைப்பதுபோல் நற்
பாதனையால் இரண்டு பங்கு கோபம்பெற்ற அண்ணனை புத்தி
ாலியான கும்பகர்ணன் ஸமாதான வார்த்தையால் ஸந்தோஷ
டைவித்து இப்பொழுதே வானரங்களை விரட்டி மதம்பெற்ற
ர்களை விழச்செய்து தாஸனுன நான் உன்னுடைய உத்திரவால்
ன் பலத்திற்குத் தகுந்தபடி ஸந்தோஷ மடைவிக்கிறேன்."
ன்று கூறினன்.

मन्त्रस्याऽऽचरणंप्रभोर्नयकलाप्राज्ञत्वमर्थज्ञताम्
साधुत्वंकृतकर्मणस्त्वमतताशत्रोर्बलीयस्त्वतः ।
तद्धातस्यचिकीर्षितस्यनितरांदुस्साधतांबोधयन्
स्वेष्टंप्राहमहोदरोदशमुखंनिर्भर्त्स्यकुंभश्रुतिम् ॥ १११ ॥

அரசன் மந்திராலோசனை செய்ததையும் அவன் நீதி சாஸ் திரத்தில் நிபுணன் என்பதையும் அவன் காரியத்தை அறிந்தவன் என்பதையும் செய்தது நற்காரியம் அது தனக்கும் ஸம்மதம் என்பதையும் சத்துரு மிகவும் பலமுள்ளவனுனதால் நீ செய்ய விரும்பிய அவனுடைய வதம் மிகவும் செய்ய முடியாத காரியம் என்பதையும் கும்பகர்ணனுக்கு அறிவித்து "மஹோதரன்" அவனை அதட்டி இராவணனிடம் தன் விருப்பத்தைக் கூறினன்.

जेष्यामोवयमश्रमारघुपतिंयुद्धेगृहीताऽऽयुधाः
नोलभ्येतजयोयदिव्रणधरास्त्वत्पार्श्वगास्संहृतः ।
रामोऽस्माभिरितिप्रथामधिपुरंश्रावयामोऽखिलान्
सीतात्वामगतिश्श्रयेद्रघुवरोनश्येत्स्वयंशोकतः ॥ ११२ ॥

"நாங்கள் பயமில்லாமல் ஆயுதங்களை எடுத்துக்கொண்டு யுத்தத்தில் இராமனை ஜயிக்கப் போகிறோம். ஜயம் கிடைக்கா விட்டால் விரணங்களைப்பெற்று உன் ஸமீபத்தில் வந்து "இரா மனை ஸம்ஹரித்தோம்" என்ற புகழை பட்டணத்தில் எல்லோர் களையும் கேட்கச் செய்கிறோம். ஸீதை கதி இல்லாமல் உன்னை அடையுவாள். இராமன் துக்கத்தால் தானே நாசமடைவான்"

६५ भीरूणांवचसेदशामुपनतंदुःखंप्रमार्ज्म्यद्यते
वीर्येणेत्यभिधायरावणकृतप्रातोषिकःप्रस्थितः ।
युद्धायाग्रजदुर्निमित्तमामितंतत्कुंभकर्णोविधेः
आदेशादवमत्यमुग्धइवतात्रक्षोभिरस्थैद्द्रुसान् ॥ ११३ ॥

"இவன்போன்ற பயந்தவர்களின் வார்த்தையால் அடை யப்பெற்ற உன்னுடைய துக்கத்தை இப்பொழுது பலத்தால் விலக்குகிறேன்" என்று "கும்பகர்ணன்" கூறி இராவணனிடம் வெகுமதிபெற்று யுத்தத்திற்காக இராக்ஷஸர்களோடு பிரயாணம் செய்து விதியின் வசத்தால் மூடன்போல் முன்னிலையில் வந்த அளவற்ற அபசகுனங்களை அவமதித்து அந்த வானரங்களை எதிர்த்தான்.

६६ विक्रान्तानपिविद्रुतान्प्रतिदिशंवीक्ष्यैवकुंभश्रुतिम्
भीतिर्मास्तुविभीषिकेयमितितान्संबोधयन्नङ्गदः ।

क्षिप्तेषुस्फुटितेष्वगेष्वभिहतान्जीवस्पृहान्वानरान्
वीराणांसुखदंनियोधनमितिप्रावर्तयत्तत्वसः ॥ ११४ ॥

கும்பகர்ணனைப் பார்த்ததும் பலம்பெற்ற வானரங்களும் சகள்தோறும் ஓடும்பொழுது "பயம்வேண்டாம் பயம் கொடு ம் பொம்மை இது என்று அங்கதன்" அறிவித்தும் போடப் ற்ற மலைகள் மரங்கள் பிளக்கப்பெற்றிருக்கும்பொழுது அடி ற்று பிராணனை விரும்பும் அவர்களை, "யுத்தம் வீரர்களுக்கு வெற்றியின்) சுகத்தையும் (பரலோகத்தின்) சுகத்தையும் கொடு றது" என்று அதில் பிரவர்த்திக்கச் செய்தான்.

उद्यम्याथगदामरातिगददांसंपातयन्वानरान्
दण्डेनेवतरोःफलानिकुपितःकुंभश्रवाअश्रमः ।
तत्क्षिप्तान्चविशीर्णयन्नगतरून्मुष्ट्याऽभिघाताद्युधि ।
स्वीकृत्यातिशिताग्रशूलमुदभाद्भीमोयुगान्तान्तकः ॥

பிறகு கும்பகர்ணன் கோபமடைந்து சிரமமில்லாமல் சத் ருக்களுக்குத் துன்பத்தைக் கொடுக்கும் கதையை ஓங்கி, தன் த்தால் மரத்தின் பழங்களை விழச்செய்வதுபோல் வானரங்களை ச்செய்து அவர்கள் எறிந்த மலைகளையும் மரங்களையும் முஷ்டி ன் அடியால் பிளக்கச்செய்து யுத்தத்தில் அதிக கூர்மை நுனி ற்ற சூலாயுதத்தை எடுத்துக்கொண்டு பிரளயகால எமன் ால் பயங்கரமாய் விளங்கினான்.

शूलेनोरसिताडितेहनुमातिश्रान्तेसरक्ताऽऽनने
मन्वानोद्दषदाप्रहारमतुलंस्पर्शंविमुक्तव्यथः ।
नासाश्रोत्रविनिर्गतातनुकपिर्नीलाऽऽदिमानप्यदन्
पुत्रंवालिनआहातिप्रदतलंमुष्ट्याऽभ्यहन्राक्षसः ॥ ११६ ॥

சூலத்தால் மாரில் ஹனுமான் அடிக்கப்பெற்று களைப்பு டைந்து வாயால் இரத்தத்தைக் கக்கும்பொழுது மலையால் பல ான அடியையும் துன்பமில்லாமல் தொடுகிறதாக நினைக்கும் ம்பகர்ணன் "நீலன் முதலியவர்களை பக்ஷித்தும் மூக்கு காது

கள் இவைகளிலிருந்து அநேக வானரங்கள் வெளியில் வரும்பொழுது உள்ளங்கையால் அடித்த அங்கதனை முஷ்டியால் அடித்தான்.

शूलेवायुसुतेनसूर्यसुतगेभग्नेस्वजान्वाहते
सुग्रीवेगतचेतनेगिरिशिरवाऽऽघातेनकुंभश्रवाः ।
स्वीकृत्यैनमपाऽऽगतोऽधिनगरंशैत्योपचाराद्रिपोः
नासाकर्णविदारकस्वनखैरसप्राणितेऽभ्यैद्रणम् ॥ ११७॥

"கும்பகர்ணன்" சுக்ரீவனிடத்தில் பிரயோகித்த சூலாயுதத்தை "ஹனுமான்" தன் முழங்கால்களின் அடியால் ஒடித்ததும் மலை முடியின் அடியால் "சுக்ரீவன்" மூர்ச்சை அடைந்ததும் இவனை எடுத்துக்கொண்டு பட்டணத்தில் வரும்பொழுது சுக்ரீவன் சத்ருவின் சைத்யோபசாரத்தால் பிராணனைப்பெற்று அவனுடைய காது மூக்குகளை தன் நகங்களால் பிளந்ததும் யுத்தத்திற்கு எதிர்முகமாக வந்தான்.

सौमित्रिंत्ववमत्यवीरवचसाबालोऽयमित्यात्मनः
युद्धस्यार्थिनमाददद्धनुरदोज्यानादतःकोपयन् ।
ऐन्द्रेणेन्द्ररिपोश्शरेणकदलीलावंविलूयद्रुतम्
हस्ताङ्घ्रीनभिनद्धलेसुरभियातंरामआर्तप्रियः ॥ ११८॥

வீரவாதத்தால் "இவன் சிறுவன்" என்று இலக்ஷ்மணனை அவமதித்து தனக்கு யுத்தத்தை விரும்பும் கும்பகர்ணனை துன்பமடைந்தவர்களிடத்தில் அன்புபெற்ற இராமன் வில்லை எடுத்து அதன் நாண் சப்தத்தால் கோபமடைவித்து இந்திராஸ்திரத்தால் இந்திர சத்ருவின் கைகளையும் கால்களையும் வாழைமரத்தை வெட்டுவதுபோல் வெட்டி சீக்கிரம் தேவர்களின் பயத்தோடு கழுத்தில் பிளந்தார்.

शीर्षंव्योम्निसुदूरगंशरजवात्देवद्विषोऽधःपतत्
चर्यागोपुरवप्रगेहमतनुप्राभंजयत्सत्वरम् ।
कायोवारिधिमध्यगोजलचरान्संमर्दयन्शैलवत्
प्रापाधस्तलमन्तरिक्षसदनास्सन्तुष्टुवूराघवम् ॥ ११९॥

...ம்பகர்ணனுடைய தலை பாணத்தின் வேகத்தால் ஆகாயத் ...வெகுதூரம் சென்று கீழே விழுந்து பெரியமதில்களையும் ...தன் ஸமீபப் பிரதேசங்களையும் கோபுரங்களையும் வீடுகளையும் ...கிரம் ஒடியச் செய்தது. அவனுடைய உடல் ஸமுத்திரத்தின் ...லை அடைந்து மலைபோல் ஜல ஜந்துக்களை அழித்து பாதா ...ம் சென்றது. ஆகாயத்தில் இருக்கும் தேவர்கள் இராமனைத் ...தித்தார்கள்.

... श्रुत्वाभ्रातरमाहतंदशमुखश्शोकाद्वचलापीच्चिरम्
हावीराद्यविहायमांयमगृहंप्राप्तोऽसिकिंकोपतः ।
मच्छत्रूनविजित्यतेनकिमपिक्रूराहिवज्राऽऽहतिः
किंराज्येनविनात्वयाऽवनिजयाप्राणैर्यदास्तिद्विषत् ॥

"இராவணன்" ஸஹோதரனை. கும்பகர்ணன் வதமடைந் ...தைக் கேட்டு, "ஹே வீரா! இப்பொழுது என்னைவிட்டு கோபத் ...ல் நீ எமகிருஹம் சென்றாயா? கடுமையான வஜ்ராயுதத்தின் ...டியும் உனக்கு ஒன்றும் செய்யாமலிருந்ததால் என் சத்ருக் ...ளை ஜயிக்காமல் ஏன் சென்றாய்? நீ இல்லாமல் இராஜ்யமும் ...தையும் எனக்கு எதற்கு? சத்ரு இருப்பதால் என் பிராண ...ம் எதற்கு? அந்தோ?" என்று துக்கத்தால் வெகுநேரம் ...ம்பினன்.

... यद्धीमान्सविभीषणोऽप्यवमतस्तेनेदमाप्तंत्विति
प्रक्लिष्टंत्रिशिरास्तदादशमुखंसंहर्षयन्विक्रमी ।
कालेनैवसचोदितोरथगतःप्रायाद्युयुत्सूरिपून्
रक्षोभिस्सवरायुधैरनुगतस्तेचातिकायाऽऽदयः ॥ १२१ ॥

"புத்திசாலியான விபீஷணனை அவமதித்ததால் இந்த துக் ...வந்தது" என்று துக்கமடைந்த இராவணனை ஸந்தோஷிக் ...செய்யும் பலமுள்ள "திரிசிரஸ்" (மூன்று தலை பெற்றவன்) ...னுல் ஏவப்பெற்றவன்போல் இரதத்தில் ஏறி யுத்தம்செய்ய ...ரும்பி நல்ல ஆயுதம்பெற்ற இராக்ஷஸர்களால் பின்தொடரப் ...ற்று சத்ருக்களை அடைந்தான் "அதிகாயன்" முதலியவர் ...ம் அவ்விதமே.

युद्धेतत्रनरान्तकोदिविचरैस्संश्लाधितेवाजिग :
प्रासेनद्रुमवासिन : प्रविरलान्कुर्वन्प्रशीर्णेद्दढे ।
तस्मिन्वालिजवक्षसिप्रविहतेमुष्ट्याहतेऽश्वेक्रुधा
तत्पातेनविसंज्ञयन्तमपिमप्रापद्यतैतेनताम् ॥ १२२ ॥

தேவர்களால் சிலாகிக்கப்பெற்ற அங்க யுத்தத்தில் "நராந்தகன்" குதிரையில் ஏறிக்கொண்டுபிராஸாயுதத்தால்வானரங்களைக் குறையும்படிச்செய்து அவ்வாயுதமும் அங்கதனுடைய பலமுள்ள மாரில் அடிக்கப்பெற்று சிதறியபொழுது குதிரையும் முஷ்டியால் அடிக்கப்பெற்று நாசமடைந்ததும் கோபத்தால் முஷ்டியைவிழச் செய்து அங்கதனையும் பிரக்ஞையை விடச்செய்து அவனால் அந்த ஸ்திதியைத் தானும் அடைந்தான்.

௭௦ नेत्रेद्वे अपिपातयन्तलहतेस्संरावयन्वारणम्
दन्तंतस्यविकर्षयन्सुरारिपुं तेनाङ्गदोऽक्लेशयत् ।
रक्षोभिः परितोवृतस्तदनुगौ मुष्ट्यामरुद्वाह्निजौ
शैलेनाथमहोदरंचादिविषन्मैत्रीं भृशंनिन्यतुः ॥ १२३ ॥

"அங்கதன்" இராக்ஷஸர்களால் சூழப்பெற்றும் உள்ளங்கையின் அடியால் யானையின் இரண்டு கண்களையும் விழச்செய்து அதையும் கத்தச்செய்து அதனுடைய தந்தத்தைப் பிடுங்கி அதனால் இராவண புத்திரனான "தேவாந்தகனை" துன்பமடைவித்தான். பிறகு அங்கதனைப் பின்தொடர்ந்து வந்த வாயு புத்திரனான "ஹனுமானும்" அக்கினி புத்திரனான "நீலனும்" முஷ்டியாலும் மலையாலும் தேவாந்தகனையும் இராவண ஸஹோதரனான "மஹோதரனையும்" தேவர்களிடத்தில் அதிக அன்பை அடைவித்தார்கள்.

आविद्धस्त्रिशिरश्शरैः पवनजस्तद्वाजिनोदारयन्
तीक्ष्णाग्रैर्नखरैर्हरिर्गजमिव प्राभंजयन्सद्बलः ।
शक्तिंतस्यमहाबलामुरसितत्खड्गाऽऽहतस्तंतलात्
आहत्याथतदुत्तमाङ्ग मखिलं खड्गीचकर्तद्रुतम् ॥ १२४ ॥

அதிக பலம்பெற்ற "ஹனுமான்" இராவண புத்திரனான "திரிசிரஸ்ஸின்" பாணங்களால் அடிக்கப்பெற்று அவனுடைய

ரைகளை கூர்மை நுனிபெற்ற நகங்களால் சிங்கம் யானையைப் ப்பதுபோல் பிளந்து அதிக பலம்பெற்ற அவனுடைய சக்தி தத்தையும் ஒடித்து மாரில் அவனால் கத்தியால் அடிக்கப் ற்று அவனை உள்ளங்கையால் அடித்து பிறகு கத்தியைப் ற்று (அதனால்) அவனுடைய எல்லாத் தலைகளையும் சீக்கிரம் ரத்தார்.

मत्तंस्वोरसितद्गदाऽभिहननं सोढ्वर्षभोवानरः
तद्धस्तात्प्रतिगृह्यतांचतरसातस्याध्युरोऽपातयत् ।
उन्मत्तं भृशचूर्णितक्षितिभृतं क्रुद्धो गवाक्षोगदा
घातातिव्यथितस्तलाऽऽहतिपतद्दन्तक्षणं सोऽकरोत् ॥

(வருணனுடைய புத்திரனான) "ருஷபன்" மாரில் இராவண ஹோதரனான "மஹாபார்சுவனுடைய" கதையால் அடியைப் பொருத்துக்கொண்டு அவனுடைய கையிலிருந்து கதையை பலத் ால் பிடுங்கிக்கொண்டு அவனுடைய மாரில் அதை விழச்செய்து வனையும் விழச்செய்தான். கவாக்ஷன் மலையை மிகவும் பொடி ாகச்செய்த (இராவண ஸஹோதரனான) உன் மத்த டைய கதையின் அடியால் அதிகதுன்பமடைந்து கோபம் பற்று உள்ளங்கையின் அடியால் அவனுடைய பற்களையும் கண் ளையும் விழச் செய்தான்.

दृष्ट्वाप्राप्तबलातिकायमबलेतत्कुंभकर्णभ्रमात्
दिक्षुप्रद्रवतिस्वसैनिकगणेवैभीषणाद्भाषणात् ।
प्राजानाद्विधिजाद्वरादतिबलं देवासुराजय्यताम्
रामस्तस्यविमुच्यवानरगणान्भीतान्स्वगस्याभियः ॥१२६॥

"இராமன்" பலம்பெற்ற இராவண புத்திரனான "அதிகா ைன"ப் பார்த்து தன் ஸைனியமான பலமற்ற வானரங்கள் ந்த கும்பகர்ணன் என்கிற பயத்தால் திசைகளில் ஓடும் பொழுது பயந்த வானரங்களை விட்டு பயமற்று தன்னிடம் வந்த அதிகாயனுடைய, பிரம்மாவின் வரத்தால் கிடைத்த மிகுந்த பல த்தையும் தேவாசுரர்களால் ஜயிக்கமுடியாமலிருத்தலையும் விபீ ணனுடைய மொழியால் அறிந்தார்.

वीरश्चेदिहमेरणंप्रदिशभोर्योत्स्यामिनप्राकृतान्
इत्युक्तंसनिशम्य वीरवचनं रुष्टोऽहिवल्लक्ष्मणः ।
प्रत्याहाप्यतिकायमार्जितबलश्चेद्दर्शयैतन्मयि
प्राप्तंमामपि विद्धिमृत्युमितितौ युद्धंमिथश्चक्रतुः ॥१२७॥

"ஹே சத்துருக்களே! இவ்விடத்தில் வீரன் இருந்தால் எனக்கு யுத்தம் கொடுக்கவேண்டும். பலமற்ற வானரங்களோடு நான் யுத்தம் செய்யப்போகிறதில்லை' என்று சொன்ன வீர வாதத்தை இலக்ஷ்மணன் கேட்டு ஸர்ப்பம்போல் கோபித்து "நீ பலம் ஸம்பாதித்திருந்தால் அதை என்னிடம் காட்டவேண்டும். வந்திருக்கும் என்னை மிருத்யுவாக நினைக்கவேண்டும்" என்று அதிகாயனுக்கும் பதில் கூறினன். அவ்விருவர்களும் ஒருவருக்கொருவர் யுத்தம் செய்தார்கள்.

निर्भीकस्यरणेकृतप्रतिकृतेस्तस्यातिकायस्यतान्
सूताश्वान्नवरोनिहत्यबलवान्मोघेष्विषुष्वात्मनः ।
तस्मिन्चिन्तितसन्ततः पवनतश्श्रुत्वेतरावध्यताम्
विध्यस्त्रेण विदार्यतस्यकवचं शीर्षंस्वहाषीद्द्रुतम् ॥१२८॥

யுத்தத்தில் பயமற்று பதில்யுத்தம் செய்யும் அந்த "அதிகாயனுடைய" குதிரைகளையும் ஸாரதியையும் பலமுள்ள இலக்ஷ்மணன் வதைத்து தன் பாணங்கள் வீணாக இருக்கும்பொழுது அவனிடத்தில் மிகுந்த கவலைபெற்று ("பிரம்மாஸ்திரம் தவிர) மற்ற அஸ்திரங்களால் அவனை வதம்செய்ய முடியாது" என்பதை வாயு பகவானிடம் கேட்டு பிரம்மாஸ்திரத்தால் அவனுடைய கவசத்தைப் பிளந்து சீக்கிரம் தலையையும் அறுத்தான்.

७२ बन्धूनां बलिनां वधात्स्वनगरीद्वारस्यसंरोधनात्
नागास्त्रेणविबद्धयोरपितयोर्मोक्षाद्भृशंदुर्लभात् ।
दुःखाऽऽर्तोदशकन्धरोऽतिमहितं नारायणत्वंस्मरन्
रक्षार्थैपरितः पुरंनिजचमूमादिश्यवेश्माविशत् ॥ १२९ ।

துக்கத்தால் வருந்தும் இராவணன் பலம்பெற்ற பந்துக்
ன் நாசத்தாலும் தன் இலங்காபுரீவாயில்களின் தடுத்த
லும் நாகாஸ்திரத்தால் கட்டப்பெற்ற அந்த இராமலக்ஷ்மணர்
ன் மிகவும் அரிதான அதிலிருந்து விடுதலாலும் "அவர்கள்
ர்வான நாராயணனுடைய அம்சம் என்பதை நினைத்துபட்ட
த்திற்கு நான்கு புறமும் காப்பாற்றுதலின்பொருட்டு தன்
ளியத்திற்கு உத்திரவுசெய்து அரண்மனை சென்றான்.

मोहंसन्त्यज जीवतीन्द्रविजितिप्रद्वेषिणस्तातते
तद्बाणौघविभिन्नदेहविगलत्प्राणाः पतिष्यन्त्यमी ।
अद्यैवत्राजितुंसमादिशतुमामित्युक्तिभिः प्रीणयन् ।
संक्लिष्टं पितरंसुरेन्द्रविजयी योद्धुंसमायाद्रिपून् ॥१३०॥

"ஹே அப்பா! இந்திரஜித்து ஜீவிக்கும் அவனுடைய பாணக்
ட்டத்தால் சரீரம் பிளக்கப்பெற்று பிராணனை இழந்து உன்னு
டய சத்துருக்கள் விழப்போகிறார்கள். துக்கத்தைவிடவேண்
ம் இப்பொழுதே போகும்படி எனக்கு உத்தரவு செய்யவேண்
ம்" என்று வார்த்தைகளால் "இந்திரஜித்து" துக்கமடைந்த
கப்பனை ஸந்தோஷமடைவித்து யுத்தம் செய்வதற்கு சத்துருக்
ளை அடைந்தான்.

जुह्वन्मन्त्रविदध्वरेहुतवहं गृह्णन्चतस्माज्जयम्
विध्यस्त्रंस्वभिमन्त्र्यवासवजयीविष्णोः पदेऽन्तर्हितः ।
प्राप्तस्यन्दन आशुगैः कपिवरान्संमर्दयन्मोघयन्
तल्लक्ष्याण्यविलोकितोमरुदिवप्रापातयत्पादपान् ॥१३१॥

மந்திரங்களை அறிந்த "இந்திரஜித்து" யாகத்தில் அக்கினி
ல் ஹோமம்செய்து அக்கினியிடமிருந்து ஜயத்தைப்பெற்று
ரம்மாஸ்திரத்தை அபிமந்திரணம்செய்து ஆகாயத்தில் மறை
து இரதத்தில் ஏறி பாணங்களால் வானரங்களைத் துன்பமடை
வித்து கண்களுக்குப் புலப்படாமல் அவர்களின் குறிப்புகளை
ணுக்கி காற்று மரங்களை விழச்செய்வதுபோல் விழச்செய்தான்.

ब्रह्मास्त्रेणदशाननस्यतनयो वीरान्विधायाचलान्
अस्मानर्दयतिस्वयंभुवरतो जय्योनखेऽन्तर्हितः ।

तद्बाणान्प्रसहावहे इतितदासंगुप्तभावौतथा
कुर्वन्भूपतिलक्षणोनगरगः पित्रेजगादाखिलम् ॥ १३२ ॥

"இராவணனுடைய புத்திரனை "இந்திரஜித்து" பிரம்மாஸ்திரத்தால் வானரவீரர்களை (பிரக்ஞையற்று) அசையாமலிருக்கச்செய்து நம்மையும் துன்பமடைவிக்கிருன் பிரம்மாவின் வரத்தால் ஆகாயத்தில் மறைந்த இவனை ஜயிக்கமுடியாது. அவனுடைய பாணங்களைப் பொறுத்துக்கொள்ளுவோம்' என்று அப்பொழுது மனதில் நினைவுபெற்ற இராமலக்ஷ்மணர்களை அவ்விதம் செய்து (குடை சாமரம் முதலிய) அரசனுடைய அடையாளம் பெற்று பட்டிணம்சென்று தகப்பனிடம் எல்லாவற்றையும் கூறினன்.

७४ निर्मुक्तव्यसनोविधातृवरतो वाताऽऽत्मजोमानयन्
तस्यास्त्रंसविभीषणोक्तिमुदितोब्रह्माऽऽत्मजस्याऽऽज्ञया ।
आनेतुं मृतजीवनींचकरणीं संधानसावर्ण्ययोः
वैशल्यस्यमहाबलः कृतमतिः व्योम्नि प्रतस्थेमहान् ॥ १३३ ॥

அதிக பலம்பெற்ற ஹனுமான் பிரம்மாவின் வரத்தால் துன்பத்திலிருந்து விலகி பிரம்மாஸ்திரத்தை பூஜித்து (இராமலக்ஷ்மணர்களுக்குக் கெடுதி இல்லை) என்று விபீஷணனுடைய வார்த்தையால் ஸந்தோஷமடைந்து பிரம்மபுத்திரனை ஜாம்பவானுடைய உத்திரவால் ம்ருதஸஞ்சீவினி (இறந்தவர்களைப் பிழைக்கச் செய்யும்) ஸந்தானகரணி (வெட்டுப்பெற்றதுகளை ஒன்ருக சேர்த்துவைக்கும்) ஸாவர்ண்யகரணி முன் (இருந்த இரத்தத்தைக் கொடுக்கும்) வைசல்யகரணி (விரணங்களை ஆற்றும் பச்சிலைகளைக் கொண்டுவருவதற்கு நினைத்துபெரிய உருவத்துடன் ஆகாயத்தில் பிரயாணம் செய்தார்.

नत्वाराममनुष्यबाणइवसद्रागम्बधीन्निस्तरन्
नीहाराचलमेत्यतत्रवसतः पश्यन्सुरान्तगृहम् ।
कैलासस्यतथर्षभस्यनिकटेसर्वौषधीनांनगम्
प्राप्तस्तत्रमहौषधीर्व्यचिनुत प्रेम्णाऽभितः पर्यटन् ॥

"ஹநுமான்" இராமனை வணங்கி இராமபாணம்போல் வேக மாய் ஸமுத்திரங்களைத் தாண்டி ஹிமயமலையை அடைந்து அதில் வசிக்கும் தேவர்களையும் அவர்களின் கிருகங்களையும் பார்த்து "கைலாஸம், ரிஷபம்" இந்த மலைகளின் ஸமீபத்தில் ஓஷதி மலையை அடைந்து அதில் நான்கு புறமும் ஸஞ்சரித்து உயர்ந்த பச்சிலைகளை அன்போடு தேடினர்.

तास्वन्तर्धिमुपागतासुझटिति प्रेक्ष्याऽऽगतं स्वार्थिनम्
यद्रामेकरुणा नतेनगममद्रक्ष्यस्यये विक्रमम् ।
इत्युक्त्वाशिखरं विलूयकदलीलावं तदीयंततः
निर्गत्याऽऽत्मकरेमहौषधिनगंबिभ्रत्स्वबन्धूनुपैत् ॥१३५॥

தங்களை விரும்பி வந்திருப்பதைப் பார்த்து அந்த பச்சிலை கள் சீக்கிரம் மறைந்தபொழுது "ஹே பர்வதமே! உனக்கு இரா மனிடத்தில் கருணை இல்லாதலால் என்னுடைய பலத்தை அறி யப் போகிருய்" என்று சொல்லி ஓஷதிமலையின் சிகரத்தைவாழை மரத்தைப்போல் ஒடித்து தன் கையில் தரித்து அதிலிருந்து "ஹநுமான்" பிரயாணம் செய்து தன் பந்துக்களை அடைந்தார்.

आनीतेद्रुतमोषधिक्षितिधरेतद्वायुना निर्वृताः
वीरास्सप्तचषष्टिकोटिकपयः पूर्वंप्रमीता अपि ।
प्राप्तावृद्धिमपक्षयांसमनदन्तौराघवावाहताः
अंभोधौतुनिपातितानरभुजस्सोऽनीयताऽऽत्माऽऽस्पदम् ॥

ஓஷதி மலையைக்கொண்டு வந்ததும் அதன் காற்ருல் முன் இறந்த அறுபத்தேழுகோடி வானரங்களும் அந்த இராமலக்ஷ் மணர்களும் குறைவற்ற க்ஷேமத்தை அடைந்து கர்ஜித்தார்கள். அடிபெற்ற அரக்கர்களோ ஸமுத்திரத்தில் போடப்பெற்ருர்கள். ஓஷதிமலையை அதன் இருப்பிடம் சேர்ந்தார்கள்.

७१ पुत्रभ्रातृविनाशजव्यसनतोनाऽऽदेक्ष्यतिस्वानुगान्
योद्धूंरावणइत्यमर्षमधिकंसान्दित्सुनैवस्वयम् ।
सुग्रीवेणवनालयाअभिहिताउल्काभिरादीपयन्
लंकामुत्तमवस्तुराजितगृहांयुद्धेच्छवोनिर्भयाः ॥ १३७ ॥

"இராவணன் புத்திரர்கள் ஸஹோதரர்கள் இவர்களின் நாசத்தால் உண்டான துக்கத்தால் யுத்தம் செய்யும்படி தன் வேலைக்காரர்களுக்கு உத்திரவு செய்யப் போகிறதில்லை" என்று அதிக கோபத்தைத் தான் கொடுக்க விரும்பியே சுக்ரீவனால் உத்திரவு செய்யப்பெற்ற வானரங்கள் யுத்தத்தை விரும்பி பயமில்லாமல் உயர்வான பொருள்களால் விளங்கும் விடுகளைப் பெற்ற இலங்கையை எரித்த கட்டைகளால் கொளுத்தினார்கள்.

यद्यद्दिक्पतिभिः प्रगाढतपसा संपादितं कृच्छ्रतः
तत्सर्वं समरे विजित्य विबुधानायासतो यो विना ।
आनैषीत्स्वपुरं सुधाऽशनततेर्दूतो हरीणां गिरा
तत्तत्स्वामिनमानिनीषुरिव तल्लंकामधाक्षीद्द्रुतम् ॥

திக்குபாலர்கள் அதிக தவத்தாலும் சிரமத்தாலும் ஸம்பாதித்த எல்லாப் பொருள்களையும் தேவர்களை யுத்தத்தில் ஜயித்து இராவணன் சிரமமில்லாமல் தன் பட்டணத்திற்குக் கொண்டு போனதால் தேவதூதனை அக்கினி வானரங்களின் வார்த்தையால் அந்தந்தப்பொருள்களை அவைகளின் எஜமானனிடம்சேர்ப்பிக்க விரும்பிகிறவன்போல் அந்த இலங்கையை சீக்கிரம் சாம்பலாக்கினன்.

शीर्षैर्व्योमगता गृहाश्शिखिशिखादग्धा विशीर्णा अधः
शैला वज्रहता इवातनुरवा रक्षःकपीन्द्राश्शुचा ।
हर्षेणाथ रघूद्वहौ स्वधनुषा तद्बाणनिर्भेदतः
लङ्कागोपुरमूर्ध्वगं दशमुखं निन्युः प्रकोपं तदा ॥ १३९ ॥

பிறகு வஜ்ராயுதத்தால் அடிக்கப்பெற்ற மலைகள்போல் அக்கினி ஜ்வாலையால் பொசுக்கப்பெற்று சிதறி கீழே விழும் சிகரங்களால் ஆகாயமளாவும் விடுகளும் துக்கத்தால் இராக்ஷஸர்களும், ஸந்தோஷத்தால் வானரங்களும், தங்களின் வில்லால் இராமலக்ஷ்மணர்களும் அவர்களுடைய பாணங்களின் பிளப்பால் உயரத்தில் சென்ற இலங்கையின் கோபுரங்களும் அதிக சப்தம்பெற்று இராவணனுக்கு அதிக கோபத்தை அப்பொழுது உண்டு பண்ணின.

रक्षोभिस्सहकुंभकर्णतनयःकुंभोनिकुंभोऽनुतम्
यूपाक्षाऽऽदयआगतारणभुवंमत्तैर्वनस्थैर्वृताम् ।
वीराअप्युभयेशिलातरुभृतःखड्गाऽऽदिनानाऽऽयुधाः
युद्धंचक्रुरलोलुपाअसुषुतेविस्रस्तकेशांबराः ॥ १४० ॥

இராக்ஷஸர்களோடு கும்பகர்ணனுடைய புத்திரர்களான கும்பன்" நிகும்பன் இவர்களும் அவர்களுக்குப்பின் "யூபாக்ஷன்" முதலியவர்களும் மதம்பெற்ற வானரங்கள் சூழ்ந்த யுத்த பூமியை அடைந்தார்கள். இரண்டு பக்கத்தின் வீரர்களும் மலை மரங்களை எடுத்துக்கொண்டும் கத்தி முதலிய பலவித ஆயுதங்களை எடுத்துக்கொண்டும் பிராணனிடத்தில் பற்றுதலற்றவர்களாய் தலைமயிர் வஸ்திரம் நழுவும்படி யுத்தம் செய்தார்கள்.

आघातंगदयारिपोर्गदयावीरोवहन्नंगदः
गिर्यग्रेणनिहत्यकंपनमपिप्रापातयत्कोपनः ।
मुष्ट्याऽऽघातदमात्मनोऽधिनिटिलंस्वीकृत्यतद्धस्ततः
खड्गंतेनचकारमूर्ध्नितरसातंसप्रजंघंद्विधा ॥ १४१ ॥

வீரனை அங்கதன் ரோகத்தைக் கொடுக்கும் சத்ருவின் கதை என்ற ஆயுதத்தால் அடியைப்பெற்று கோபம்பெற்று மலையின் தலையால் (சத்ருக்களையும் நடுங்கச்செய்யும்) "கம்பனனையும்" விழச்செய்தான். தன் நெற்றியில் முஷ்டியால் அடித்த அந்த "பிரஜங்கனை" அவனுடைய கையிலிருந்த கத்தியைப் பிடுங்கிக்கொண்டு அதனால் அவனை சீக்கிரம் தலையில் இரண்டாகச் செய்தான்.

बाहुभ्यामभिपीड्ययूपनयनंमैन्दोविदार्याऽऽनने
रक्ताक्षंद्विविदःपिपेषबलवान्वीरोहरीणामिति ।
सेनांस्वस्यपराजितामपिपुनःकुंभोभृशंहर्षयन्
बाणैर्मर्मविभेदिभिर्न्यरमयद्युद्धात्प्लवरीन्त्रासतः ॥ १४२ ॥

"வானரவீரனும் பலம்பெற்றவனுமான "மைந்தன்" கைகளால் "யூபாக்ஷனை" துன்பமடைவித்தும் "த்விவிதன்" ரக்தா

க்ஷனை" முகத்தில் பிளந்தும் பிசைந்தார்கள்" என்று தோல்வி
அடைந்த தன் ஸைனியங்களும் மறுபடியும் அதிக ஸங்கோஷ
மடையும்படி "கும்பன்" மர்மங்களைப் பிளக்கும் பாணங்களால்
வானரங்களை பயத்தால் யுத்தத்திலிருந்து ஒழியச் செய்தான்.

सोढातस्यशराऽऽहतिंहरिपतिर्बिभ्रत्करेपर्वतान्
तच्चापंप्रविभज्यवीरवचनैःकुंभंभृशंकोपयन् ।
आज्यैरग्निमिवेभमङ्कुशहतैर्द्वन्द्वाऽऽहवंनिर्भरम्
कुर्वन्तंनिरपातयद्गिरिनिभंसन्ताड्यमुष्ट्योरसि ॥ १४३ ॥

"சுக்ரீவன்" கும்பனுடைய பாணத்தின் அடியைப் பொறு
த்து, கையில் மலைகளை தரித்து, அவனுடைய வில்லை ஒடித்து,
ஆஜ்யாஹுதியால் அக்கினியையும், மாவிட்டியின் அடியால்
யானையையும் கோபிக்கச் செய்வதுபோல் வீரவாதத்தால் மலை
போன்ற அந்த "கும்பனை" மிகவும் கோபிக்கச்செய்து அதிக
மான மல்லயுத்தம்செய்து மாரில் முஷ்டியால் அடித்துவிழச்செய்
தான்.

७७ शत्रूणांभयदंप्रगृह्यपरिघंसंपातयन्तंदृढे
वक्षस्यात्मनआशुगस्यतनयस्तत्स्वीकृतोमोचयन् ।
आत्मानंचनिकुंभमप्यभिहतंमुष्ट्याऽथनिष्पीड्यतम् ।
स्वीकृत्यास्यशिरोजहारपवनःपुष्पंस्ववृन्तादिव ॥ १४४ ॥

வாயுபுத்திரனுன "ஹநுமான்" பகைவர்களுக்கு பயம்
கொடுக்கும் பரிகம் என்ற ஆயுதத்தை கெட்டியான தன் மாரில்
விழச்செய்த "நிகும்பனை" அவனால் பிடிக்கப்பெற்றும் முஷ்டியால்
அடித்து துன்பமடைவித்து பிறகு தன்னை விடுவித்துக்கொண்டு
காற்று புஷ்பத்தை அதன் காம்பிலிருந்து பிடுங்குவதுபோல் அவ
னுடைய தலையைப் பிடித்து பிடுங்கினன்.

७८ रक्षोभिर्मकराक्षआत्मनगराद्योद्धुंबहिःप्रस्थिते
रथ्यास्तस्यसमेऽस्खलन्सुचरणास्सूतप्रतोदस्तथा ।
वातिस्माचलमुत्क्षिपन्सुपरुषोवातोदृशावस्रगौ
युद्धान्नोपरतायमस्यवशगाअग्नेःपतङ्गाइव ॥ १४५ ॥

...மகராக்ஷன்'' இராக்ஷஸர்களோடு தன் நகரத்திலிருந்து ...த்திற்காக வெளியில் பிரயாணம் செய்ததும் அவனுடைய ...திரைகள் நல்ல கால்களைப்பெற்றும் ஸமபூமியில் இடறி விழுந் ... ஸாரதியின் சவுக்கும் அவ்விதமே மலைகளை உயரத்தூக்கி ...யும் கடுமையான காற்று வீசினது. கண்கள் கண்ணீரைப் ...ற்றன. அக்கினியிலிருந்து விளக்குவெட்டு பூச்சிகள்போல் ...னுக்கு வசமானவர்கள் யுத்தத்திலிருந்து ஒழியவில்லை.

तातोमेनिहतस्त्वयेत्युपगतःक्रोधानलोवर्धनः
त्वद्दृष्टयोज्वलितःप्रभूतमरुतादास्यत्ययेतेफलम् ।
इत्युक्तोरघुसिंहआहखरजंवीर्येखरस्यातिगम्
मांसंबाणहतस्यतेखगतयोभोक्ष्यन्तियद्वाक्खला ॥ १४६॥

"(ஹே இராமா!) நீ என்னுடைய தந்தையை வதம்செய்த ...ல் உண்டானதும் வளர்ந்ததுமான கோபமாகிற அக்கினி ...ன்னுடைய பார்வையாகிற பெருங் காற்றால் அதிகமாய் ஜ்வலி ...த்து உனக்கு பலனைக் கொடுக்கப்போகிறது'' என்று சொல்லப் ...பெற்ற "இராமன்'' பலத்தில் கரனைவிட மேலானவனும் கரனு ...டைய புத்திரனுமான "மகராக்ஷனை''ப் பார்த்து "உன்னுடைய ...ார்த்தை கடுமையாயிருப்பதால் பாணத்தால் அடிபெற்ற உன் ...னுடைய மாம்ஸத்தைப் பக்ஷிகள் பக்ஷிக்கப்போகின்றன'' என்று ...த்தில் கூறினார்.

नाराचैरथनागवत्प्रकुपितोरामश्शरैरष्टभिः
सूतंतस्यशरासनंरथहयान्प्रच्छिद्यशूलंत्रिभिः ।
अग्न्यस्त्रान्मकराक्षमात्मनिपरंभिन्दन्सतस्यानुगान्
आवासंगमयन्पुनस्त्रिदिवगान्प्राहर्षयद्विक्रमी ॥ १४७ ॥

பிறகு பலமுள்ள இராமன் யானைபோல் கோபித்து எட்டு ...ராசபாணங்களால் மகராக்ஷனுடைய ஸாரதியையும் வில்லை ...ம் ரதம் குதிரைகள் இவைகளையும் மூன்று பாணங்களால் சூல ...தையும் அறுத்து அக்கினியஸ்திரத்தால் மகராக்ஷனை மாரில் ...திகமாய் பிளந்து அவனைப் பின்பற்றியவர்களையும் மறுபடியும் ...அவனுடைய இருப்பிடத்தை அடைவித்து தேவர்களை ஸந்தோ ...மடைவித்தார்.

८० पित्रादेशमुपाऽऽददत्सुरपतेर्जेताऽनलंप्रीणयन्
हव्यैरप्यमृतायितैर्वियतिचच्छन्नंरथंप्राप्तवान् ।
भीतिंभीमबलान्नयन्कपिवरान्बाणैरमोघैरघु
श्रेष्ठौतौव्यथयांचकारतादिषूनन्तर्हितोमोघयन् ॥ १४८ ॥

இந்திரஜித்து தந்தையின் உத்திரவைப்பெற்று அமிருதம் போன்ற ஹவிஸ்ஸுகளால் அக்கினியை ஆனந்தமடைவித்து ஆகாயத்தில் மறைந்த இரதத்தை அடைந்து பயமளிக்கும் பலம் பெற்ற வானரங்களை வீணில்லாத பாணங்களால் பயமடைவித்து மறைந்து இருந்து இராமலக்ஷ்மணர்களின் பாணங்களையும் வீணாக்கி அவர்களைத் துன்பமடைவித்தான்.

अन्तर्धाननियोधनेनकुपितंदेवेन्द्रजेतुर्भृशम्
ब्रह्मास्त्रेणविहन्तुमात्तमनसंतस्याखिलान्वंशजान् ।
तूष्णींकान्तरिताऽऽहतेर्नयपटूरामोनिषिध्यानुजम्
सद्यश्शक्रजितंशरैश्शमयितुंप्रत्यैक्षतास्येक्षणम् ॥ १४९ ॥

இந்திரஜித்தின் மறைவான யுத்தத்தால் மிகவும் கோபமடைந்து அவனுடைய வம்சத்தில் பிறந்தவர்களையும் பிரம்மாஸ்திரத்தால் வதம்செய்ய மனம்பெற்ற தம்பியான இலக்ஷ்மணனை நீதியில் சிறந்த இராமன் மௌனம் பெற்றவர்கள் மறைந்தவர்கள் இவர்களின் வதத்திலிருந்து தடுத்து இந்திரஜித்தை உடனே நாசம் செய்வதற்காக அவனுடைய பார்வையை எதிர்பார்த்தார்.

८१ संछन्नोऽपिविभीतआत्तधनुषोरामाद्रणेरात्राणिः
लिप्सुश्शत्रुविदारणास्त्रमनलंयष्टुंप्रवृत्तोविना ।
विघ्नैस्स्वाहितमोहनायकलयन्मायामयींजानकीम्
आदायस्वरथेपुरोहनुमतःकेशेष्वगृह्णाद्बलात् ॥ १५० ॥

இந்திரஜித்து யுத்தத்தில் மறைந்திருந்தும் வில்லைப்பெற்ற இராமனிடம் பயந்து சத்துருவைக் கொல்லும் அஸ்திரத்தை அடைய விரும்பி இடையூர் இல்லாமல் யாகம் செய்வதற்கு முயற்சித்து தன்னுடைய சத்துருக்களை மோஹிக்கும்படி செய்வதற்

மாயா ஸீதையை உண்டுபண்ணி தன் இரதத்தில் ஏற்றிக்
கொண்டு ஹநுமானுக்கு முன்னிலையில் அவளைத் தலைமயிரில் பல
கப் பிடித்தான்.

रामस्सुन्दवधूमिवाद्यललनांहन्यांविरोधाऽऽस्पदम्
पश्चाद्वः कपयस्तथेत्यभिदधत्प्रच्छिद्यखड्गेनताम् ।
संहृष्टोनिनदन्विवेशसबलंमत्वाऽऽत्मनस्सार्थताम्
प्राप्तादुःखमवेक्ष्यतंरणभुवस्तेवानरादुद्रुवुः ॥ १५१ ॥

"இராமன் சுந்தனுடைய மனைவியான தாடகையை வதம்
செய்ததுபோல் விரோதத்திற்கு காரணமான இந்தப் பெண்ணை
வதம்செய்கிறேன். ஹே வானரங்களே! உங்களைப் பிறகு அவ்
விதம் செய்கிறேன்'' என்று இந்திரஜித்து சொல்லி கத்தியால்
அவளை வெட்டி ஸந்தோஷத்தோடு சப்தித்து தன்னை (விரும்பிய)
காரியத்தின் பயனைப் பெற்றவனாக நினைத்து (தன்) ஸைனியத்
தில் புகுந்தான் அந்த "இந்திரஜித்தை" வானரங்கள் பார்த்து
துக்கமடைந்து யுத்த பூமியிலிருந்து ஓடினார்கள்.

२ सान्त्वैस्स्वानुगयन्हरीन्प्रहरणंसंग्राहयन्मारुतिः
निर्मथ्यारिचमूंविचिन्त्यकदनंव्यर्थंविरोध्यावलेः ।
कृत्यंशक्रजितोविवक्षुरनुगैरामंययौरावणिः
संप्राप्तोऽथनिकुंभिलामयजतप्रीत्याऽऽशुहव्याशनम् ॥

"ஹநுமான்'' ஸமாதான வார்த்தைகளால் வானரங்களைத்
தன்னைப் பின் தொடரும்படி செய்தும் தங்களின் ஆயுதங்களை
எடுக்கும்படி செய்தும் சத்துரு ஸைனியத்தை ஸம்ஹரித்தும் சத்
துரு கூட்டத்தின் ஸம்ஹாரத்தை வீணாக நினைத்து "இந்திரஜித்
தின்'' காரியத்தை இராமனிடம் சொல்ல விரும்பி ஸைனியங்க
ளோடு சென்றார். பிறகு "இந்திரஜித்து'' சீக்கிரம் "நிகும்பிலை''
என்ற காளியின் ஆலயம்சென்று ஸந்தோஷமாய் அக்கினியை
ஆனந்தமடைவித்தான். (வேள்வி செய்தான்.)

८३ बुध्वावायुसुतात्प्रियानिहननंरक्षःकृतंराघवः
शोकेनातनुनानिपत्यधरणौसंमूर्छितोमोचितः ।

क्लेशाद्वानरशीतलोपचरणैस्सौमित्रिणाऽऽलिङ्गितः
प्राणेनेवबहिश्चरेणसुहृदाप्रावाचिधीरेतरः ॥ १५३ ॥

இராமன் வாயு புத்திரனிடமிருந்து இராக்ஷஸன் செய்த நாயகியின் நாசத்தை அறிந்து பயந்து அதிக துக்கத்தால் பூமியில் விழுந்து மூர்ச்சை அடைந்து வானரங்களின் குளிர்ந்த உபசாரத்தால் துன்பத்தைத் துறந்து வெளியில் திரியும் பிராணன் போன்ற அன்புபெற்ற இலக்ஷ்மணனால் ஆலிங்கனம் செய்யப் பெற்று கூறப்பெற்றான்.

आर्यत्वांशुभवर्त्मगंविरचितोधर्मोनयद्रक्षति
स्वान्क्लेशान्प्रगुणीकरोत्यपथगंसंपोषयत्यप्यसन् ।
तन्नास्त्येषइतिध्रुवंव्यवसितंसर्वैरदृष्टोयतः
धर्मस्योपकृतिर्बलेनसुमतेतत्सेव्यतामेतरत् ॥ १५४ ॥

"ஹே அண்ணா! நல்வழியில் நடக்கும் உன்னை செய்த தர்மம் காப்பாற்றாமல் இருப்பதாலும் உன்னுடைய துன்பங்களை மிகுதியாகச் செய்வதாலும் தர்மம் இல்லாமல் இருந்தும் கெட்ட வழியில் நடப்பவனுக்கு சுகம்கொடுப்பதாலும் அதை எல்லோர்களும் பார்க்காமலிருப்பதால் அது இல்லை என்பது நிச்சயமான தீர்மானம் அந்த தர்மத்திற்கு பலம் உதவிசெய்கிறது. ஹே புத்திசாலியே! அதைக் கையில் கொள்ளவேண்டும். மற்றதை அகற்றவேண்டும்."

सत्यंचेन्मतमार्यतेऽनृतवचास्तातोनबद्धस्साकिम्
धर्मस्यार्थमवेहिमूलमनघाक्षिप्रंस्वराज्यत्यजा ।
तच्छिन्नंदुरितंकरोतिपुरुषस्तंप्राप्तुमात्तश्रमः
क्लेशोऽयंस्वसमार्जितोवनगतेश्शौर्याद्धरिष्यामितम् ॥

"ஹே அண்ணா! உனக்கு ஸத்தியத்தில் விருப்பம் இருந்தால் அஸத்தியம் சொன்ன பிதாவை ஏன் சிக்ஷிக்கவில்லை? ஹே குற்றமற்றவனே! பொருளை தர்மத்திற்கு மூலகாரணமாக அறியவேண்டும். நீ உன்னுடைய இராஜ்யத்தை இழந்ததால் தர்மத்தின் வேரை சீக்கிரம் வெட்டினாய். மனிதன் பொருளைப் பெறுவதற்கு

மம் பெற்று பாபத்தைச் செய்கிறான். வனத்திற்கு வந்ததால்
ந்த துன்பத்தைத்தானே ஸம்பாதித்தாய் அதை பலத்தால்
ன் விலக்கப் போகிறேன்."

रामंवीक्ष्यविभीषणोव्यसनिनंतत्कारणंलक्ष्मणात्
ज्ञात्वोवाचतमाश्रितप्रणयिनंजानामिरक्षःपतेः ।
भावंतांनहनिष्यतिक्रतुकृतेर्विघ्नंविनिश्चित्यवः
कृत्वैतत्कपटाज्जिगीषुरहितान्रक्षस्सुतोयक्ष्यते ॥ १५६ ॥

அண்டினவர்களிடம் அன்புபெற்ற துக்கமடைந்த இரா
ன "விபீஷணன்" பார்த்து, அந்த துக்கத்தின் காரணத்தை
லக்ஷ்மணனிடமிருந்து அறிந்து கூறினான். இராவணனுடைய
அபிப்பிராயத்தை நான் அறிகிறேன். அவன் ஸீதையைக்
கொல்லமாட்டான். உங்களை யாகத்திற்கு இடையூராக நினை
து இந்திரஜித்து மாயையால் இதைச் செய்து சத்துருக்களை
பிக்க விரும்பி யாகம் செய்யப்போகிறான்.

पूर्येतक्रतुरेषचेन्मृतिहरस्सर्वान्निहन्याद्बली
कर्तातस्यतमाहतंकुरुबलैःप्राज्ञाऽऽदिशस्वानुजम् ।
वीरश्चैत्यनिकुंभिलांसविशतुत्यक्त्वाविलंबंसह
प्राप्तोऽस्माभिरनुव्रजद्भिरहितंनूनंप्रहण्यात्शरैः ॥ १५७ ॥

மரணத்தை விலக்கும் இந்த யாகம் முடிவு பெற்றால் இதைச்
சய்தவன் பலமடைந்து எல்லோர்களையும் கொல்லுவான்.
ஹ புத்திசாலியே! ஸைனியங்களால் அதை அழிக்கவேண்டும்
ன் தம்பிக்கு உத்திரவு கொடுக்கவேண்டும். வீரனை இலக்ஷ்
ன் தாமதமன்னியில் "நிகும்பிலைக்கு" வரவேண்டும். பின்
னான் தொடரும் எங்களோடு கூடவந்து பாணங்களால் சத்துருவை
ச்சயமாய் ஸம்ஹரிப்பான்.

संस्तस्याऽऽत्मनिशोकमत्यवहितोरामोविदत्रावणेः
यज्ञापूर्तिनिकुंभिलाऽभ्यगातिजन्माश्चर्यदामाहतिम् ।
कर्तुंतांसविभीषणैःकपिवरैरन्वीयमानंमहा
धानुष्कंस्वसहोदरंकृतनतिंप्रातिष्ठिपत्स्वाशिषा ॥ १५८ ॥

இராமன் மனதில் துக்கத்தை அடக்கி மிகவும் ஸாவதானமாய், நிகும்பிலே செல்லாமலும் யாகம் நிறைவேறாமலுமிருப்பதால் உண்டான ஆச்சரியகரமான இந்திரஜித்தின் மரணத்தை அறிந்து அதை செய்வதற்கு விபீஷணனுடன் கூடிய வானர வீரர்கள் பின்தொடரும் வில்லில் தேர்ச்சிபெற்றவனும் தன்னை வணங்கினவனுமான ஸஹோதரனை ஆசீர்வதித்து அனுப்பினர்.

८६ रक्षस्सुक्षपितेष्वगैःप्रहरणैर्वायोस्सुतेनाभिया
यज्ञापूर्तिजयाक्रुधापरुषितंतत्सजिघांसावृतम् ।
इन्द्रस्यप्रजितंवियद्रथगतिंबाणैर्गतिंपश्चिमाम्
वैरिभ्योददतंविभीषणगिरासौमित्रिरालोकत ॥ १५९ ॥

"ஹனுமான்" பயமில்லாமல் மலை மரங்கள் இவைகளால் இராக்ஷஸர்களை அழிக்கும்பொழுது யாகம் நிறைவேறாத கோபத்தால் பயங்கரமாயிருந்து அவனைக் கொல்லவிரும்பி ஆகாயத்தில் இரதத்தால் ஸஞ்சரித்து பாணங்களால் சத்ருக்களை மரணமடைவிக்கும் "இந்திரஜித்தை", இலக்ஷ்மணன் விபீஷணனுடைய வார்த்தையால் பார்த்தான்.

८७ न्यग्रोधोपगतःपुरास्वनिकटंयुद्धायसंप्रापितम्
सौमित्रिंचविभीषणंतदनुगंदृष्ट्वाऽनिनिन्दक्रुधा ।
किंतेनास्तिकृपापितृव्यतनयेन्याय्यंत्विदंकिंन्विति
प्रोक्तश्शक्रजितासआहवदभोस्तातस्यदुश्शीलताम् ॥

ஆலமரத்தை அடைவதற்கு முன் யுத்தத்திற்காக தன் ஸமீபத்தில் அழைத்துவரப்பெற்ற இலக்ஷ்மணனையும் அவன் பின் வந்த விபீஷணனையும் பார்த்து "இந்திரஜித்து" கோபத்தால் நிந்தித்தான். "ஹே சிறிய தகப்பனே! உனக்குப் பிள்ளையினிடம் தயவு இல்லையா? இது நியாயமா?" என்று சொல்லும் அவனைப் பார்த்து "விபீஷணன்" "அடே! பிதாவின் கெட்ட நடையைச் சொல்" என்று பதில் கூறினான்.

८८ वीराऽऽलापमथेतरेतरमुभौरामानुजोरावणिः
कृत्वाबाणकृताऽऽहतप्रतिहतौयुद्धंपरंचक्रतुः ।

प्राज्ञोयत्नानियुध्यतोरपभियोनैकंविशेषंतयोः
प्राजानाद्बलिनोर्बलप्रवृतयोश्शस्त्रास्त्रनिष्णातयोः ॥१८१॥

"இலக்ஷ்மணனும்" "இந்திரஜித்தும்" ஒருவருக்கொருவர் பிரவாதம்பேசி பாணங்களால் அடியையும் பதிலடியையும் செய்துகொண்டு மிகுந்த யுத்தம் செய்தார்கள். சரீர பலம் பெற்றும் ஸைனியங்களால் சூழப்பெற்றும் சஸ்திரங்களிலும் அஸ்திரங்களிலும் தேர்ச்சிபெற்று பயமில்லாமல் யுத்தம்செய்யும் அவ்விருவர்களில் புத்திசாலியும் ஒரு வித்யாஸமும் சொல்ல முடியவில்லை.

८९ वैवर्ण्यंवदनेविभाव्यसुमहाग्लानिंरणेरावणेः
प्रावेद्यत्त्वरयन्चलक्ष्मणमरेर्वर्मेषुभिःपाटयन् ।
वैमुख्यंश्रममुज्झतोरतिचिरंसंयुध्यतोस्तद्द्वयोः
आत्मीयस्यविभीषणोहितकृतेयुद्धेऽवतस्थेपुरः ॥ १८२ ॥

"இந்திரஜித்தின்" முகத்தில் நிறம்மாறி இருப்பதை "விபீஷணன்" பார்த்து யுத்தத்தில் அதிக களைப்பை இலக்ஷ்மணனுக்குத் தெரிவித்து சத்ரு ஸம்ஹாரத்தில் வேகம் செய்வித்து சத்ருவின் கவசத்தை பாணங்களால் பிளக்கச்செய்து, அவ்விருவர்களும் முகம் வாடாமலும் சிரமமில்லாமலும் வெகுகாலமாக யுத்தம் செய்யும்பொழுது இலக்ஷ்மணனுக்கு நன்மை செய்வதற்கு யுத்தத்தில் முன்னால் நின்றான்.

९० इच्छन्भ्रातृसुतस्यतस्यशमनंबाष्पाऽऽविलत्वाद्दृशोः
दक्षोनैवविभीषणोरचयितुंतान्प्राणुदद्वानरान् ।
वाक्यैर्हर्षबलप्रदैरिपुवधेतेवैरिणोऽघ्नन्नगैः
सूतंतस्यहयान्तथारघुवरःकुर्वन्पदातिंशरैः ॥१८३॥

"விபீஷணன்" ஸஹோதரபுத்திரனுடைய வதத்தை விரும்பியும் கண்களில் கண்ணீர் பெருகினதால் அவ்விதம் செய்ய முடியாமல் ஸந்தோஷத்தையும் பலத்தையும் கொடுக்கும் வார்த்தைகளால் சத்ருக்களை வதம் செய்யும்படி வானரங்களை

ஏவினன். அவர்களும் மலை மரங்கள் இவைகளால் சத்ருக்களை வதைத்தார்கள். "இந்திரஜித்து" காலாளாக நிற்கும்படி அவனுடைய குதிரைகளையும் ஸாரதியையும் இலக்ஷ்மணன் பாணங்களால் வதைத்தான்.

९१ यःपश्यत्सुकपिष्वदृष्टइतरैःप्राप्तोऽपरंस्यन्दनम्
स्वाऽऽस्थानात्पुनरेत्यविस्मयकरोबाणैरमित्रानहन् ।
एकैकंकुपितोऽच्छिनद्रघुपतिश्चापंगृहीतंद्विषः
सूतंतस्यनिपातयन्निटिलगैरस्त्रैस्त्रिकूटाद्रिभाः ॥ १६४ ॥

"இந்திரஜித்து" வானரங்கள் பார்க்கும்பொழுது மற்றவர்களின் கண்களுக்குப் புலப்படாமல் ஆச்சரியம் வரும்படி வேறு இரதம்பெற்று தன் நகரத்திலிருந்து மறுபடியும் வந்து பாணங்களால் சத்ருக்களை ஸம்ஹரிக்கும் பொழுது "இலக்ஷ்மணன்" நெற்றியில் பிரவேசித்த அவனுடைய பாணங்களால் திரிகூட மலையின் ஒளியைப்பெற்று கோபமடைந்து அவனுடைய ஸாரதியை விழச்செய்து எடுக்கப்பெற்ற ஒவ்வொரு வில்லையும் அறுத்தான்.

आघातेनसुकोपितंस्वगदयाघ्नन्तंपितृव्यंहयान्
संरक्षन्विमतस्यजीवनहरादस्त्राद्बलीलक्ष्मणः ।
संत्रातोदिविजैरघूद्वहगुणान्शंसन्स्वसंरक्षकान्
ऐन्द्रास्त्रेणजहारवासवजितश्शीर्षंसुराणांभिया ॥ १६५ ॥

(சத்ருவின்) அடியால் கோபம்பெற்று தன்னுடைய "கதை" என்ற ஆயுதத்தால் குதிரைகளைக் கொல்லும் சத்ருவின் சிறிய தகப்பனை விபீஷணனை, பிராணனைப் பிடுங்கும் அவனுடைய அஸ்திரத்திலிருந்து பலம்பெற்ற இலக்ஷ்மணன் காப்பாற்றி தேவர்களால் ஸம்ரக்ஷிக்கப்பெற்று ("இராமன் 'தர்மாத்மாவாகவும் ஸத்தியவானுகவும் பலத்தில் நிகரற்றவனுகவும் இருந்தால் ஹே பாணமே' இந்திரஜித்தை ஸம்ஹரிக்க வேண்டும்") என்று தன்னை இரக்ஷிக்கும் ஸ்ரீ ராமகுணங்களைத் துதித்து இந்திரனுடைய அஸ்திரத்தால் "இந்திரஜித்தின்" தலையை தேவர்களின் பயத்தோடு அறுத்தான்.

२ आरोप्याङ्कमुपाऽऽगतंकरतलादामर्शयन्लक्ष्मणम्
रामोरावणिमर्दनप्रमुदितोमत्वाविहस्तांरिपुम् ।
संस्तुत्याथविभीषणाऽऽदिसुहृदोयुद्धाऽऽर्तितोमोचयन्
भैषज्येनसुषेणजेनकृपयातानातनोन्निर्वृतान् ॥ १६६ ॥

"இராமன்" இந்திரஜித்தின் வதத்தால் ஸந்தோஷமடைந்து ஸமீபத்தில் வந்த "இலக்ஷ்மணனை" மடியில் ஏற்றிவைத்துக் கொண்டு உள்ளங்கையால் தடவித் துதித்து சத்துருவான இராவணனை கையற்றவனாக நினைத்து பிறகு தயவால் "விபீஷணன்" முதலிய சினேஹிதர்களை "சுஷேணனுடைய" வைத்தியத்தால் யுத்தத்தின் களைப்பிலிருந்து விலக்கி சுகமடைவித்தார்.

९३ पुत्रंप्राप्तसुराऽऽस्पदंदशमुखश्श्रुत्वाशुचाप्रालपत्
हा वत्सेन्द्रजितोऽपितेकथमियंजातादशामर्त्यतः ।
इत्यार्तोभ्रुकुटींमुखेषुविदधन्नेत्रेषुसंरक्तताम्
अकुध्यद्द्रशदष्टदन्तवसनास्स्निग्धाविभीयुर्यतः ॥ १६७ ॥

புத்திரன் தேவலோகம் சென்றதை "இராவணன்" கேட்டு துக்கத்தால் புலம்பினான். "ஹே குழந்தாய்! இந்திரனை ஜயித்த உனக்கும் இவ்விதம் துன்பம் மனிதனிடமிருந்து எவ்விதம் வந்தது?" என்று துக்கித்து முகங்களில் புருவங்களின் நெரித்தலையும் கண்களில் அதிக சிகப்பையும் அடைந்து சினேகிதர்களும் பயமடையும்படி நன்றாய் உதட்டைக் கடித்துக் கோபமடைந்தான்.

प्रीतादंबुजजन्मनस्स्वतपसासंपादितंकार्मुकम्
गृह्णन्तौनिजिघृक्षुरस्म्यसुहृदौनातोबिभेयामिति ।
प्रागल्भ्यादभिधायराक्षसकुलंशत्रोर्जिघांसुःप्रियाम्
प्राणेभ्योऽपिगरीयसींदशमुखस्तस्यास्समीपंययौ ॥१६८॥

"தன்னுடைய தவத்தால் ஸந்தோஷமடைந்த பிரம்மாவினிடமிருந்து ஸம்பாதித்த வில்லை எடுத்துக்கொண்டு சத்துருக்களை ஸம்ஹரிக்க விரும்புகிறேன். அவர்களிடமிருந்து பயமடைய

மாட்டேன்" என்று "இராவணன்" தைரியமாய் இராக்ஷஸர்களிடம்கூறி பிராணனைவிடப் பிரியமான சத்துருவின் மனைவியைக் கொல்ல விரும்பி அவளின் ஸமீபம் அடைந்தான்.

विज्ञायास्यचिकीर्षितंजनकजात्वस्तादशाऽऽस्यस्यसा
कुब्जांतांबहुधाव्यगर्हततदातत्स्वामिनींदुःखदाम् ।
कौसल्यांसमशोचदार्तवचनांतांवीक्ष्यधीमान्महा
पार्श्वोराक्षसनायकंव्यरमयद्योषिद्वधात्कुत्सितात् ॥१६९॥

"ஸீதை" "இராவணனுடைய" அபிப்பிராயத்தை அறிந்து பயந்து கூனியையும் துக்கத்தைக் கொடுத்த அவளின் எஜமானியையும் பலவிதமாக அப்பொழுது நிந்தித்தாள். "கௌஸல்யையை"க்குறித்து துக்கித்தாள். இவ்விதம் புலம்பும் ஸீதையை புத்திசாலியான "மஹாபார்சுவன்" பார்த்து நிந்திக்கத்தகுந்த ஸ்திரீவதத்திலிருந்து "இராவணனை ஒழிவுபெறச்செய்தான்.

९४ भीतात्रावणमूलसैन्यनिकरात्संयुध्यतोराघवः
तद्गोप्तुंस्वकपीन्झषोऽम्बुधिमिवप्राविक्षदात्तेषुधिः ।
गन्धर्वास्त्रहतानरामममरयोमोहादपश्यन्मिथः
मत्वाराममथाभिजघ्नुरमितानैकोऽपिशिष्येद्यथा ॥१७०॥

யுத்தம் செய்யும் இராவணனுடைய மூல ஸைனியத்தின் கூட்டத்திலிருந்து பயந்த தன்னுடைய வானர ஸைனியங்களை இராமன் காப்பாற்றுவதற்காக வில்லை எடுத்துக்கொண்டு ஸமுத்திரத்தில் மீன்போல் அந்த மூல ஸைனியத்தில் பிரவேசித்தார். சத்துருக்கள் கந்தர்வாஸ்திரத்தால் அடிக்கப்பெற்று மோஹத்தால் இராமனைப் பார்க்கவில்லை. பிறகு ஒருவருக்கொருவர் இராமனாக நினைத்துக்கொண்டு ஒருவன்கூட மிஞ்சாமலிருக்கும்படி அளவற்ற பேர்களும் அடித்துக்கொண்டார்கள்.

रामस्त्वासुहृदोरथान्ननननानाधारथान्वाजिनः
नानानानतनारनाकगणितान्तस्यप्रमत्ताद्द्विपान् ।
नानानानखरूपवापगणितान्शूरान्चतस्याङ्घ्रिगान्
नानानाननादमाघयामितान्यामाधर्माज्ञाद्वहन् ॥ १७१॥

"இராமன்" யுத்தத்தில் தன் சத்ருவின் ஏழுகோடியே இருபத்தி ஒன்பது லெக்ஷம் இரதங்களேயும், பத்துகோடியே இருபது லெக்ஷத்து அறுபதினுயிரம் குதிரைகளேயும், பதிமூன்று கோடியே பன்னிரண்டு லெக்ஷத்து இருபதினுயிரம் மதங்கொண்ட யானைகளேயும், நூற்று நாற்பத்தைந்து கோடியே எண்பது லெக்ஷம் பலம்பெற்ற காலாட்களேயும் ஒன்னரைமணியில் கொன்ருர்.

யானைகளின் பதினுயிரத்தையும், லெக்ஷம் குதிரைகளேயும், ஒன்னரை கோடி இரதங்களேயும், நூறுகோடி காலாட்கள் இவர்களின் ஸம்ஹாரத்தில் யுத்தத்தில் ஒரு முண்டம் (தலேயற்ற உடல்) குதிக்கிறது. கோடி முண்டம் குதித்தால் இராமனுடைய வில்லின் மணி ஒரு ஸெகெண்டு சப்திக்கிறது. இவ்விதம் ஒன்னரை மணி நேரம் வில்லின் மணி சப்தித்தது என்ருல் அவ்வளவு இராக்ஷஸர்கள் அழிந்தார்கள் என்று பெரியார் கூறுகிருர்.

एवंशात्रवमूलसैन्यममितंबाणैस्तमाहत्यतत्
रामोऽबोधयदात्मबान्धवततेरानन्दसन्दायकम् ।
स्वास्त्रप्राभवमप्यवाङ्मानसगंरुद्रास्त्रवीर्याऽऽस्पदम्
प्रत्यक्षीकृतवैभवात्रिभुवनंसन्मार्गगक्षेमदम् ॥ १७२ ॥

இராமன் இவ்விதம் பாணங்களால் சத்ருவின் அளவற்ற மூல சைன்யத்தை ஸம்ஹரித்து தன் பந்துக்களின் கூட்டத்திற்கு ஆனந்தம் அளிக்கும் வாக்குக்கும் மனதிற்கும் அடங்காததும் ருத்திராஸ்திரத்தின் பலத்திற்கு இருப்பிடமும் மூவ்வுலகங்களாலும் நேரில் அனுபவிக்கப்பெற்ற பெருமை பெற்றதும் நல்வழியில் நடப்பவர்களுக்கு க்ஷேமம் கொடுக்கும் தன்னுடைய அஸ்திரத்தின் பெருமையை அறிவித்தார்.

९५ सङ्घीभूयनिशाचरेन्द्रसुदृशश्शोकार्दिताःप्रालपन्
वंशोऽयंक्षपितोऽद्यशूर्पणखयाकामेनदुर्वृत्तया ।
सर्वानत्स्यातिराक्षसान्जनकजारामस्यशौर्यंमहत्
जानीतेनचरावणोविधिहतोनोपैत्यमुंसद्गतिम् ॥ १७३ ॥

இராக்ஷஸப் பெண்கள் துக்கத்தால் வருந்தி கூட்டமாகக் கூடி புலம்பினர்கள். "காமத்தால் கெட்ட நடைபெற்ற சூர்ப்பணகை இந்த வம்சத்தை இப்பொழுது அழித்தாள்." "ஸீதை" எல்லா ராக்ஷஸர்களையும் ஸாப்பிடப்போகிருள் "இராவணனும்" தெய்வத்தால் அடிக்கப்பெற்றிருப்பதால் இராமனுடைய மிகுந்த பலத்தை அறியவில்லை, ஸாதுக்களுக்கு ஸம்ரக்ஷகனான இராமனை சரணமடையவுமில்லை."

९६ लङ्कायांपरिदेवितंस्वसुदतीरक्षोवधूनांमहत्
श्रुत्वारावणउक्तविक्रमकथःप्रस्थापयन्नग्रतः
रक्षांसिस्वयमारुरोहसधनुर्योद्धुंसकामोविधेः
सन्देशेनसदुर्निमित्तमखिलंभीदाय्यवज्ञायतत् ॥ १७४ ॥

"இராவணன்" இலங்கையில் தன்னுடைய ஸ்திரீகள் இராக்ஷஸ ஸ்திரீகள் இவர்களின் அதிக அழுகையைக் கேட்டு புஜபலத்தின் கதையைச் சொல்லிக்கொண்டு யுத்தம் செய்வதற்கு விரும்பி இராக்ஷஸர்களை முன்னல் பிரயாணம் செய்வித்து தெய்வத்தின் உத்திரவால் பயத்தைக் கொடுக்கும் எல்லா அபசகுனங்களையும் அவமதித்து தான் வில்லை எடுத்துக்கொண்டு இரதத்தில் ஏறினன்.

रक्षोनायकमन्वयुःकृतरणंकृत्तोत्तमाङ्गान्कपीन्
कुर्वन्तंव्यथितान्शरैरिपुहरैर्विस्मारिताऽऽयोधनैः ।
यत्तस्तौरघुनायकौबलनिधीद्वारेणतेनाऽऽगतम्
सैन्योपेतविरूपनेत्रकमहापार्श्वोदरास्सद्रथाः ॥ १७५ ॥

யுத்தத்தை மறக்கச்செய்து சத்ருக்களை ஸம்ஹரிக்கும் பாணங்களால் வானரங்களை தலைகள் அறுந்துவருந்தும்படி யுத்தம் செய்யும் பலத்திற்கு இருப்பிடமான இராமலக்ஷ்மணர்கள் இருக்கும் வாயிலால் வந்தவனுமான "இராவணனை" ஸைனியங்களோடுகூடி நல்ல இரதங்களைப்பெற்ற "மஹோதரன்" மஹாபார்சுவன்" விரூபாக்ஷன் இவர்கள் பின்பற்றிச் சென்றூர்கள்.

९७ मुक्त्वास्यन्दनमास्थितस्यकारिणंसन्ताड्यतंभूरुहा
मुष्टिवज्रसमांप्रसह्यकवचंसन्दीर्यखड्गेनतत् ।

मूर्छांस्वस्यवितन्वतोऽधिनिटिलंक्रुद्धस्तलाऽऽघाततः
वैरूप्यंपरितोऽकरोद्द्विरिपतिर्नेत्रविरूपस्यतत् ॥ १७६ ॥

"சுக்ரீவன்" கோபமடைந்து, இரதத்தை விட்டு யானையில்
றிக்கொண்டு வஜ்ரத்துக்கு ஸமமான முஷ்டியின் அடியைப்
பாறுத்து கத்தியால் கவசத்தைக் கிழித்து தனக்கு மூர்ச்சை
யைக் கொடுத்த "விரூபாக்ஷனுடைய" யானையை மரத்தால் அடி
த்து அவனுடைய நெற்றியில் உள்ளங்கையின் அடியால் கண்
ணில் இருக்கும் ரூபக்குறைவை சரீரம் முழுவதும் உண்டு
பண்ணினன்.

.८ सुग्रीवोऽथमहोदरस्यपरिघादाहत्यशीघ्रंहयान्
युद्धंमुष्टिगदाकृतंविरचयन्शस्त्राऽऽहतिंव्यर्थयन् ।
खड्गेनास्यशिरस्त्रकुण्डलयुतंचिच्छिद्यशीर्षंमुदम्
शोकंराघवरावणावुपनयन्नस्ताविविद्याधरैः ॥ १७७ ॥

பிறகு "சுக்ரீவன்" பரிகம் என்ற ஆயுதத்தால் "மஹோதர
னுடைய" குதிரைகளை சீக்கிரம் அடித்து முஷ்டிகளாலும் கதை
என்ற ஆயுதத்தாலும் யுத்தம் செய்து அவனுடைய சஸ்திரங்
களின் அடியையும் வீணாகச்செய்து கத்தியால் அவனுடைய
தலைப்பா குண்டலங்கள் இவைகளோடு கூடிய தலையை அறுத்து
ஸ்ரீராமனுக்கு ஸந்தோஷத்தையும் இராவணனுக்கு துக்கத்தை
யும் கொடுத்து வித்தியாதரர்களால் ஸ்துதிக்கப் பெற்றான்.

.९ क्रुद्धस्याऽऽहतवानरस्यसुतजश्शक्रस्यरथ्यान्महा
पार्श्वस्याचलशृङ्गकल्पशिलयानिष्पात्यसंमोहयन् ।
शीर्षत्रंपरिघादिषुंचगळयन्नाहत्यमुष्ट्योरसि
प्रक्रोधय्यदशाऽऽननंनिजकपीन्प्राहर्षयाद्विक्रमी ॥ १७८ ॥

பௌத்திரனை "அங்கதன்"
பலம் பெற்ற இந்திரனுடைய பௌத்திரனை "அங்கதன்"
கோபம் பெற்று வானரங்களை வதம் செய்யும் "மஹாபார்சுவனு
டைய" குதிரைகளை பர்வதத்தின் சிகரத்திற்கு ஸமமான சிலை
யால் விழச்செய்து மூர்ச்சையை அடைவித்து பரிகத்தால் அவ
னுடைய தலைப்பாவையும் பாணத்தையும் நழுவச்செய்து

முஷ்டியால் மாரில் குத்தி ராவணனை அதிக கோபமடைவித்து தன் வானரங்களை ஸந்தோஷமடைவித்தான்.

१०० स्मृत्वाबन्धुसमाहातिंद्विगुणितक्रोधोदशाऽऽस्यःकपीन्
विद्राव्यत्ववमत्यसोदरमरेर्वीरोत्तमंस्वाग्रगम् ।
तस्येषून्प्रतिहत्यतावदिषुभीरामंबलेनाऽऽत्मनः
तुल्यंतेननियोद्धुमात्तकुतुकस्सोऽस्याजगामक्रुधा ॥१७९॥

"இராவணன்" பந்துக்களின் நாசத்தை நினைத்து இரண்டு பங்கு கோபம் பெற்று வானரங்களை விரட்டி தனக்கு முன்னால் இருக்கும் வீரனான இலக்ஷ்மணனை அவமதித்து அவனுடைய பாணங்களை அவ்வளவு பாணங்களால் திருப்பி அடித்து பலத்தால் தனக்கு ஸமமான இராமனோடு யுத்தம் செய்ய ஸந்தோஷம் பெற்று கோபத்தால் அவருக்கு எதிரில் வந்தான்.

नाराचानपिरौद्रचापगलितात्रामोललाटेवहन्
रुद्रस्यास्त्रममोघमात्तविजयंदत्तंस्वाविद्वेषिणः ।
वर्मण्यप्रहतेसमीक्ष्यावितथंतस्यास्त्रमप्यासुरम्
वह्न्यस्त्रेणनिरुद्धवेगमकरोत्तत्सन्तुतोषेप्सितैः ॥ १८० ॥

ருத்திர சாபத்திலிருந்துவந்த நாராசபாணங்களை இராமன் நெற்றியில் வஹித்து வெற்றியைக்கொடுக்கும் வீணாகாததும் தன் சத்துருவின் அழிவற்ற கவசத்தில் பிரயோகித்ததுமான ருத்திராஸ்திரமும் வீணாயிருப்பதைப் பார்த்து அவனுடைய அசுராஸ்திரத்தையும் அக்கினியஸ்திரத்தால் வேகமற்றதாகச்செய்தார் அன்பர்களோடு ஆனந்தித்தார்.

१०१ प्रत्यस्त्रेणनिहत्यवीर्यनिलयेरामेयदस्त्रंरिपोः
युद्धंकुर्वतिलक्ष्मणोनराशिरःकेतुंशिरस्सारथेः ।
चापंसप्तभिराशुगैस्समभिनद्ध्यान्चनिर्मिक्षतः
प्राणघ्नींचविभीषणस्यशतधाशक्तिंतयाऽहन्यत ॥१८१॥

Registered No. M.

# விளம்பரம்.

ஐயா.

இரண்டு, மூன்று வருஷங்களாக வால்மீகி ராமாயணத்தை ஆராய்ச்சி செய்து அதன் பாயின்ட்களை சுருக்கி சுலோகம் இயற்றி அதற்கு மொழிபெயர்ப்பும் போட்டு மிகுந்த திரவியச் சிலவால் அச்சிட்டிருப்பதால், ஆஸ்திகர்கள் அனைவரும் இதை ஆதரிக்கவேணுமாய்க் கேட்டுக்கொள்ளுகிறேன்.

வருஷ சந்தா ரூ. 3—0—0.
சஞ்சிகை 1 விலை 0—4—0.

வெளியூர் நண்பர்கள் அடியிற்கண்ட விலாசத்திற்கு 4½ அணா ஸ்டாம்பு அனுப்பிப் பெற்றுக்கொள்ளலாம்.

S. SUNDARESA SASTRIGAL,
Nemathampatti,
(Via) Chettinad.

Printed by S. Kalyanasundaram at The Sri Janardana Printing Works, Ltd
Town High School Road, Kumbakonam and
Published by S. Sundaresa Sastrigal, Nemathampatti.

உ

# சுந்தர ராமாயணம்

மாத ஸஞ்சிகை.

---


| பு. 1 | பகுதான்ய-௵ வைகாசி-௴ | ஸ. 11 |
|---|---|---|





ஆசிரியர்:

S. சுந்தரேச சாஸ்திரிகள்,

நேமத்தாம்பட்டி.

(செட்டிநாடு வழி.)

பலத்திற்கு இருப்பிடமான இராமன் சத்ருவின் அஸ்தி
ரத்தை பதில் அஸ்திரத்தால் அடித்து யுத்தம் செய்யும்பொழுது
இலக்ஷ்மணன் சத்ருவின் மணிதத்தலை என்ற த்வஜத்தையும்
ஸாரதியின் தலையையும் வில்லையும் குதிரைகளையும் கொல்லும்
விபீஷணனுடைய பிராணனைக்கொல்லும் சக்தி ஆயுதத்தை
ஏழு பாணங்களால் நூறு துணுக்காகப் பிளந்தான். அந்த சக்தி
ஆயுதத்தால் அடிக்கப்பெற்றான்.

शक्त्याभिन्नभुजान्तरंनिपतितंरमोनिरीक्ष्यानुजम्
मग्नोऽपिव्यसनेकपीनवाहितस्सान्दिश्यतद्रक्षणे ।
निश्चित्यारिविनाशनं धृतशरस्संभीषयन्रावणम्
शौर्यंस्वीयमदीदृशत्पुरमगाद्भीत्याऽनवपश्यन्यथा ॥१८२॥

சக்தியாயுதத்தால் மார்புபிளக்கப்பெற்று கீழே விழுந்த
தம்பியான இலக்ஷ்மணனை இராமன் பார்த்து துக்கத்தில் முழுகி
யும் ஸாவதானமாக அவனை இரக்ஷிக்கும்படி வானரங்களுக்கு
உத்திரவு செய்து பாணத்தை எடுத்து சத்ரு ஸம்ஹாரத்தை
நிச்சயித்து இராவணனை பயமடைவித்து அவனும் பயத்தால்
பின்புறம் பார்க்காமல் பட்டணத்திற்குப் போகும்படி தன்னு
டைய பலத்தைக் காண்பிவித்தார்.

१०२ रामंशोकवशंविचिन्त्यबहुधा भ्रातुर्यदत्याहितम्
सोपेक्षंरिपुनिग्रहेऽपिपरमंधैर्यंसुषेणोनयन् ।
भ्रातृप्राणनिरीक्षणात्पवनजाऽऽनीतेतदौषधचये
संक्षोद्यसतांविशल्यकरणीमाघ्रापयल्लक्ष्मणम् ॥१८३॥

ஸஹோதரனுடைய பிராண பயத்தை பலவிதமாக நினைத்து
துக்கமடைந்து சத்ரு ஸம்ஹாரத்திலும் உபேக்ஷை பெற்ற
இராமனை "ஸுஷேணன்" அவருடைய ஸஹோதரனுடைய
பிராணனைப் பார்த்ததால் அதிக தைரியத்தை அடைவித்து ஓஷதி
மலையை ஹனுமான் கொண்டுவந்ததும் அந்த "விசல்யகர
ணியை"க் கசக்கி இலக்ஷ்மணனை முகரச்செய்தான்.

शौर्यं तस्याविनाविलंबमचलाऽऽनीतेः परं मारुतेः
भैषज्यं च सुषेणजं कपिषु संशंसत्सु सुक्तव्यथः ।
रामेणातिमुदा बलैकनिधिना सौमित्रिरालिंगितः
तं प्राहाथ रिपुं जहि क्षितिसुतां तां संविदं पालय ॥ १८४ ॥

தாமதமன்னியில் ஒஷதிமலையைக் கொண்டு வந்ததால் வாயு புத்திரனுடைய அதிகவலிமையையும் "சுஷேணனுடைய" சிலாக்கியமான வைத்தியத்தையும் வானரங்கள் வர்ணிக்கும்பொழுது இலக்ஷ்மணன் துன்பம் விலகி அதிக ஸந்தோஷம்பெற்ற பலத்திற்கு இருப்பிடமுமான இராமனுல் ஆலிங்கனம் செய்யப்பெற்று பிறகு ("அண்ணு!) சத்துருவைக் கொல்லவேண்டும். ஸீதையையும் (ரிஷிகளின் பொருட்டுச் செய்த) பிரதிக்ஞையையும் காப்பாற்றவேண்டும்" என்று அவரிடம் தெரிவித்தான்.

१०३ भूमिस्थस्य रथस्थितेन न रणं न्याय्यं परं ध्यायता
शक्रेण प्रहितं समातलि रथं साश्वं सवर्मेषुधिम्
आरुह्यामरविद्विषोऽस्त्रमखिलं विध्यन्तदस्त्रैः
केतौ स्यन्दनवाजिभिः प्रतिहते चुक्रोध रामो भृशम् ॥ १८५ ॥

"பூமியில் இருப்பவனுக்கு இரதத்தில் இருப்பவனேடு யுத்தம் மிகவும் நியாயமில்லை" என்று நினைத்த இந்திரனுல் அனுப்பப்பெற்றதும் கவசம் வில்லு இவைகளோடு கூடியதும் குதிரைகளோடும் மாதலி என்ற ஸாரதியோடும் கூடியதுமான இரதத்தில் இராமன் ஏறிக்கொண்டு தேவசத்துருவான இராவணனுடைய எல்லா அஸ்திரங்களையும் அவைகளின் சத்துருக்களின் அஸ்திரங்களால் அடித்து தன்னுடைய த்வஜமும் இரதத்தின் குதிரைகளும் அடிபெற்றதும் மிகவும் கோபமடைந்தார்.

१०४ उत्पाते भुवि जेऽन्तरिक्षज उरौ लोकस्य भीतिप्रदे
वीरौ द्वौ च जयेति दित्यदितिजे स्पर्धाऽऽकुलाऽऽशीःकरे ।
रक्षोनायकमुक्तशूलमतनून्बाणान्दहत्सारवत्
शक्त्येन्द्रस्य महाबलो विदलयन्रामोऽरिमक्लेशयत् ॥

உலகத்திற்கு பயம் கொடுக்கும் அபசகுனங்கள் பூமியிலும் ஆகாயத்திலும் அதிகமாக உண்டாகும்பொழுது தேவர்களும் அசுரர்களும் ஸ்பர்த்தைகொண்டு "ஜய" என்று இரண்டு வீரர் களேயும் ஆசீர்வதிக்கும்பொழுது அதிக பாணங்களைப் பொசுக்கும் இராவணன் பிரயோகித்த பலம்பெற்ற சூலாயுதத்தை அதிக பலம்பெற்ற இராமன் இந்திரனுடைய சக்தி ஆயுதத்தால் பிள ந்து இராவணனைத் துன்பமடைவித்தார்.

१०५ रामोरावणबाणसङ्घदलितःपुष्यत्पलाशोपमः
धीरोवैरिणमाहतायदबलाचेत्सन्निधौमेबलात् ।
पश्येस्त्वंचखरंतदैवविधिनामद्दर्शनंप्रापितः
आमुष्यद्यफलंस्वकर्मणइतिक्रुद्धोजघानेषुभिः ॥ १८७ ॥

இராமன் இராவணனுடைய பாணக்கூட்டத்தால் பிளக்கப் பெற்று புஷ்பித்த பொரசமரத்திற்கு ஸமமாயிருந்து தைரியம் பெற்று சத்துருவைப் பார்த்து "என் முன்னிலையில் பலாத்கார மாய் மனைவியை அபஹரித்தால் அப்பொழுதே நீயும் கரனைப் பார்ப்பாய் இப்பொழுது தெய்வத்தால் என்நேரில் வந்தாய் தன் னுடைய கர்மாவின் பயனை அடையவேண்டும்" என்று கோபி த்து பாணங்களால் அடித்தார்.

रामस्यस्मरतोऽपकारमखिलंक्रोधप्रवृद्धेबले
वज्रेणेवगिरौसविंशतिभुजेसार्थैर्विदीर्णेशरैः ।
प्रत्यस्त्रस्यविसर्जनेऽप्यचतुरेकर्तव्यमूढोभिया
सूतस्तस्यरथंरणादपनयन्नाश्वासयत्स्वप्रभुम् ॥ १८८ ।

(தனக்குச் செய்த) எல்லா தீங்கையும் நினைக்கும் இராம னுடைய பலம் கோபத்தால் விருத்தியடையும்பொழுது பர்வதம் வஜ்ரத்தால் பிளந்துபோவதுபோல் பயன்பெற்ற இராமபாணங் களால் இருபது கைகளைப் பெற்ற "இராவணன்" பிளக்கப் பெற்று பதிலஸ்திரம் பிரயோகிக்கவும் முடியாதவனுய் பயத்தால் வேலையற்று மூர்ச்சைபெற்றதும் அவனுடைய ஸாரதி இரத த்தை யுத்தத்திலிருந்து வேறு இடம் அடைவித்து தன் எஜ மானனை நினைவுபெறச் செய்தான்.

१०६ शत्रौपश्यतिमेरथापवहनाद्वीर्ययशोऽनाशितत्
कार्तघ्नयाद्विमतोपजापतइतिक्रोधेनसंभर्त्सितः ।
सूतस्मानुनयंप्रसाद्यभयतोवीरानुचिन्त्यश्रमम्
रथ्यानांतादितिप्रभुंरिपुमभिप्रातिष्ठिपत्तद्रथम् ॥ १८९ ॥

"சத்துரு பார்க்கும்பொழுது இரதத்தைத் திருப்பிக் கொண்டு போனதால் என்னுடைய பலம் கீர்த்தி இவைகளை அழித்தாய் அது செய்த நன்றியை மறந்ததால் வந்ததா? சத்துருக்களின் ரஹஸியமான மந்திராலோசனையால் வந்ததா?" என்று "இராவணன்" கோபத்தால் அதட்டும்பொழுது "ஹே வீரா! உன்னுடைய களைப்பையும் குதிரைகளின் களைப்பையும் நினைத்து அவ்விதம் செய்தேன்" என்று ஸாரதி எஜமானனை பயத்தோடு ஸமாதானத்தோடு ஸந்தோஷமடைவித்து அவனுடைய இரதத்தை சத்துருவுக்கு நேரில் வரும்படி செய்தான்.

भूयःप्राप्तमरिंनियोद्धुमभयंदृष्ट्वाश्रमाऽऽर्तोभृशम्
रामोऽगस्त्यमुनेरवाप्यजयदंचाऽऽदित्यहृत्तोषकम् ।
स्तोत्रंत्रिस्त्वजपत्शुचीरविरतःप्रीतोविदन्रक्षसः
नाशंसंत्वरशत्रुसूदनइतिद्रागन्वगृह्णान्मुदा ॥ १९० ॥

பயமில்லாமல் மறுபடியும் யுத்தம் செய்வதற்கு வந்த சத்துருவை இராமன் பார்த்து மிகவும் களைப்பால் வருந்தி ஜயத்தைக் கொடுக்கும் சூரியனுக்கு மனக்களிப்பைக்கொடுக்கும் (ஆதித்ய ஹிருதய) ஸ்தோத்திரத்தை அகஸ்திய முனிவரிடமிருந்து அடைந்து பரிசுத்தமாய் மூன்று தடவை ஜபித்தார். அதனால் சூரியன் ஸந்தோஷமடைந்து இராவணனுடைய அழிவை அறிந்து "சத்துரு ஸம்ஹாரத்தில் வேகம்செய்யவேண்டும்" என்று சீக்கிரம் ஸந்தோஷமாய் அனுக்கிரஹம் செய்தார்.

१०८ कुर्वत्यात्मरथंरिपोरभिमुखंत्यक्त्वाऽपसव्यांगतिम् ।
सूतेदेवपतेर्धनुर्विनमयन्शत्रुंशरैरर्दयन् ।
रामस्स्वस्यारिपोर्जयापजयदंसद्दुर्निमित्तंरथे
प्रेक्ष्यारेर्विलयंविचिन्त्यमनसिप्रापोल्बणंविक्रमम् ॥

இந்திர ஸாரதியான "மாதலி" தன்னுடைய இரதத்தை
அப்பிரதக்ஷிண கதியைவிட்டு சத்துருவுக்கு எதிர்முகமாக வைத்
திருக்கும்பொழுது "இராமன்" இந்திரனுடைய வில்லை வளைத்து
அவனுடைய பாணங்களால் சத்துருவை அடிக்கும்பொழுது
தனக்கு ஜயத்தையும் சத்துருவுக்கு அபஜயத்தையும் கொடுக்கும்
நல்ல சகுனங்களையும் அபசகுனங்களையும் இரதங்களில் பார்த்து
சத்துருவின் நாசத்தை மனதில் நினைத்து அதிக பலத்தை
அடைந்தார்.

१०९ युद्धेवानरराक्षसैःक्षितिखगैर्दृष्टेऽमरैर्विस्मितैः
पश्यत्संततिरोमहर्षजनकेनैकोविवेदान्तरम् ।
जेतव्यंरघुनायकोदशगळोमर्तव्यमित्युत्सुकौ
द्वौबाणैश्चमिथः कृतप्रतिकृतौकेतुंहयान्जघ्नतुः ॥ १९२ ॥

பூமியில் இருக்கும் வானர ராக்ஷஸர்களாலும் ஆகாயத்தில்
இருக்கும் தேவர்களாலும் ஆச்சரியமடைந்து பார்க்கப்பெற்ற
ம் பார்ப்பவர்களின் கூட்டத்திற்கு மயிர் கூச்சலைக் கொடுக்
கும் யுத்தத்தில் ஒருவனும் வித்தியாஸமறியவில்லை" ஜயம் அவசி
யம் கிடைக்கும்" என்று இராமனும் "மரணம் அவசியம் கிடைக்
கும்" என்று இராவணனும் இருவர்களும் ஸந்தோஷமாய்ச்
செய்ததிற்கு பதில்செய்து ஒருவருக்கொருவர் குதிரைகளையும்
த்வஜத்தையும் பாணங்களால் அடித்தார்கள்.

११० रामस्याथदशाऽऽननस्यचरथौसूतेनसंचोदितौ
युद्धेऽस्मिन्विविधाविधायतुगतीरास्तांपुरेवाभितौ ।
वीक्ष्याश्वान्दशकन्धरोऽप्यभिहतान्क्रुद्धःपरावर्तितान्
सन्ताड्यामरसारथिंरघुपतिंप्राक्रोधयत्सत्वरम् ॥ १९३ ॥

பிறகு இராமனுடைய இரதமும் இராவணனுடைய இரத
மும் ஸாரதியால் ஓட்டப்பெற்று யுத்தத்தில் அநேகவித கதி
களைச்செய்து முன்போல் எதிராக இருந்தன. குதிரைகள் அடி
பெற்று பின் செல்லுகிறதைப் பார்த்து இராவணன் கோபமடை
ந்து "மாதலியை" அடித்து இராமனை சீக்கிரம் அதிக கோப
மடைவித்தான்.

युद्धंसंतुलितंद्वयोरपितयोरश्रान्तयोःकुर्वतोः
भीताव्योमचराधरासुरगवांसौख्यंभवत्वक्षयम् ।
रामोद्राग्जयतादृशाऽऽननमितिस्वाभीप्सितप्रार्थकाः
घोरार्धीइवरामरावणरणंप्रोचुर्निरस्तोपमम् ॥ १९४ ॥

அவ்விருவர்களும் களைப்பை அடையாமல் ஏற்றக் குறைவு இல்லாமல் யுத்தம் செய்யும்பொழுது ஆகாயத்தில் ஸஞ்சரிப்பவர்கள் "பிராமணர்களுக்கும் பசுக்களுக்கும் குறைவு இல்லாத ஸௌக்கியம் உண்டாகவேண்டும். இராமன் சீக்கிரம் இராவணனை ஜயிக்கவேண்டும்" என்று தங்களின் விருப்பத்தை வேண்டிக்கொண்டு இராம ராவணர்களின் யுத்தம் ஆகாயம்போலும் ஸமுத்திரம்போலும் உவமையற்றதாகக்கூறினார்கள்.

रामोविक्रमवान्रिपोरपिशिरस्सत्कुण्डलंप्राच्छिनत्
तस्यान्यन्मुखमैक्षतैकशतधाजातंतथासक्षुरः ।
मारीचाऽऽदिषुवीर्यवन्तइषवोमन्दाःकथंरावणे
दुर्वृत्तेचिरमेवमित्यतनुधातत्क्लेशितोऽचिन्तयत् ॥

பலம்பெற்ற இராமன் கத்தியோடு கூடி குண்டலங்களோடு கூடிய சத்துருவின் தலையையும் அறுத்தார். அவனுடைய வேறு முகத்தைப் பார்த்தார் நூற்றி ஒருதரம் முளைத்த அந்த முகத்தையும் அறுத்தார். "மாரீசன்" முதலியவர்களிடத்தில் பலம்பெற்ற பாணங்கள் இவ்விதம் வெகுகாலம் துர்நடைபெற்ற இராவணனிடம் என் பலத்தைக் காட்டவில்லை" என்று அவனால் துன்பமடைந்து அநேகவிதமாக நினைத்தார்.

१११ किंस्वामिन्ननुवर्तसेरिपुममुंमूढोयथाव्याहृतः
दैवैरस्यनरेणमृत्युरधुनाजह्यब्जजास्त्रेणतम् ।
प्रादात्तेघटसूनुरापविजयंशक्रोऽपियेनेतिसः
प्रोक्तोमातलिनातदस्त्रमहितघ्नंराघवेन्द्रोऽग्रहीत् ॥ १९६ ॥

"ஹே சுவாமி! இந்த சத்துருவை நீர் என்மூடன்போல் அனுஸரிக்கிறீர் இவனுக்கு இப்பொழுது மனிதனால் மரணத்தை

வர்கள் கூறினார்கள். தங்களுக்கு அகஸ்தியர் கொடுத்ததும்
ந்திரனுக்கு வெற்றியளித்ததுமான பிரம்மாஸ்திரத்தால் இவனை
ம்ஹரிக்கவேண்டும்' என்று "மாதலியால்" சொல்லப் பெற்ற
ராமன் சத்துருவைக் கொல்லும் அந்த அஸ்திரத்தை எடுத்தார்.

सन्धायैन्द्रशरासनेसतमिषुंरामोऽभिमन्त्र्याद्विषः
चिक्षेपोरसिवीर्यवान्पविरिवक्षोणीधरंतद्दृढम् ।
द्रागुत्पाट्यसभीमनादमवनिंनिर्विश्यभूयोऽविशत्
तूणींतस्यकरादधोनिरपतत्कायोऽथपूर्वंधनुः ॥ १९७ ॥

இராமன் இந்திரனுடைய வில்லில் அந்த பிரம்மாஸ்திரத்தை
பிமந்த்ரணம்செய்து சத்துருவின் மாரில் எறிந்தார். வஜ்ரா
தம் பர்வதத்தைப் பிளப்பதுபோல் அவ்வஸ்திரம் பயங்கர சப்
த்தோடு சீக்கிரம் கெட்டியான அவனுடைய மாரைப்பிளந்து
மியில் பிரவேசித்து மறுபடியும் இராமனுடைய அம்பு பெட்
டியை அடைந்தது. அவனுடைய கையிலிருந்து வில்லுமுன்னல்
ழே விழுந்தது. பிறகு அவனுடைய சரீரம் விழுந்தது.

रक्षांसिप्रहतानिवानरभटैरापुर्विनाथानिताम्
लङ्कामेवसमस्तुवत्रघुपतिंवैमानिकाहर्षतः ।
पुष्पाणिप्रववर्षुरंबरतलाद्वाक्शुश्रुवेसाध्विति
प्रामोदन्तकपीश्वराव्यपगमत्तद्दुर्निमित्तंतदा ॥ १९८ ॥

வானர வீரர்களால் அரக்கர்கள் அடிக்கப்பெற்று நாதனில்
லாமல் இலங்கையைத் தானே அடைந்தார்கள். விமானத்தால்
ஞ்சரிக்கும் தேவர்கள் ஸந்தோஷத்தால் இராமனைத் துதித்
தார்கள். ஆகாயத்திலிருந்து புஷ்பங்களை வர்ஷித்தார்கள் "நல்
து" என்று வார்த்தை கேட்கப்பெற்றது. வானர வீரர்கள்
ஸந்தோஷமடைந்தார்கள். அந்த அபசகுனங்கள் அப்பொழுது
விலகின.

१२ खिन्नंभ्रातृवधाद्विभीषणमुपप्राप्तंपुरायन्मया
प्रोक्तंमामवमन्यताकुमतिनाप्राप्तंत्वयावीरतत् ।

शोचाम्यत्रकमीप्सितामृतिरितिप्राप्तप्रलापंमृतेः
ऊर्ध्वंमेनविरोधइत्यतिकृपोरामोऽन्वशात्कर्मणे ॥ १९९॥

ஸஹோதரனுடைய வதத்தால் வருந்தி ஸமீபத்தில் வந்து "ஹே வீரா! முன் நான் சொன்னதை, என்னை அவமதித்து துர்புத்திபெற்று நீ அடைந்தாய் இந்த விஷயத்தில் யாரைக் குறித்து வருந்துவேன் நீ மரணத்தை விரும்பினாய்" என்று புலம்பும் "விபீஷணனைப் பார்த்து அதிக கருணைபெற்ற இராமன்" "மரணத்திற்குப் பிறகு எனக்கு விரோதமில்லை" என்று மரணச் சடங்கை செய்யும்படி உத்திரவு செய்தார்.

११३ राक्षस्योविदितप्रियाप्रियकथाश्शुद्धान्ततोनिर्गताः
दृष्ट्वाप्राणपतिंरणेनिपतितंखिन्नाःप्रलेपुर्मिथः ।
मृत्योर्मृत्युकृतोविभीषणमतंचेदादृतंमानवात्
नस्यात्तेमहतीविपाद्विधिविधिंकोवासुधीर्लङ्घयेत् ॥ २००॥

இராக்ஷஸிகள் கணவனுடைய கஷ்ட ஸமாசாரத்தை அறிந்து அந்தப்புரத்திலிருந்து வெளியில் வந்து யுத்தத்தில் விழுந்த புருஷனைப் பார்த்து மனம்வருந்தி மிருத்யுவுக்கும் மரணத்தைக் கொடுத்த நீ விபீஷணனுடைய ஸம்மதத்தில் மனம்வைத்தால் மனிதனிடமிருந்து மரணம்வராது. புத்திசாலியான எவன்தான் விதியின் கட்டளையை தள்ளமுடியும்?" என்று ஒருவருக்கொருவர் புலம்பினார்கள்.

११४ कान्तंप्रेक्ष्यहतंविदीर्णहृदयामण्डोदरीप्रालपत्
भ्रातुस्तेनिहतेःखरस्यकपिनालङ्कापुरीप्लोषणात् ।
वार्धौसेतुकृतमतिर्मम्पतेरामोनरोनेतिच
श्रीनाथःकपिरूपिभिस्त्रिदिवगैस्त्वांहन्तुमासीन्नरः ॥

அடிபெற்ற நாயகனைப்பார்த்து "மண்டோதரீ" மனம்பிளந்து புலம்பினாள். "ஹே நாதா! உன்னுடைய ஸஹோதரனான "கரனை"க் கொன்றதாலும் வானரம் இலங்காபுரியைப் பொசுக்கினதாலும் ஸமுத்திரத்தில் அணைகட்டினதாலும் இராமன் மனிதன் இல்லை. ஸ்ரீபதியான பகவான் மனிதனாக வானரரூபம் பெற்ற தேவர்களோடு உன்னை வதம்செய்ய வந்தார்" என்று என்னுடைய எண்ணம்.

सौन्दर्येणकुलेनवाजनकजाप्रेम्णानतुल्यामया
तन्मोहात्सुमतिर्नवेत्थमृतयेतेऽजायतैषायतः ।
साध्वीनांविफलंनचास्रमितियत्सत्यंप्रवादस्त्वयि
त्वत्पत्न्येवमभूवमश्रुनयनाभूरेणुलिप्ताङ्गका ॥ २०२ ॥

“அழகாலும் நற்குலத்தாலும் அன்பாலும் “ஸீதை” என
க்கு ஸமமில்லை. அவள் உன்னுடைய மரணத்தின்பொருட்டு
உண்டாயிருப்பதால் புத்திசாலியான நீ மோஹத்தால் அதை
அறியவில்லை. உன்னுடைய மனைவியான நான் இவ்விதம் கண்
களில் கண்ணீரையும் பூமியின் தூளிபடிந்த சரீரத்தையும் பெற்ற
தால் பதிவிரதைகளின் கண் ஜலம் வீணாகாது என்ற பழமொழி
உன்னிடம் உண்மையாயிருக்கிறது.”

खिद्येत्वामनुचिन्त्यनाथनतथापुत्रायनज्ञातये
क्रूराऽहंनविदीर्यतेमनइतिप्राप्तव्यथांतांस्त्रियः ।
वाक्यैर्नौभिरतारयन्नतिरयंदुःखोदकंराघवः
भ्रातुस्संस्कृतिमाचरापनयताइत्याहरक्षोऽनुजम् ॥

“ஹே நாதா! நான் பாபம் செய்தவள் என் மனம் பிளக்கா
மலிருப்பதைப்பற்றி வருந்துவது போல் உன்னை நினைத்தும் புத்
திரனை நினைத்தும் பந்துக்களை நினைத்தும் அவ்வளவு வருந்த
வில்லை” என்று துக்கமடைந்த “மண்டோதரியை” பெண்கள்
ஸமாதான வார்த்தைகளாகிற ஓடங்களால் அதிகவேகம்பெற்ற
துக்கமாகிற ஜலத்தைத் தாண்டச் செய்தார்கள்,” அண்ணனு
க்கு ஸம்ஸ்காரத்தை (மரணச் சடங்கை) செய்யவேண்டும். இவர்
களை விலக்கவேண்டும்” என்று இராமன் விபீஷணனுக்கு உத்திர
வுசெய்தார்.

आदेशेनविभीषणोरघुपतेर्लङ्कांप्रविश्याग्रजम्
यष्टारंविधिवद्द्विजैस्तदुचितंवस्त्वाघमाहत्यतम् ।
संस्कार्यप्रदिशन्तिलांजलिमथद्राक्संनिवर्त्यान्तिमाम्
इष्टिंतत्सुहृदशोगृहंप्रगमयत्रामंययौहर्षतः । २०४ ॥

"விபீஷணன்" இராமனுடைய உத்திரவால் இலங்கையில் பிரவேசித்து யாகம் செய்த அண்ணனை அவனுக்குத் தகுந்த ஸாமான்களைக் கொண்டுவந்து பிராமணர்களோடு சாஸ்திரப் பிரகாரம் ஸம்ஸ்காரம் செய்து பிறகு திலதர்ப்பணம் செய்து மரணச்சடங்கை சீக்கிரம் முடித்து அவனுடைய ஸ்திரீகளை அரண்மனையை அடைவித்து ஸந்தோஷமாய் இராமனை அடைந்தான்.

रामोरावणमर्दनप्रमुदितोदत्तंमहेन्द्रेणयत्
बाणंवर्मशरासनेस्वनिधृतंशत्रोर्वधायातनुम् ।
कोपंचव्यसृजद्यथापुरमसौनैसर्गिकींसौम्यताम्
प्रापाग्न्यातपयोगतप्तमुदकंशीतंप्रकृत्यायथा ॥ २०५ ॥

"இராமன்" இராவணவதத்தால் ஸந்தோஷமடைந்து சத்துரு வதத்திற்காக இந்திரனால் கொடுக்கப்பெற்றதும் தான் தரித்துக் கொண்டதுமான பெரிய பாணம் கவசம் வில்லு மிகுந்த கோபம் இவைகளை விலக்கினர். அக்கினி வெய்யில் இவைகளின் சேர்க்கையால் சூடான ஜலமும் சுபாவத்தால் குளிர்ச்சியை அடைவது போல் பிறவியால் வந்த நற்குணத்தை அடைந்தார்.

११५ युद्धाऽऽलोकननिर्वृतादिविचरास्सौमित्रिमैत्रींवराम्
सुग्रीवस्यकृतज्ञतामुपकृतिंवैभीषणांभीषणाम् ।
सीतायाःपतिदेवतांपवनभूशौर्यंकपीनांप्रियम्
स्तुत्वारामबलंनिजाऽऽस्पदमगुर्देवेन्द्रसूतस्तथा ॥ २०६ ॥

தேவர்கள் யுத்தம் பார்த்ததால் ஸந்தோஷமடைந்து அதிகமான இலக்ஷ்மணனுடைய "அன்பையும்" சுக்ரீவனுடைய நன்றியறிவையும் "விபீஷணனுடைய பயங்கரமான உபகாரத்தையும். ஸீதையின் பதிவிரதா தர்மத்தையும் "ஹனுமானுடைய" பலத்தையும் வானரங்களின் அன்பையும் இராமனுடைய பலத்தையும் துதித்துக்கொண்டு தங்களின் இருப்பிடமடைந்தார்கள். இந்திரனுடைய ஸாரதியான "மாதலியும்" அவ்விதமே.

पुण्यैरंबुभिराहृतैःकपिवरैरामाऽऽज्ञयालक्ष्मणः
लङ्कायांचविभीषणंनृपपदेद्रागभ्यषिञ्चन्मुदा ।

साम्राज्येऽधिकृतोददौसमुदितःपौरार्पितोपायनम्
रामायाथसआददेतदखिलंभक्तप्रियोऽशंकितः ॥ २०७॥

"இலக்ஷ்மணன்" இராமனுடைய உத்திரவால் வானரங்கள் கொண்டுவந்த புண்ணிய தீர்த்தங்களால் இலங்கையில் அரசனுடைய இருப்பிடத்தில் "விபீஷணனை" சீக்கிரம் ஸந்தோஷமாய் அபிஷேகம் செய்தான். பட்டாபிஷேகம் பெற்ற "விபீஷணன்" ஸந்தோஷம் அடைந்து பட்டணத்து ஜனங்கள் கொடுத்த உபசார ஸாமான்களை இராமன் பொருட்டுக் கொடுத்தான். பிறகு பக்தர்களிடத்தில் அன்புபெற்ற இராமன் அவைகள் எல்லாவற்றையும் ஆக்ஷேபமன்றி பெற்றுக்கொண்டார்.

११६ आदिष्टोरघुपुङ्गवेनहनुमान्प्राप्तस्त्वशोकंवनम्
रामस्याथजयंदशाऽऽस्यमरणंसंश्रावयन्जानकीम् ।
संतुष्टाऽऽशययाऽभ्यधायिसतयानिर्वाक्ययाऽर्धक्षणं
त्वत्प्रोक्तस्यकपेप्रियस्यसदृशंवीक्षेनदेयार्थकम् ॥ २०८ ॥

இராமனால் உத்திரவு செய்யப்பெற்ற "ஆஞ்னேயர்" அசோகவனம் சென்று பிறகு இராமனுடைய ஜயத்தையும் இராவணனுடைய மரணத்தையும் ஸீதையைக் கேட்கச் செய்த தும் அவள் அரைக்ஷணநேரம் பதில் கூறாமலிருந்து "ஹே வானரா நீ சொன்ன பிரிய ஸமாசாரத்திற்கு ஸமானமான கொடுக்கக்கூடிய பொருளை நான் காணவில்லை" என்று அந்த ஹனுமானுக்கு பதில் கூறினாள்.

यद्रामस्यनिरीक्षणंहतारिपोस्तन्मेऽखिलार्थाऽऽगतिः
देवित्वद्रिपुयोषितोभयकरीर्हन्म्यादिशत्वार्थिनम् ।
सीताऽबोधयदाञ्जनेयमतिधीर्नार्हान्तिकोपंत्विमाः
दास्योऽन्यस्यममासुकृत्यतइदंतानस्वतन्त्राइति ॥ २०९ ॥

"சத்துரு ஸம்ஹாரம் செய்த இராமனைப் பார்ப்பதே எனக்கு எல்லாப்பொருள்களின் வரவு. ஹே தேவி! உனக்கு பயத்தைச்செய்த இராக்ஷஸப் பெண்களை வதம்செய்கிறேன். உத்திரவு கொடுக்கவேண்டும்" என்று வேண்டும் ஹனுமானைப் ...த்திரவு கொடுக்கவேண்டும்'' என்று வேண்டும் ஹனுமானைப்

பார்த்து அதிக புத்திபெற்ற "ஸீதை" "இவர்கள் பிறருடைய வேலைக்காரிகள். இவர்கள் ஸ்வாதீனமற்றவர்கள் இவர்கள் கோபத்திற்குத் தகாதவர்கள். அந்த துன்பம் என் பாபத்தால் எனக்கு வந்தது" என்று நற்புத்தி போதித்தாள்.

व्याघ्रायाहयदृक्षआश्रिततरुस्तच्छ्रुत्वधीधीप्रदम्
व्याधोमांविनिपातयन्नपिरिपूरक्ष्योगृहंमेगतः ।
साधुर्योऽपकृतेषुचोपकुरुतेतद्रक्षणीयाइमाः
नाथंमेऽसिदिदृक्षुरित्यभिहितोरामंहनूमान्ययौ ॥ २१० ॥

"மரத்திலிருந்த கரடி புலியின் பொருட்டு புத்தியற்றவர்களுக்கும் புத்தி கொடுக்கும்படி கூறின வார்த்தையை ஹே குரங்கே! கேட்கவேண்டும். சத்துருவாயிருந்தும் என்னைத் தள்ளியும் வேடன் என்னுடைய கிருஹத்திற்கு வந்ததால் காப்பாற்றத் தகுந்தவன். குற்றவாளிகளுக்கும் உபகாரகுணத்தைச் செய்கிறவன் ஸாது. ஆனதால் இந்த இராக்ஷஸிகளை நான் காப்பாற்ற வேண்டும். என்னுடைய நாதனை நான் பார்க்க விரும்புகிறேன்" என்று ஸீதை பதில் சொன்னதும் ஹனுமான் இராமனை அடைந்தார்.

११७ ज्ञात्वावायुसुतात्स्ववीक्षणरतिंवैदेहजायाभृशम्
चिन्ताऽऽतैंनविभीषणोऽप्यभिहितोरामेणतांस्नापिताम् ।
संप्राप्तांशिबिकां विभूषिततनुंसंरक्षितांराक्षसैः
आनेतुंनिकटंस्वकंचुकिगणैर्व्यद्रावयद्वानरान् ॥ २११ ॥

"இராமன்" ஸீதைக்கு தன்னுடைய பார்வையில் இருக்கும் ஆசையை ஹனுமானிடமிருந்து அறிந்து மிகவும் கவலைபெற்று விபீஷணனுக்கு உத்திரவு செய்ததும் அவன் ஸீதையை ஸ்நானம் செய்வித்து சரீரத்தை அலங்கரித்து பல்லக்கில் ஏற்றி இராக்ஷஸர்களால் காப்பாற்றி இராம ஸமீபத்தில் அழைத்து வருவதற்காக தன்னுடைய வேலைக்காரர்களின் கூட்டத்தால் வானரங்களை விரட்டினன்.

रामेणाऽऽत्मकपिप्रभर्त्सनकृतक्रोधेनसीतेहसा
ऽऽयातुस्वाङ्घ्रिगतानदृष्यतिवधूर्दृष्टाऽखिलैरापादि ।

प्राकारोऽपिमहान्नरक्षतिवधूंशीलंवरेण्यंयथा
प्रोक्तेत्वंसविभीषणानुसरणारामंप्रहृष्टेक्षत ॥ २१२ ॥

இராமன் தன்னுடைய வானரங்களை அதட்டினதால் கோப ...டைந்து "இவ்விடத்தில் ஸீதை கால்நடையாக வரவேண்டும். ...ன்பத்தில் எல்லோர்களால் பார்க்கப்பெற்ற பெண்ணும் குற்ற ...டைவது இல்லை. நன்னடை பெண்களைக் காப்பாற்றுவது ...போல் பெரிய மதில் சுவரும் காப்பாற்றுகிறதில்லை" இவ்விதம் ...சொல்லும் பொழுது "ஸீதை" விபீஷணனால் பின் தொடரப் ...பெற்று ஸந்தோஷமடைந்து இராமனைப் பார்த்தாள்.

...१८ सीतांपार्श्वगतांजगादकुपितोरामश्श्रुतेदाहकम्
यन्मेशत्रुवधाऽऽदिकंविरचितंस्वाकीर्तिनिर्मोचकम् ।
त्वल्लाभायमयानकिंचनकृतंत्वामन्यगेहोषिताम्
सीतेवाञ्छतिकिंकुलीनचरितोगच्छक्ववास्वेप्सिते ॥२१३॥

இராமன் கோபமடைந்து பக்கத்தில் வந்த ஸீதையைப் ...பார்த்து "நான் செய்த சத்துரு ஸம்ஹாரம் முதலியது தன்னு ...டைய அபகீர்த்தியை விலக்குவதின் பொருட்டு நடந்தது. ...ஹே ஸீதே உன்னை அடைவதற்காக ஒன்றும் செய்யவில்லை. ...றருடைய கிருஹத்தில் வாஸம் செய்த உன்னை நற்குலத்தில் ...பிறந்தவன் விரும்புவானு? தனக்கு விருப்பமுள்ள எவ்விடத்தி ...லாவது செல்லவேண்டும்" என்று காதுகளைப் பொசுக்கும்படி ...கூறினர்.

...१९ वैदेहीकटुभाषणैरभिहितापत्याविरक्त्यातनौ
जानन्मेचरितंचिरेणसुकृतंहानाथयत्शंकसे ।
चेतोनक्षणमार्यजादपसरेच्चेत्पावकःपातुमाम्
इत्युक्त्वाज्वलनंविवेशाविवशातंदेवरोद्धर्धितम् ॥२१४॥

புருஷனுடைய கடுஞ்சொற்களால் ஸீதை சொல்லப்பெற்று ...சரீரத்தில் ஆசையற்று "ஹே நாதா! வெகுகாலமாக என்னு ...டைய நன்னடையை அறிந்திருந்தும் என் கஷ்டகாலத்தால் ...ஸந்தேஹம் அடைகிருய். என் மனம் க்ஷணநேரங்கூட ஆரிய

புத்திரனிடமிருந்து விலகாமலிருந்தால் என்னை அக்கினி பகவான் காப்பாற்றவேண்டும்" என்று கூறி கொழுந்தனுல் (கணவனுடைய தம்பியால்) வளர்க்கப்பெற்ற அக்கினியில் பரவசமாகப் பிரவேசித்தாள்.

१२० नेदीयोभिरुदश्रुभिर्विरचितेहाहारवेराघवम्
धर्म्यंचिन्तितवन्तमेत्यहरितामीशैर्विधिश्शङ्करः ।
देवोपेक्षसआत्मगांकथमिमांसर्वंविदन्नज्ञवत्
किंनासीर्भगवाञ्छ्रियःपतिरितिप्राबोधयत्तद्गुणान् ॥

ஸமீபத்தில் இருந்தவர்கள் அதிக கண் ஜலத்தைப்பெற்று ஹா ஹாகாரம் செய்யும்பொழுது தர்மத்திலிருந்து தவருமல் கவலையை அடைந்த இராமனைப்பார்த்து திக்குபாலர்களோடு வந்த "பிரம்மா"வும் "சிவபெருமானும்" "ஹேதேவா! நீஎல்லாம் அறிந்தும் அறியாதவன்போல் உன்னை அடைந்த ஸீதையை ஏன் உபேக்ஷை செய்கிருய்? நீ ஸ்ரீபதியான பகவானுக இருக்கவில்லையா?" என்று அவருடைய குணங்களை அறிவித்தார்கள்.

१२१ अङ्केनाऽऽददतासतीमवनिजांवैश्वानरेणाक्षताम्
स्वीकुर्वार्यमदाज्ञयाऽपदुरितांरक्षोऽधिपक्षोभणीम् ।
इत्युक्तोरघुपुङ्गवोभुवनगान्तद्वृत्तमावेदयन्
मान्यानांवचसाप्रगृह्यदयितां सोऽमोदतापेतभीः ॥२१६॥

பதிவிரதையாயும் அழிவற்றவளுமான ஸீதையை அக்கினி பகவான் மடியில் எடுத்துக்கொண்டு "ஹே அய்யா! பாபமற்றவளாயிருந்து இராவணனை அழிக்க இந்த ஸீதையை என்னுடைய உத்திரவால் பெற்றுக்கொள்ளவேண்டும்" என்று இராமனைப் பார்த்துக் கூறும்பொழுது "இராமன்" உலகத்தில் இருப்பவர்களுக்கு அவனுடைய நடையைத் தெரிவித்து பெரியோர்களின் வார்த்தையால் பயமில்லாமல் மனைவியைப் பெற்றுக்கொண்டு ஸந்தோஷமடைந்தார்.

१२२ कार्यंयन्मखभोजिनांविरचितंपौलस्त्यसंमर्दनम्
मर्त्योद्रागभवोऽप्यभूरतिकृपःस्वीयाऽऽस्पदंप्राप्नुहि ।

इत्युक्तं भुवनस्रजा रघुपतिं कर्तव्यशेषं विदन्
प्राहेदं निटिलेक्षणः प्रविश भोस्साकेतमानन्दनः ॥ २१७ ॥

"ஹே அதிக கருணை பெற்றவனே! நீ பிறப்பற்றவனாயிருந்தும் சீக்கிரம் மனிதனாய் பிறந்தாய். தேவர்களின் கார்யமான ராவணவதத்தைச் செய்தாய். தன்னுடைய இருப்பிடமடைய வேண்டும்" என்று இராமனைப் பார்த்து "பிரம்மா" கூறும் பொழுது சிவபெருமான் கார்யத்தின் மீதத்தை அறிந்து கூறினார். ஹே இராமா! நீ ஆனந்தமடைவித்து அயோத்தியா நகரம் அடையவேண்டும்."

बन्धून्प्रीणय शोचतो विरहतश्शाधि स्वराज्यं चिरम्
वंशं वर्धय मोदय क्रतुशतैर्यज्ञाशनानादृतः ।
रामैतं पितरं सुराऽऽस्पदगतं पश्येति सम्बोधितः
प्राणंसीत्सुरयानगं सुरतनुं सभ्रातृभार्यस्सतम् ॥ २१८ ॥

("ஹே இராமா!) விரஹத்தால் (பிரிவால்) துக்கமடைந்த பந்துக்களை ஸந்தோஷமடைவிக்கவேண்டும். வெகுகாலம் தன்னுடைய இராஜ்யத்தை ஆளவேண்டும். வம்சத்தை வளர்க்கவேண்டும். அநேக யாகங்களால் அன்போடு தேவர்களை ஸந்தோஷமடைவிக்கவேண்டும். தேவ சரீரம்பெற்று தேவலோகம் சென்றவரும் விமானத்தில் வந்தவருமான பிதாவைப் பார்க்கவேண்டும்" என்று அறிவிக்கப்பெற்ற இராமன், மனைவி, ஸஹோதரன் இவர்களோடுகூட அந்த தந்தையை வந்தனம் செய்தார்.

संमानं सुरनायकस्य दिवि सल्लोकं गतो नाप्यहम्
संहृष्यामि विना त्वया रघुवर त्वां वीक्ष्य जातस्सुखी ।
वत्स प्राप्य पुरीं गतो नृपपदं पाहि प्रजा मोदय
स्वीया नित्यनुशास्य राममितरावावोध्य सोऽन्तर्दधे ॥२१९॥

"ஹே இராமா! நான் தேவலோகம் சென்று இந்திரனுடைய ஸம்மானம் பெற்றும் நீ இல்லாமல் ஸந்தோஷமடையவில்லை. உன்னைப் பார்த்து சுகமடைந்தேன். ஹே குழந்தாய்

நீ பட்டணம் சென்று மகுடாபிஷேகம் பெற்று ஜனங்களைக் காப்பாற்றவேண்டும். பந்துக்களை ஸந்தோஷமடைவிக்க வேண்டும்" என்று தசரதர் இராமனுக்கு உத்திரவுசெய்து "ஸீதை" "இலக்ஷ்மணன்" இவர்களுக்கும் புத்திபோதித்து மறைந்தார்.

१२३ कैकेयीतदपत्ययोस्स्वपितरंप्रीतिंपरिग्राहयन्
स्वर्गस्थैर्वृणुभोरभीप्सितमितिप्रीत्याऽर्थितोराघवः ।
छिन्नाङ्गाव्रणआहतानपिकपीन्संजीवयन्तद्गिरा
कर्तव्यंविनियुज्यतेषुनिलयंप्राप्तेषुपूर्णेप्सितः ॥ २२० ॥

"கைகேயி" அவளின் புத்திரனை "பரதன்" இவர்களிடத்தில் பிதாவை பிரீதி அடைவித்தவரும் "ஹே இராமா! விருப்பத்தை வேண்டிக்கொள்ளு" என்று தேவர்களால் பிரார்த்திக்கப்பெற்று யுத்தத்தில் அங்கங்கள் அறுக்கப்பெற்றவர்களும் அழிக்கப்பெற்றவர்களுமான வானரங்களை அந்த தேவர்களின் அனுக்கிரஹத்தால் பிழைக்கச் செய்தவரும், செய்யவேண்டிய காரியத்தை தேவர்கள் உத்திரவுசெய்து இருப்பிடம் சென்றதும் நிறைந்த விருப்பம் பெற்றவருமான இராமன் விளங்கினார்.

१२४ सुग्रीवाऽऽदिसुहृज्जनान्सुखयमेपट्टाम्बरालङ्कृतैः
नाऽऽदास्यामितदद्यधर्म्यभरतस्ताम्यत्यसौमत्कृते ।
गन्तव्यानगरीनिजोपकृतितस्तुष्यामिमाक्रुध्यभोः
इत्युक्तिसविभीषणःकृतनतिःप्रत्याहरामंपुनः ॥ २२१ ॥

"ஹே விபீஷணா! "சுக்ரீவன்" முதலிய என்னுடைய சிநேஹிதர்களை பட்டாடை ஆபரணங்கள் இவைகளால் சுகமடைவிக்க வேண்டும் தர்மத்திலிருந்து தவராத பரதன் எனக்காக வருந்துகிறான். ஆனதால் இப்பொழுது அவைகளை நான் பெற்றுக்கொள்ளப் போவதில்லை. என்னுடைய நகரம் செல்லவேண்டும். உன்னுடைய உதவியால் ஸந்தோஷமடைகிறேன். நீ கோபிக்க வேண்டாம்" என்று சொல்லும் இராமனைப்பார்த்து அந்த "விபீஷணன்" வணங்கி மறுபடியும் கூறினான்.

भ्रात्रामेदशकन्धरेणतरसानिर्जित्यवित्तेश्वरम्
तस्मादाहृतमास्तिपुष्पकमितिख्यातंमनोजित्वरम् ।

अहात्वांगमयामिराघवपुरींसाकेतामित्यादृतः
गत्वाशीघ्रमुपानयत्सुशिखरंदिव्यंविमानंसतत् ॥ २२२ ॥

"என்னுடைய அண்ணனை இராவணன் பலத்தால் 'குபேரனை'' ஜயித்து அவனிடமிருந்து கொண்டுவந்ததும் வேகத்தால்) மனதை ஜயித்ததும் புஷ்பகமென்று புகழ்பெற்றது மான விமானம் இருக்கிறது. ஹே இராமா! அதனால் உன்னை ஒரு பகலில் அயோத்தியாபுரியை அடைவிக்கிறேன்'' என்று விபீஷணன் அன்போடு (கூறி) (இலங்கைக்கு)ச் சீக்கிரம் சென்று அழகிய சிகரம் பெற்ற அந்த விமானத்தைக் கொண்டுவந்தான்.

वैडूर्यस्फटिकाङ्कितैर्वरतलैर्युक्तंसुवर्णाङ्कितम्
कूटागारसमावृतंसरजतच्छायंगवाक्षोज्वलम् ।
किङ्किण्योघसुशब्दितंविलसितंहर्म्यैर्यथेच्छाऽऽगतम्
दृश्यंवीक्ष्यविमानमप्रतिमभंरामोऽगमाद्विस्मयम् ॥२२३॥

வைடூர்யம் ஸ்படிகம் இவைகளால் அலங்கரிக்கப் பெற்ற நல்ல பூமியோடு கூடியதும் தங்கத்தால் அடையாளம் செய்யப் பெற்றதும் மண்டபங்களால் சூழப்பெற்றதும் வெள்ளியின் ஒளி போன்ற ஒளியைப் பெற்றதும் ஜன்னல்களால் அழகியதும் சிறிய மணிகளின் கூட்டத்தால் நல்ல சப்தம் பெற்றதும் உப்பரிகைகளால் விளங்கியதும் விருப்பப்படி ஸஞ்சாரம் பெற்ற தும் பார்க்கத்தக்கதும் ஒப்பற்ற ஒளியைப் பெற்றதுமான அந்த விமானத்தை இராமன் பார்த்து ஆச்சர்யமடைந்தார்.

१२५ हृष्टेनाथविभीषणेनकपिषुप्रेम्णाऽर्चितेष्वम्बरैः
रत्नार्थैश्चतदारुरोहदिविषद्यानंसआर्येप्सितः ।
अङ्केभूतनयांवहन्ससहजस्संप्राप्तुमात्माऽऽलयम्
सन्दिष्टैस्स्वसुहृद्भिरप्यनुगतिंतामन्वमंस्ताऽर्थिताम् ॥२२४॥

பிறகு "விபீஷணன்'' ஸந்தோஷமடைந்து அன்போடு வானரங்களை வஸ்திரங்கள், இரத்தினங்கள், பொருள்கள் இவைகளால் ஸந்தோஷமடைவித்ததும் பெரியோர்களால்

விரும்பப்பெற்ற இராமன் அந்த விமானத்தில் மடியில் ஸீதையை வஹித்துக்கொண்டு தம்பியோடுகூட ஏறினர். தங்களின் இருப்பிடத்திற்குச் செல்லும்படி உத்திரவு செய்யப்பெற்ற தன் ஸ்நேஹிதர்கள் வேண்டும் கூடவருதலையும் ஸம்மதித்தார்.

१२६ गत्वोपाऽऽविविशुर्विमर्दरहितास्सर्वेभृशंनिर्वृताः
तस्मिन्गच्छतिदेववर्त्मनिमहावेगेविमानोत्तमे
रामोहृष्टउदैक्षयज्जनकजांमार्गेविशेषान्बहून्
लंकांयुद्धभुवंसमुद्रतरणंसेतुंमहेशार्चनम् ॥ २२५ ॥

எல்லா ஸைனியங்களும் நெருக்கமில்லாமல் மிகவும் சுகமாக உட்காரும்படி இடம் கொடுத்த அந்த விமானம் ஆகாயத்தில் அதிகவேகமாய் செல்லும்பொழுது இராமன் ஸந்தோஷமடைந்து இலங்கையையும் யுத்த பூமியையும் ஸமுத்திரத்தின் தாண்டுதலையும் ஸேதுவையும் சிவபூஜையையும் வழியில் இருக்கும் அநேக விசேஷங்களையும் கூறி ஸீதைக்குக் காண்பித்தார்.

किष्किन्धांहरिवल्लभस्यवसतिंदृष्ट्वाकपिप्रेयसीः
आनीयैतदुपाश्रितानिजपुरंगच्छेयमित्यर्थितः ।
रामोवल्लभयाऽर्कजनेसुदृशस्ताःप्रापयन्नान्तिकम्
मध्यस्थंसमतीत्यपुण्यसरयूंसाकेतगामैक्षत ॥ २२६ ॥

சுக்ரீவனுடைய இருப்பிடமான கிஷ்கிந்தை நகரத்தைப் பார்த்து "வானரப் பெண்களை அழைத்து அவர்களால் சூழப் பெற்று தன் நகரத்திற்குச் செல்லவேண்டும்" என்று மனைவியால் பிரார்த்திக்கப்பெற்ற இராமன் அந்தப் பெண்களை சுக்ரீவனல் ஸமீபத்தில் அழைத்து வரச்செய்து நடுவில் இருப்பவைகளைத் தாண்டி அயோத்தியை அடைந்த புண்ணிய ஜலம்பெற்ற ஸரயூநதியைப் பார்த்தார்.

१२७ ज्ञातीनांकुशलंमहद्भिर्विदिषुंस्वस्थानगंराघवम्
सर्वंतच्चरितंवदन्स्वतपसाज्ञातंसुहृत्सुस्थितिम् ।
श्वोगन्ताऽसिपुरीमितिप्रणयतःख्यातोभरद्वाजसन्
मौनीप्रार्थयदावसेतदतुलांपूजांप्रगृह्णन्निति ॥ २२७ ॥

பந்துக்களின் மிருந்த க்ஷேமத்தை அறிய விரும்பி தன் இருப்பிடத்திற்கு வந்த இராமனிடம் தன் தவத்தால் அறியப்பெற்ற அவருடைய எல்லா சரித்திரத்தையும் பந்துக்களின் க்ஷேமத்தையும் கூறி "நாளை தினம் அயோத்திக்குச் செல்ல வேண்டும் இவ்விடத்தில் ஒப்பற்ற விருந்தைப்பெற்றுக்கொண்டு வஸிக்கவேண்டும்" என்று புகழ்பெற்ற பரத்வாஜ முனிவர் அன்பால் வேண்டினார்.

यावत्त्रीणिसयोजनानिपरितस्साकेतमुर्वीरुहः
शैलान्पुष्पफलाऽऽवृतान्मधुजलस्रोतोवहानाचरत् ।
संहृष्टावनवासिनोजितसुधासारंफलानांचयम्
स्वादन्तोऽमृतभोजनाइवयथास्युर्यावदात्मेप्सितम् ॥

அயோத்திக்கு நான்கு புறமும் மூன்று யோஜனைதூரம் வரை வானரங்கள் அமிருதத்தின் ருசியை ஜயித்த பழங்களின் குவியல்களை தன் விருப்பம்வரை ஸாப்பிட்டு அமிருதபானம் செய்த தேவர்கள்போல் இருக்கும்படி பூமியில் முளைத்தமரம் கொடிகளை புஷ்பங்கள் பழங்கள் இவைகளால் சூழப்பெற்றதாகவும் மலைகளை தேன்போன்ற ஜலம்பெற்ற நதிகளை அடைந்திருக்கும்படியும் பரத்வாஜமுனிவர் செய்தார்.

१२८ जिज्ञासोर्भरताऽऽशयंरघुपतेस्सन्देशतोवायुजः
शीघ्रंप्राप्यचशृङ्गिबेरनगरंवाचागुहंहर्षयन् ।
अध्वानंजवनःपितेवनितरांदूरंमुदालङ्घयन्
धर्ममूर्तमिवैक्षताथभरतंचीराम्बरंसज्जटम् ॥ २२९ ॥

பரதனுடைய மனதை அறிய விரும்பும் இராமனுடைய உத்திரவால் அனுமான் சிருங்கி பேரநகரம் சீக்கிரம்சென்று வார்த்தையால் குஹனை சந்தோஷமடைவித்து, தகப்பனான வாயு போல், சந்தோஷமாய் தூரவழியைக் கடந்து பிறகு உருவம் பெற்ற தர்மம்போன்ற மரவுரி சடைகளை தரித்த பரதனைப் பார்த்தார்.

आर्यस्यार्चितपादुकेअपिपुरस्कृत्यावनेश्शासकम्
युक्तंमन्त्रिभिरात्मनस्समतुलैस्तंक्रोशमात्रेस्थितम् ।

साकेतस्यससांजलीरघुपतेर्विज्ञापयन्नागतिम्
तेनार्चिष्टकृताऽऽदरेणबहुधावक्ताप्रियंभाषितम् ॥२३०॥

பூஜிக்கப்பெற்ற அண்ணனுடைய பாதுகைகளை முன்னல் வைத்து பூமியை பரிபாலிக்கிறவனும் தனக்கு சமமான மந்திரிகளோடு அயோத்திக்கு இரண்டு நாழிகை தூரத்தில் இருக்கிறவனுமான பரதனிடம் ராமனுடைய வரவை அஞ்சலிபந்தம் செய்து அறிவித்து பிரியமான வார்த்தையை பலவிதமாகக்கூறும் ஹனுமானைப் பரதன் அன்போடு பூஜித்தான்.

१२९ संपृष्टोऽप्यनवद्यरामचरितंजिज्ञासमानेनसः
प्रीतोऽन्तर्भरतेनतत्प्रकथनेमत्वाविधेस्तुष्टताम् ।
तस्मैप्राहपुरेभवंतदखिलंत्वज्ञातमारण्यकम्
द्रक्ष्यस्यार्यमविघ्नमागतमसुंश्वःपुष्ययुक्तेदिने ॥ २३१ ॥

குற்றமற்ற இராம சரித்திரத்தை அறிய விரும்பும் பரதனல் வினவப்பெற்ற ஹனுமான் அந்த இராம கதையைச் சொல்லுகிற விஷயத்தில் தெய்வம் ஸந்தோஷமடைந்திருப்பதை மனதில் நினைத்து ஸந்தோஷமடைந்து பட்டணத்தில் நடந்ததும் வனத்தில் நடந்ததும் தெரியாததுமான எல்லா ராமசரித்திரத்தையும், "இடையூர் இல்லாமல் வந்த அண்ணனை பூச நக்ஷத்திரத்தோடு கூடிய நாளை தினம் பார்க்கப் போகிருய்'' என்றும் பரதன் பொருட்டுக் கூறினர்.

१३० सन्तुष्टोभरतोयथाऽर्थहनुमद्वाचाऽऽर्चयन्देवताः
शत्रुघ्नेनसकारयन्नगरतश्चाऽऽवासतस्सर्वतः ।
मार्गान्निम्नसमुन्नतत्वरहितान्वार्युक्षितान्भूषितान्
प्रत्युद्यातुमतित्वरोरघुपतिंप्रास्थापयत्सैनिकान् ॥ २३२ ॥

உண்மையான ஹனுமானுடைய வார்த்தையால் பரதன் ஸந்தோஷமடைந்து தெய்வங்களைப் பூஜித்து இருப்பிடமிருந்து பட்டணம்வரை எல்லாவிடத்திலும் வழிகளை மேடு பள்ளமில்லாமலும் ஜலம் தெளித்தும் அலங்காரம்பெற்றதுமாக சத்ருக்னனல் செய்வித்து இராமனை எதிர்கொண்டு அழைப்பதற்கு மிகவும் வேகமாக ஸைனியங்களை பிரயாணம் செய்வித்தான்.

पौरैर्मन्त्रिभिरन्वितोद्विजानिभिर्भ्रातावधूभिस्सुत
कैकेय्यामुदितपुरस्यसुषुमास्वर्गश्रियोजित्वरी ।
नन्दिग्राममुपैद्दिदृक्षुरिवसारामंसुरैस्सन्नुतम्
गृह्णन्नार्यसुपादुकेस्वशिरसाप्रत्युद्ययौसोऽग्रजम् ॥ २३३ ॥

பட்டணத்தின் ஜனங்களோடும் மந்திரிகளோடும் பிரா மணர்களோடும் தம்பியோடும் பெண்களோடும் கைகேயியின் புத்திரனை பரதன் ஸந்தோஷமடைந்ததும் சுவர்க்கத்தின் அழகை ஜயித்த பட்டணத்தின் அழகு தேவர்கள் போற்றும் இராமனைப் பார்க்க விரும்பியதுபோல் நந்திக் கிராமத்தை அடைந்தது. பரதன் அண்ணனுடைய பாதுகைகளைத்தன்சிரஸில் வஹித்து அண்ணனை எதிர்கொண்டு அழைத்தான்.

हेतुंरामविलंबितस्यवदतिव्याकृत्यभिज्ञेवरम्
दृष्ट्वापुष्पविमानमात्तानिनदेस्वयानुगौघेभृशम् ।
यानेभ्योऽध्यवरुह्यभूमिगमनेप्रमाऽऽवृतेपश्यति
प्रेक्ष्यार्कंगिरिगृङ्गगंजनइवप्रावन्दताऽऽर्यंसुधीः । २३४ ॥

இலக்கண பண்டிதனை ஹனுமான் இராமனுடைய தாம தத்தின் தகுந்த காரணத்தைத்தெரிவிக்கும்பொழுது புஷ்பகவிமா னத்தைப் பார்த்து தன்னுடன் கூட வருபவர்களின் கூட்டம் மிகவும் சப்தித்து வாஹனங்களிலிருந்து இறங்கி பூமியில் நடந்து அன்போடு பார்த்திருக்கும்பொழுது உதயமலையின் சிகரத்தில் இருக்கும் சூரியனை ஜனங்கள்போல் புத்திசாலியான பரதன் அண்ணனை நமஸ்கரித்தான்.

रामेणत्वरयाप्लुवंगमयताचित्राऽऽकरंवाहनम्
रामेणत्वरयाप्लवंगमयताचित्राऽऽकरंवाहनम् ।
स्वाऽऽदेशाद्भरतोनतोऽधिधरणिस्वारोपितामोदितः ।
आश्लेषणनिरंतरेणसुहृदालब्धेनसभ्रातृकः
सीतालक्ष्मणहर्षणोऽनुगमनानस्तौत्स्वसान्त्वोदितैः ॥

புஷ்பகவிமானத்தை இரா சித்திரங்களுக்கு இருப்பிடமான புஷ்பகவிமானத்தை இரா மன் தன்னுடைய உத்திரவால் வேகமாய் பூமியை அடைவித்து பூமியில வணங்கின தம்பியோடு கூடிய பரதனை அதில் ஏறச்

செய்து சினேஹிதன் பெற்ற பலமான ஆலிங்கனத்தால் ஸந்தோஷமடைவித்ததும் பரதன் ஸீதை இலக்ஷமணன் இவர்களை ஸந்தோஷமடைவித்து பின் வந்தவர்களை தன் ஸமாதான வார்த்தைகளால் துதித்தான்.

मातॄणांपदयोर्नतंपुरजनैरभ्यार्चितंस्वागत-
प्रश्नेनाभ्यदधान्मुदासभरतस्तत्पादुकेपूजिते ।
रामंतस्यसुयोजयन्चरणयोर्निर्यातितंरक्षितम्
राज्यंतेक्षितिनायकप्रगुणितंस्वीकुर्वभूवंकृती ॥ २३६ ॥

தாயார்களின் திருவடிகளில் வணங்கினவனும் பட்டணத்தின் ஜனங்களால் நல்வரவு வினவப்பெற்று பூஜிக்கப்பெற்றவனுமான இராமனை, பரதன், பூஜிக்கப்பெற்ற அவருடைய பாதுகைகளை அவருடைய திருவடிகளில் சேர்த்து, "பூமியின் அதிபதியே உன்னுடைய இராஜ்யத்தை வளரச்செய்து காப்பாற்றி ஒப்பிவித்தேன் அதைப்பெற்றுக்கொள்ள வேண்டும். நான் பாக்கியம்பெற்றேன்" என்று ஸந்தோஷமாய்க் கூறினான்.

एवंवाक्यमवेक्षितंकपिनिशाचारैर्भृशं विस्मितैः
आरोप्याङ्कमथानुजंरघुपतिस्सर्वैःप्रहृष्टोगतः ।
नन्दिग्राममदोविमानमतुलंदेवंधनेशंवह
त्वंप्रीत्येतिकृतानुमत्यगमयत्सत्पुष्पकंतत्प्रभुम् ॥ २३७॥

இவ்விதம் வார்த்தை கூறினவனும் மிகவும் ஆச்சரியமடைந்த வானர ராக்ஷஸர்களால் பார்க்கப்பெற்றவனுமான தம்பியான பரதனை இராமன் ஸந்தோஷமடைந்து பிறகு மடியில் ஏற்றிவைத்து எல்லோர்களோடு கூட நந்திகிராமம் சென்று ஒப்பற்றதும் புஷ்பங்களைப் பெற்றதுமான அந்த விமானத்தை "நீ அன்போடு குபேரனை வஹிக்கவேண்டும்" என்று அனுமதி கொடுத்து அதன் எஜமானனிடம் அனுப்பினர்.

१३१ आसीनस्यगुरोःपुरःकृतनतिंवीक्ष्याऽऽर्यमात्ताऽऽसनम्
स्निग्धोमूर्ध्निकृतांजलिस्सभरतःप्राहाखिलान्श्रावयन् ।
राज्यंमेयददामहत्स्वजननीप्रीत्यैददाम्यद्यते
स्वीकुर्वप्रतिगीर्वलिष्ठभवतोन्यूनोवहेयंकथम् ॥ २३८ ॥

உட்கார்ந்திருக்கும் குருவின் முன்னிலையில் நமஸ்காரம் செய்து ஆஸனத்தில் அமர்ந்த அண்ணனைப் பார்த்து அன்பு பெற்று பரதன் சிரமேற் கைகளைக் குவித்து எல்லோர்களும் கேட்கும்படி கூறினான் "என் தாயாரின் ப்ரீதியின் பொருட்டு என்னிடம் தாங்கள் கொடுத்த பெரிய இராஜ்யத்தை இப்பொழுது தங்களின் பொருட்டு நான் கொடுக்கிறேன். பதில் கூறாமல் பெற்றுக்கொள்ள வேண்டும் ஹே பலம்பெற்றவனே! தங்களைக் காட்டிலும் சிறியவனான நான் எவ்விதம் வஹிப்பேன்."

राज्यंशासितुमेवतेसुकृतवान्तातोऽप्यमोघाऽऽशयः
त्वांप्राप्याऽऽर्यमनीष्यमोदतभृशंतत्कामनांपूरय ।
बिभ्रत्तन्मकुटंस्वशीर्ष्ण्यधिगतोभूपाऽऽसनंभास्वरम्
प्राप्तस्स्यांसुखमप्रमेयमधुनासंमुक्तराज्यश्रमः ॥ २३९ ॥

ஹே அண்ணா! புண்ணியம் செய்தவரும் பயனடைந்த விருப்பம்பெற்றவரும் புத்திசாலியுமான தங்களின் தந்தை இராஜ்யத்தைக் காப்பாற்றுவதற்காகவே தங்களை அடைந்து மிகவும் ஸந்தோஷித்தார். அவருடைய கிரீடத்தை தன் சிரஸில் தரித்து அழகிய ஸிம்மாஸனத்தில் அமர்ந்து அவருடைய விருப்பத்தை நிறைவேற்றவேண்டும். இராஜ்யத்தால் வந்த சிரமத்தைத் துறந்து அளவற்ற சுகத்தை இப்பொழுது நான் அடையவேண்டும்."

कामोऽयंचिरनिर्मितस्सुफलितोदैवादिदानीमिति
भ्रातर्यर्थयतिप्रभुस्सकरुणस्सोऽभाषताथौमिति ।
शत्रुघ्ननियोजिताउपययुर्द्राक्श्मश्रुणोवर्धकाः
भ्रातॄन्तीन्जटिलाविशोधितजटास्स्नातामहाऽर्घांबराः ॥

"வெகு காலமாய் நினைத்த இந்த விருப்பம் தெய்வாதீனமாய் இப்பொழுது பயன்பெற்றது" என்று தம்பியான பரதன் வேண்டும்பொழுது ஸாமர்த்தியம் பெற்ற "இராமன்" கருணையோடு பிறகு "ஓம்" என்று அங்கீகரித்தார். சீக்கிரம் மீசை வளர்ப்பவர்கள் "சத்துருக்னனால்" ஏவப்பெற்று மூன்று ஸஹோதரர்களிடமும் வந்தார்கள். சடைபெற்றவர்கள் சடைகள் கலை

யும்படி மயிர்களை அலங்கரித்துக்கொண்டார்கள். ஸ்நானம் செய்தார்கள். விலைமிகுந்த ஆடைகளை அணிந்து கொண்டார்கள்.

स्वप्रेयस्सुविभूषिताऽऽत्मतनुषुप्राप्तेषुसाकेततः
मन्त्रिष्वात्ममहाऽऽभिषककरणव्यग्रेषुचाभ्यागतम् ।
आरूढस्ससुमन्त्रयन्तृकरथंरामोऽप्ययोध्यांययौ
छत्रंचव्यजनंतदाजगृहतुर्द्वौभ्रातरावुत्सुकौ ॥ २४१ ॥

"இராமனும்" தன்னுடைய சினேஹிதர்கள் தங்களின் அங்கங்களை அலங்கரித்துக்கொண்டதும் தனக்கு பட்டாபிஷேகம் செய்வதில் ஸாவதானமான மந்திரிகள் ஆஸ்தானமான அயோத்தியிலிருந்து வந்தபொழுது சுமந்திரனை ஸாரதியாகப் பெற்று வந்த இரதத்தில் ஏறிக்கொண்டு அயோத்திக்குச் சென்றார். இரட்டை ஸஹோதரர்கள் அப்பொழுது ஸந்தோஷமாக சாமரம் விசிறி இவைகளை எடுத்துக்கொண்டார்கள்.

रश्मीन्सत्वरमाददात्सभरतोरक्षःपुरोऽवीजयत्
देवावाद्यमघोषयन्कलरवंशत्रुंजयंकुंजरम्
आरुक्षत्कपिसत्तमोऽथकपयोमानुष्यवेषाअगुः
वादित्रैर्मधुरस्वनैस्सहबलैरामःपुरीमापसः ॥ २४२ ॥

"பரதன்" வேகமாக "கடிவாளங்களை"ப் பிடித்தான் "விபீஷணன்" முன்னால் வீசினான். தேவர்கள் வாத்தியங்களை மதுரமாய் சப்திக்கும்படி கோஷித்தார்கள். பிறகு "சுக்ரீவன்" சத்துருஞ்ஜயம்" என்கிறயானையில் ஏறினான். வானரங்கள் மனித வேஷம்பெற்று சென்றார்கள். இனிமையான சப்தம்பெற்ற வாத்தியங்களோடும் ஸைனியங்களோடும் இராமன் அயோத்தியா பட்டணத்தை அடைந்தார்.

मर्त्यास्स्वीकृतमङ्गलार्थनिचयारामस्यजग्मुःपुरः
पौरेभ्यस्सचिवेभ्यआहचरितंस्वीयंरघूणांपतिः ।
साकेतंससुहृत्समेत्यनगरंपित्र्यंनिवासाऽऽलयम्
प्राप्तोवन्दितमातृकःकपिवरंस्वीयंगृहंप्रापयत् ॥ २४३ ॥

மனிதர்கள் மங்கள திரவியங்களை எடுத்துக்கொண்டு மன்ன
னுக்கு முன்சென்றார்கள். இராமன் தன்னுடைய சரித்திரத்தை
ட்டணத்தின் ஜனங்கள் மந்திரிகள் இவர்களின் பொருட்டுக்
றினார். சிநேஹிதர்களோடு அயோத்தியை அடைந்து தகப்
னருடைய அரண்மனைக்குச் சென்று தாயார்களை வணங்கி
சுக்ரீவனைத் தனது அரண்மனையை அடைவித்தார்.

शत्रुघ्नेननियोजितःकपिपतिस्स्वैर्वानरैरानयत्
नादेयंजलमंबुधेस्ससुकृतंप्रत्यूषएवाऽऽशुतत् ।
सर्वंतत्त्वभिषेचनोचितमहासंभारमप्यानयन्
रामंतंस्वभिषेचयेत्यधिकृताऊचुर्वसिष्ठंमुनिम् ॥ २४४ ॥

சத்துருக்னனால் ஏவப்பெற்ற "சுக்ரீவன்" தன்னுடைய
வானரங்களால் நதி, ஸமுத்திரம் புண்ணிய தீர்த்தங்கள்
இவைகளின் தீர்த்தங்களை சீக்கிரமாக காலையில்தானே
கொண்டுவரச் செய்தான். அபிஷேகத்திற்குறிய பொருள்கள்
எல்லாவற்றையும் அதிகாரிகள் கொண்டுவந்தார்கள். "இராம
னுக்குப் பட்டாபிஷேகம் செய்யவேண்டும்" என்று வஸிஷ்ட
முனிவரிடம் தெரிவித்தார்கள்.



ब्रह्मज्ञस्सवसिष्ठईडितकथंसद्रत्नपीठेरघु
श्रेष्ठंसाङ्गनमासयाद्द्विजवरैस्तन्मन्त्रिणोब्राह्मणाः ।
पुण्यैर्वाभिरसेचयन्नभिमतैस्तत्शीर्षआयोजयन्
प्रादाद्यन्मनवेविधिस्स्वकुलजामूर्ध्नाकिरीटंदधुः ॥

பிரம்மஞானியான "வஸிஷ்ட முனிவர்" பிராம்மணர்களோடுகூட துதிக்கப்பெற்ற கதையை அடைந்த ஸ்ரீராமனை மனைவியோடு இரத்தின பீடத்தில் உட்காரவைத்தார். அவருடைய மந்திரிகளும் பிராம்மணர்களும் விரும்பப்பெற்ற புண்ணிய தீர்த்தங்களால் அபிஷேகம் செய்தார்கள். "பிரம்மா" "மனுவுக்கு"க்கொடுத்ததும் அவருடைய வம்சத்தின் அரசர்கள் தலையால் தரித்ததுமான "கிரீடத்தை" இராமனுடைய தலையில் சூட்டினர்கள்.

छत्रंपाण्डुरमाददाद्रिपुहरस्सुग्रीवरक्षःपती
वालंचव्यजनंददौसुरपतेर्हारंमरुन्मौक्तिकम् ।
गन्धर्वाजगुरंबरेप्रननृतुर्देवाङ्गनाराघवः
देयानिप्रददौद्विजेन्द्रततयेसंमानयन्स्वेप्सितान् ॥ २४६ ॥

"சத்ருக்னன்" வெண்குடையையும் "சுக்ரீவனும்" விபீஷணனும்" சிறிய விசிறியையும் எடுத்துக்கொண்டார்கள். இந்திரனுடைய முத்துமாலையை "வாயுபகவான்" கொடுத்தான். ஆகாயத்தில் கெந்தர்வர்கள் பாடினார்கள். தேவதாஸிகள் ஆடினர்கள். ஸ்ரீராமன் உத்தம பிராம்மணர்களின் கூட்டத்தின் பொருட்டு கொடுக்கக் கூடிய பொருள்களை தானம் செய்தார். தன்னுடைய நண்பர்களுக்கு வெகுமதி கொடுத்தார்.

भर्त्रादत्तममूल्यहारवसनंवाताऽऽत्मजायाददात्
सीतास्वप्रियपेटकायवचसापत्युः प्रहृष्टातदा ।
सर्वानादरपूर्वमप्यगमयत्स्वस्थानमभ्यर्चितान्
सुग्रीवश्चविभीषणस्स्वनगरींप्रापप्रभोराज्ञया ॥ २४७ ॥

ஸீதை புருஷனால் கொடுக்கப்பெற்ற விலையற்ற ஆடை ஆபரணங்களை புருஷனுடைய உத்திரவால் ஸந்தோஷமடைந்து தன்னுடைய அன்புக்குப் பெட்டியான ஹனுமான் பொருட்டு அப்

பொழுது கொடுத்தாள். (இராமன்) எல்லோர்களையும் அன்
போடு பூஜித்து அவர்களின் இருப்பிடம் அடைவித்தார். "சுக்ரீ
வனும்" "விபீஷணனும்" பிரபுவின் உத்திரவால் தன் நகரம்
சென்றார்கள்.

शासन्धर्मपथेनराज्यमखिलंनिर्वैरिकंराघवः
सौमित्रावनपेक्षकेसभरतंतंयौवराज्येऽकरोत् ।
श्रुत्युक्तंसकलंचकारविधिवत्सत्कर्मयज्ञाऽऽदिकम्
सर्वान्धर्मपथाध्वनीनचरितान्लोकान्तथैवाऽऽत्मवत् ॥

இராமன் இராஜ்யம் முழுவதையும் சத்துருவில்லாமல் தர்ம
மார்க்கமாக பரிபாலித்து இலக்ஷ்மணன் இளவரசு புரிவதில் பற்
றுதலற்றவனாக இருக்கும்பொழுது அதில் பரதனை அபிஷேகம்
செய்வித்து வேதத்தில் விதித்த யாகம் முதலிய நற் கர்மங்களை
விதிப்படி செய்தார். தன்னைப்போல் எல்லா ஜனங்களையும் அவ்
விதமே தர்ம வழியில் நடைபெற்றவர்களாகச் செய்தார்.

राज्यंशासतिराघवे नविधवाआसन्नचव्यालतः
भीतिर्नाऽऽमयतोनदस्युजभयंनानर्थमापुर्नराः ।
सर्वेधर्मपरायणारघुवरंवीक्ष्यापकोपामिथः
सन्तुष्टाश्चिरजीविनःफलसुमैर्युक्तालताःपादपाः ॥२४९॥

இராமன் இராஜ்ய பரிபாலனம் செய்யும்பொழுது விதவை
களும் பாம்புகளிடமிருந்தும், பிணிகளிடமிருந்தும், திருடனிட
மிருந்தும் பயமும் இருக்கவில்லை. ஜனங்கள் கஷ்டமடைய
வில்லை. எல்லோர்களும் இராமனைப் பார்த்து தர்மத்தை விரும்பி
யும் ஒருவருக்கொருவர் கோபமில்லாமலும் ஸந்தோஷமாகவும்
தீர்க்காயுளைப் பெற்று மிருந்தார்கள். கொடிகளும் மரங்களும்
பழங்களோடும் புஷ்பங்களோடும் கூடி இருந்தன.

एवंश्रीपतिरात्तराघवतनुर्धर्मान्चरन्कारयन्
लोकान्राज्यमपालयद्भुविमुदासंहर्षयन्जानकीम् ।
वर्षाणामयुतंसहस्रमपरंत्रैलोक्यगःख्यातितः
कारुण्याऽऽकृतिनासयेन सुकृतीवल्मीकजस्तापसः ॥२५०॥

இவ்விதம் இலக்ஷ்மீகாந்தன் ஸந்தோஷமாய் பூமியில் இராமாவதாரம் செய்து தான தர்மங்களைச் செய்தும் ஜனங்களை அவ்விதம் செய்வித்தும் ஸீதையை ஸந்தோஷமடைவித்தும் புகழால் மூன்று உலகங்களிலுமிருந்து பதினோராயிரம் வருஷம் 11000 இராஜ்ய பரிபாலனம் செய்தார். கருணையின் உருவமாயிருந்து வால்மீகி முனிவருக்கும் அனுக்கிரஹித்தார்.

रामाऽऽख्यानकमीप्सितार्थघटकंवक्तुश्चसंशृण्वतः
विघ्नानांशमनंसुराप्रियकरंनष्टार्थसंप्रापकम् ।
लीलांभागवतींसरोजवसतेरध्यास्पदंविश्रुताम्
योऽस्मत्कल्पलतांभुवंत्वगमयद्वल्मीकजंतन्नुमः ॥ २५१ ॥

சொல்லுகிறவர்களுக்கும் கேட்கிறவர்களுக்கும் விரும்பிய பொருளைக் கொடுக்கும் விக்கினங்களை விலக்கும் தேவர்களுக்குப் பிரீதியளிக்கும் நஷ்டமான பொருளைக் கையில் கிடைக்கவைக்கும் இராம சரித்திரமாக பிரம்மலோகத்தில் புகழ்பெற்றதும் நமக்குக் கற்பகத் தருபோன்றதுமான பகவானுடைய திருவிளையாடலை பூமியில் வரவழைத்த வால்மீகி முனிவரைத் துதிப்போம்.

मच्चित्तंनृपविष्टरंस्वधिवसन्क्रोधाऽऽदिकान्दुर्जनान्
शासन्तद्वसतीन्मुहुश्चसुजनान्धर्माऽऽदिकान्वर्धयन् ।
अक्षीणंप्रददत्सुखंनिरवधिस्यान्मेसदाराघवः
कान्ताभ्रातृहनूमदाश्रितइतिध्यायत्यजस्रंकविः ॥ २५२ ॥

"இராமன்" மனைவி ஸஹோதரர்கள் ஹனுமான் இவர்களோடுகூட என் மனமாகிற ஸிம்மாஸனத்தில் வீற்றிருந்து அவ்விடமிருக்கும் கோபம் முதலிய துர்குணமாகிற துஷ்டர்களை சிக்ஷித்தும் தர்மம் முதலிய நற்குணமாகிற நல்லோர்களை வளர்த்தும் அழிவற்ற பிரம்மானந்த சுகத்தையும் எல்லையற்ற சுகத்தையும் எப்பொழுதும் எனக்குக் கொடுத்துக்கொண்டு இருக்கவேண்டும்" என்று கவியான நூலாசிரியர் எப்பொழுதும் இராமத் தியானம் செய்கிறார்.

संरक्षत्यपिमृत्युवक्त्रपतितंदीनंनिरस्तार्थकम्
वित्तेशातनुविस्मयप्रदमहालक्ष्मींसदानेतरि ।

